# விவேகசூடாமணி

## ॥ विवेकचूडामणिः ॥

(புத்தியோகம் எனும் உரையுடன் கூடியது)

உரை ஆசிரியர்
"அண்ணா"





ஸ்ரீ ராமகிருஷ்ண மடம்
மயிலாப்பூர் :: சென்னை-4

# விவேகசூடாமணி

## ॥ विवेकचूडामणिः ॥

(புத்தியோகம் எனும் உரையுடன் கூடியது)

உரை ஆசிரியர்

"அண்ணா"




ஸ்ரீ ராமகிருஷ்ண மடம்

மயிலாப்பூர் ;: சென்னை-4.

# பொருளடக்கம்

## குறிகளின் விளக்கம்

| | |
|---|---|
| ஒ. ஒப்பிடுக | கட. உப.—கட உபநிஷத்து |
| கீ. பகவத்கீதை | ப்ர. உப.—ப்ரச்ன ,, |
| பி. சூ. பிரம்மசூத்ரம் | மு. உப.—முண்டக ,, |
| சு. சுலோகம் | மா. உப.—மாண்டூக்ய |
| யோ. சூ.—யோக சூத்ரம் | ஐ. உப.—ஐத்ரேய ,, |
| | தை. உப.—தைத்திரீய |
| ஈச. உப.—ஈசாவாஸ்ய உபநிஷத்து | சா. உப.—சாந்தோக்ய |
| | ப்ரு. உப.-ப்ருஹதாரண்யக |
| கேன. உப.—கேன உபநிஷத்து | ச்வே. உப.—ச்வேதாச்வதர |

சங்.—ஆதிசங்கராச்சாரியார்

சங். பாரதி—சிருங்ககிரி சந்திரசேகரபாரதி (விவேக சூடாமணி வியாக்கியானம்)

# முகவுரை

ஆதிசங்கரர் வேதாந்தத்தை விளக்க உபநிஷத் பாஷ்யமும் பகவத்கீதா பாஷ்யமும் பிரம்மஸூத்ர பாஷ்யமும் எழுதி ஸநாதன தர்மத்தை ஸ்தாபித்தார். பாஷ்யங்களைப் படித்து அறியத் திறமை குறைந்தவர்களுக்கும் அவகாசமில்லாதவர்களுக்கும் பயன்படும் வகையில் சிறியதும் பெரியதுமான பிரகரண கிரந்தங்கள் எனப்படும் பல நூல்களையும் அருளியுள்ளார். அவற்றுள் விவேகசூடாமணியை முதன் முதலில் எழுதியதாய்க் கூறுவர். தலையில் அணியும் இரத்தினம் சூடாமணி. அது எல்லா ஆபரணங்களிலும் சிறந்தது. ஆத்மானாத்ம விவேகத்தைப் புகட்டுவதில் இந்நூல் தலைசிறந்து விளங்குவதால் இதற்கு விவேகசூடாமணி எனும் பெயர் பொருந்துவதாயிற்று.

இதற்குச் சமீப காலத்தில் சிருங்கேரி பீடாதிபதியாயிருந்த ஸ்ரீ சந்திரசேகர பாரதீ ஸ்வாமிகள் மிகச் சிறப்பான பாஷ்யம் எழுதியிருக்கிறார்கள்.

விவேகசூடாமணியில் 580 சுலோகங்கள் இருக்கின்றன. இதில் ஸ்ரீ சங்கரர் ஆத்ம தத்துவத்தையும் அதை அறிந்துய்வதற்கு மார்க்கத்தையும் பல உதாரணங்களுடன் ஒரு சீடனுக்கு குருவானவர் போதிக்கும் பாணியில் சம்பாஷணை முறையில் தெளிவுபடுத்தி யிருக்கிறார்.

ஜீவராசிகளுக்கு மானிடப்பிறவி, முக்தியில் ஆசை, மகா புருஷர்களைச் சேர்தல் ஆகிய இம் மூன்றும் அடைதற்கரியவை. தெய்வத்தின் அருள் காரணமாகத்தான் இவற்றை அடைய இயலும். சாஸ்திரங்களைப் படித்தாலும், தேவதைகளை வழிபட்டாலும், பல விதமான கருமங்களைச் செய்தாலும்

ஆத்மாநாத்ம விவேகமில்லாமல் முக்தி கிட்டாது. ஆகையால் ஒருவன் தகுந்த குருவை யடைந்து அவருடைய உபதேசத்தால் ஈடேற வேண்டும். வேதத்தை நன்குணர்ந்தவரும் பாவமற்றவரும் ஆசை வாய்ப்பட்டு நலியாதவரும், பிரம்ம ஞானியும், காரண மேதுமின்றி ஜீவராசிகளிடம் கடல் போன்ற கருணை யுடையவரும், தன்னை வணங்கும் நல்லவர்களுக்கு உளங்கலந்த உறவினரும் எவரோ அவரே சிறந்த குரு. அப்படிப்பட்ட குருமார்கள் மனவமைதியுள்ளவர் களாகவும் வஸந்த காலத்தைப் போல் உலகிற்கு நன்மை செய்பவர்களாகவும் பயங்கரமான பிறவிக் கடலைத் தாங்கள் தாண்டியவர்களாய்ப் பிறரையும் தாண்டுவிப்பவர்களாயும் உலகில் இருக்கிறார்கள். அந்தக் காலத்தில் இருந்தார்கள், இந்தக் காலத்தில் அப்படிப்பட்ட மகான்கள் இல்லை என்று சிலர் கருதுகிறார்கள். அது தவறு. மகான்கள் எல்லாக் காலத்திலும் இருக்கிறார்கள். அவர்களைக் கண்டு கொள்ள நமக்கு அறிவும் அவாவும் இல்லாதது தான் குறை.

எல்லாவிதத்திலும் முயற்சி செய்து பிறவித் தளைகளினின்று விடுபடுவதற்கு ஒருவன் நோய் முதலியவற்றினின்று விடுபடுவதற்கு முயற்சிப்பது போல் தீவிரமாய் முயலவேண்டும். சாஸ்திரம் எல்லை யில்லாதது. அறிய வேண்டியது அதிகம். காலமோ குறைவு. இடையூறுகள் பல. எது ஸாரமாயுள்ளதோ அதை நீர் கலந்த பாலிலிருந்து பாலை மட்டும் ஹம்ஸம் கிரகிப்பது போல் கிரகிக்க வேண்டும்.

முக்திக்கு முதற்படி நிலையற்ற பொருள்களில் தீவிரமான வைராக்கியம். விஷயங்களை விஷம் போல் ஒதுக்கிப் புறக்கரணங்களையும் அகக் கரணங்களையும் பொறுமையுடன் அடக்க வேண்டும். பிறகு ஆசை

வாய்ப்பட்டுச் செய்யும் கருமங்களை யெல்லாம் துறக்க வேண்டும். அதன்பின் குருவிடமிருந்து உபதேசம் பெற்று அதைச் சிந்தித்து இடைவிடாது தியானம் பழகி ஸமாதி நிலையை அடைய வேண்டும். அதனால் அறிவாளியானவன் இங்கேயே முக்தியின்பத்தை அடைவான்.

'நான்' என்னும் உணர்விற்கு ஆதாரமானதும் இயற்கையாக என்றும் உள்ளதுமான பிரம்மம் ஒன்று இருக்கிறது. விழிப்பு கனவு உறக்கம் என்ற மூன்று நிலைகளுக்கும் ஸாக்ஷியாயிருந்து கொண்டு, அன்ன மயம், பிராணமயம், மனோமயம், விக்ஞானமயம், ஆனந்தமயம் என்ற ஐந்து கோசங்களினின்றும் வேறாக அது உளது. மூலப் பிரகிருதியினின்றும் அதன் மாறுபாடுகளினின்றும் வேறுபட்டதாகவும் பரிசுத்தமான ஞான இயல்புடையதாகவும் ஸூக்ஷமமா கவும் ஸ்தூலமாகவும் உள்ள இவ்வுலகைப் பிரகாசித் துக்கொண்டும் 'நான், நான்' என்று அனைவராலும் உணரப்படுவதாயும் புத்தியின் ஸாக்ஷிவடிவில் அது விளங்குகிறது. தன்னுடைய இந்த உண்மையான வடிவை ஒருவன் அறிந்து பாவமற்றவனாகவும் மாசற்ற வனாகவும், சாவற்றவனாகவும் ஆகிறான். இந்நிலையை உணர்வதல்லாமல் முக்திக்கு வேறுவழியில்லை.

ஜாதி, சேர்க்கை, குலம், கோத்ரம் ஆகியவற் றிற்கு அப்பாற்பட்டதும், பெயர் வடிவம், குணம், குற்றம் ஆகியவை அற்றதும், இடம், காலம், பொருள் முதலியவற்றைக் கடந்ததும் ஆகிய பிரம்மம் எதுவோ அதுவே நான் என்று புத்தியில் ஒருவன் அனுஸந்தானம் செய்யவேண்டும். உலகைப் பின்பற் றிச்செல்வதையும் நூல்களைப் பின்பற்றிச் செல்வதை யும்கூட விட்டொழித்து ஆத்மாவில் பொய்யாகக் கற் பிக்கப்பட்டுள்ள அத்தியாஸம் அனைத்தையும் ஒழிக்க

வேண்டும். உறக்கத்தாலும் உலக வியாபாரத்தாலும், சப்தம் முதலிய விஷயானுபவத்தாலும் ஏற்படும் ஆத்ம மறதிக்குச் சிறிதும் அவகாசம் கொடுக்காமல் உண்மையான ஆத்ம ஸ்வரூபத்தை இடைவிடாது சிந்தித்துத் தன்மேல் ஏற்றிக்கொண்ட வேஷத்தை நடிகன் களைவதுபோல் பொய்யுடலைத்தான் என்று எண்ணுவதை விட்டுவிட வேண்டும்.

கேட்பதைவிடச் சிந்திப்பது நூறுமடங்கு சிறந்தது. சிந்திப்பதைக் காட்டிலும் ஆத்ம தத்துவத்தை உணர்ந்து சித்தத்தில் நிலைநிறுத்துவது லக்ஷம் மடங்கு சிறந்தது. நிர்விகல்ப ஸமாதி அளவிலாச் சிறப்புடையது. எவ்வாறு தங்கமானது நன்றாய் நெருப்பில் சுத்தம் செய்யப்பட்டால் அழுக்கு நீங்கித் தனக்கியல்பான பிரகாசத்தை அடையுமோ அவ்வாறே மனதானது தியானத்தால் ஸத்துவம் ரஜஸ் தமஸ் எனும் முக்குணங்களின் அழுக்கை ஒழித்துப் பரிசுத்தமான தத்துவ நிலையை அடைகிறது. வாக்கை மனதில் ஒடுக்கி, மனதை புத்தியில் ஒடுக்கி, புத்தியை ஸாக்ஷியான கூடஸ்தனிடம் ஒடுக்கி அவனையும் குணங்களுக்கும் எண்ணங்களுக்கும் அப்பாற்பட்ட பரிபூர்ணாத்மாவில் ஒடுக்கி ஒருவன் ஒப்பற்ற சாந்தியையடைகிறான்.

பரதத்துவத்தின் அறிவு உதித்தபின் ஸத்ரூபமாயுள்ள பிரம்மத்தில் கற்பனையாகிய உலகம் இல்லவே இல்லை. கயிற்றில் தோன்றிய பாம்பு உண்மையில் முக்காலத்தும் இல்லை. இருந்தது போகவில்லை. எப்போதும் இல்லவே இல்லை. அப்படி இந்த துவைதப் பிரபஞ்சம் வெறும் மாயையே. இரண்டற்ற பிரம்மமே உண்மையில் உளது. இந்த பிரம்மத்துடன் கலந்தவன் பிரம்ம வடிவாகவே எப்பொழுதும் இருந்துகொண்டு வெளி விஷயங்களைப்

பொருட்படுத்தாதவனாகவும் உறங்குபவனைப்போலும் சிறுகுழந்தையைப்போலும் பிறர்கொடுக்கும் அன்னம் பானம் முதலிய யோக்கிய வஸ்துக்களை மட்டும் அனுபவிப்பவனாய், அளவிலாத பிறவிகளில் செய்த புண்ணியத்தின் பயனாகிய மோக்ஷ ஆனந்தத்தை எய்தியவனாய்ப் பிறவிப்பயனை அடைந்த பாக்கியவானாய், எல்லோராலும் பூஜிக்கத் தகுந்தவனாய் விளங்குவான். அவன் ஜீவன் முக்தன் எனப்படுகிறான். அவன் பணமில்லாதவனாயினும் எப்பொழுதும் ஸந்தோஷமுள்ளவன்; பிறர் துணையில்லாதவனாயினும் மிகுந்த பலமுள்ளவன்; போகங்களை அனுபவிக்காதவனாயினும் திருப்தி நிறைந்தவன்; ஒப்பற்றவனாயினும் எங்கும் ஒக்கநோக்குபவன். ஜீவாத்மாவிற்கும் பிரம்மத்திற்கும் பேதத்தையும், பிரம்மத்திற்கும் பிரபஞ்சத்திற்கும் பேதத்தையும் அவன் ஒருபொழுதும் காண்பதில்லை. அவனுக்கு முன்போல் உலகில் இன்பதுன்ப அனுபவம் கிடையாது. இருக்குமேயானால் அவன் வெளிப்போக்குடைய இந்திரியங்களுக்கு வசப்பட்டவன். பிரம்மானந்தத்தை அடைந்தவனல்லன்.

ஆத்ம ஸாக்ஷாத்கரரத்தை எய்திய சிஷ்யன் குருவிடம் பின்வருமாறு தன் அனுபவத்தைப் பற்றிக் கூறுகிறான். 'பிரம்மமும் ஆத்மாவும் ஒன்றேயாக ஆகிவிட்டபொழுது புத்தியானது காணாமற்போய் விட்டது. செயலில் முனைப்பு கரைந்து விட்டது. இது என்று நேராகக் காணப்படுவதையோ, இது அன்று என்பதையோ நான் அறியவில்லை. அது என்னவென்றோ எப்படிப்பட்டதென்றோ அறியவில்லை. அளவுகடந்த இன்பம் அங்கிலேயில் உள்ளது என்பதை மட்டும் உணர்கிறேன். அதைச் சொல்லாமல் வர்ணிக்க இயலவில்லை. மனதால் நினைப்பதற்குங் கூட முடியாது. அங்கே மனது ஸமுத்திரத்தில் விழுந்து கரைந்துபோன (மழைப்) பனிக்கட்டியின் நிலையை

அடைந்துவிட்டது. எவருடைய கடைக்கண் பார்வை யாகிற குளிர்ச்சியான சந்திரப்பிரகாசம் விழுந்ததால் பிறவியாகிற கடும் வெயிலின் சிரமம் தீர்ந்து நான் அளவுகடந்த பெருமை வாய்ந்த ஆனந்தமாகியதும் அழிவற்றதுமான ஆத்ம தத்துவத்தை அடைந்தவன் ஆனேனே அந்த குருவிற்கு நமஸ்காரம்.'

இது விவேகசூடாமணியின் ஸாரம்.

இந்நூலில் ஸம்ஸ்கிருதப் பயிற்சி அதிகமில்லாத வர்களுக்கும பயன்படும் வகையில் மூலம் நாகர எழுத்தில் மட்டுமல்லாமல் தமிழிலும் அச்சிடப்பட்டுப் பதவுரையும் குறிப்புரைகளும் கொடுக்கப்பட்டுள்ளன.

அச்சிடும்போது பிழை திருத்துவதில் உதவிய பிரம்மஸ்ரீ வழுத்தூர் ராஜகோபால சர்மா அவர் களுக்கும், அழகுபட அச்சிட்டுத் தந்த அச்சுக்கூடத் தாருக்கும், இந்நூலைப் பயன்படுத்தி என் முயற்சியை ஸார்த்தகமாக்கும் அன்பர்களுக்கும் என் நன்றி உரித்தாகும்.

ஸ்ரீ ராமகிருஷ்ண மாணவரில்லம்
மயிலாப்பூர், சென்னை-4
ஸாதாரண ஷு தைப்பொங்கல்
14—1—1971

**உரையாசிரியர்**

ओं

॥ समर्पणम् ॥

॥ स्वरूपनिरूपणहेतवे श्रीशिवानन्दगुरवे नमः ॥

॥ बुद्धियोगमुपाश्रित्य मच्चित्तः सततं भव ॥

—गीता ॥ १८-५७ ॥

ஓம்

**ஸமர்ப்பணம்**

ஸ்வரூபண-நிரூபண-ஹேதவே சிவானந்த-குரவே நம:

|| **புத்தி**யோக-முபாச்ரித்ய மச்சித்த: ஸததம் பவ ||

—கீ. 18. 57

ஓம்

**ஸமர்ப்பணம்**

ஸ்வரூப விளக்கத்திற்குக் காரணமாகிய ஸ்ரீ சிவானந்த குருவிற்கு நமஸ்காரம்

'புத்தியோகத்தைக் கைப்பற்றி எப்பொழுதும் என்னிடம் சித்தத்தை நிறுத்தியவனாக இரு

—கீ. 18. 57




श्रीः

# विवेकचूडामणिः

## मंगलाचरणम्

सर्ववेदान्त-सिद्धान्त-गोचरं तमगोचरम् ।
गोविन्दं परमानन्दं सद्गुरुं प्रणतोऽस्म्यहम् ॥ १ ॥

ஸ்ரீ:

# விவேக சூடாமணி:

## மங்களாசரணம்

ஸர்வவேதாந்த-ஸித்தாந்த-கோசரம் தமகோசரம் |
கோவிந்தம் பரமானந்தம் ஸத்குரும் ப்ரணதோ஽ஸ்ம்ய
ஹம் || 1 ||

## விவேக சூடாமணி

### மங்களாசரணம்

1. (அகோசரம்) வாக்குக்கும் மனதுக்கும் எட்டாதவரும் (ஸர்வ-வேதாந்த-ஸித்தாந்த-கோசரம்) எல்லா வேதங்களின் முடிவான சித்தாந்த வாக்கியங்களிலிருந்து தெளிந்த புத்தியால் அறியக்கூடியவரும் (பரமானந்தம்) சிறந்த ஆனந்த ரூபியும் (ஸத் குரும்) நல்ல குருவும் ஆகிய (கோவிந்தம்) கோவிந்தரை (அஹம்) நான் (ப்ரணதః அஸ்மி) வணங்குகிறேன்.

**விவேக சூடாமணி**—எப்பொருள் எத்தன்மைத் தாயினும் அப்பொருளின் மெய்ப்பொருளை ஆராய்ந்தறியும் அறிவாவது **விவேகம்**. தலையில் அணியும் ரத்னம் **சூடாமணி**. அது எல்லா

ஆபரணங்களிலும் சிறந்தது. விவேகத்தைப்புகட்டும் நூல்களுள் இது தலைசிறந்ததாய் விளங்குவதால் இதற்கு 'விவேக சூடாமணி' என்ற பெயர் பொருந்துவதாயிற்று. பிரகரண கிரந்தங்களுள் இதை முதலில் சங்கராசாரியர் எழுதியதாய்க் கூறுவர்.

**அகோசரம்**—ஒ. 'புத்திக்ராஹ்ய-மதீந்த்ரியம்' தெளிந்தபுத்தியால் அறியக் கூடியது, இந்திரியங்களுக் கெட்டாதது—கீ 6.21.

**கோவிந்தம்**—இது பகவானையும் ஸ்ரீசங்கராசாரியரின் குருவான கோவிந்த பகவத் பாதரையும் ஒருங்கே குறிப்பதாகும். குரு வணக்கமும் தெய்வ வணக்கமுமாகிய இது நூலின் முதலில் மங்களாசரணமா யமைகின்றது.

## ब्रह्मनिष्ठा-महत्त्वम्

जन्तूनां नरजन्म दुर्लभमतः पुंस्त्वं ततो विप्रता
तस्माद्वैदिक-धर्ममार्गपरता विद्वत्त्व-मस्मात्परम् ।
आत्मानात्मविवेचनं स्वनुभवो ब्रह्मात्मना संस्थिति-
र्मुक्तिर्नो शतकोटिजन्मसुकृतैः पुण्यै-र्विना लभ्यते ॥ २ ॥

### ப்ரஹ்மநிஷ்டா மஹத்வம்

ஜந்தூனும் நரஜன்மதுர்லபமதः பும்ஸ்த்வம் ததோ விப்ரதா, தஸ்மாத் வைதிக-தர்ம-மார்க்க-பரதா வித்வத்வ மஸ்மாத்பரம் | ஆத்மானாத்ம-விவேசனம் ஸ்வனுபவோ ப்ரஹ்மாத்மனு ஸம்ஸ்திதிர்-முக்திர்-நோ சதகோடி-ஜன்ம ஸுக்ருதை: புண்யைர்-விநா லப்யதே || 2 ||

### பிரம்மநிஷ்டையின் பெருமை

2. (ஜந்தூனும்) ஜீவாசிகளுக்கு (நரஜன்ம) மானிடப்பிறவி (துர்லபம்) அடைதற்கரிது ; (அதः) அதிலும் (பும்ஸ்த்வம்) ஆண் பிறவி, (ததः) அதைக்காட்டிலும்

அறிஞர்
(விப்ரதா) பிராம்மண ஜன்மம், (தஸ்மாத்) அதற்கும் மேலாக (வைதிக-தர்மமார்க்க-பரதா) வைதிக தர்ம வழியைப் பின்பற்றி நடத்தல், (அஸ்மாத் பரம்) அதற்கும் மேம்பட்டது (வித்வத்வம்) வேதத்தின் உட்பொருளை உணர்தல். (ஆத்ம-அனாத்ம-விவேசனம்) ஆத்மாவையும் அல்லாததையும் பிரித்தறியும் விவேகம் (ஸ்வ-அனுபவ:) சிறந்த அனுபவம் (ப்ரஹ்மாத்மனா-ஸம்ஸ்திதி:) ஆத்மா பிரம்மமாக நிலை பெற்றிருத்தலாகிய (முக்தி:) முக்தி—ஆகிய இவற்றை (சதகோடி ஜன்ம ஸுக்ருதை:) பலகோடிப் பிறவிகளில் செய்த (புண்யை: விநா) புண்ணியம் இல்லாமல் (நோலப்யதே) அடைய இயலாது.

**ப்ரஹ்மாத்மனா ஸம்ஸ்திதி:**—ஒ. 'ஏஷா ப்ராஹ்மீஸ்திதி: பார்த்த நைனாம் ப்ராப்ய விமுஹ்யதி'—இது பிரம்மத்துடன் ஒன்றுபட்ட நிலை. இதையடைந்தபின் ஒருவன் மோஹத்தில் அழுந்தமாட்டான். கீ 2.72

**ஆத்மானாத்ம விவேசனம்**—ஒ. க்ஷேத்ர-க்ஷேத்ரஜ்ஞயோர்-ஜ்ஞானம் யத் தத் ஜ்ஞானம் மதம் மம. கீ. 13-2.

**சதகோடிஜன்மஸுக்ருதை:**—ஒ. அநேகஜன்ம-ஸம்ஸித்த-ஸ்ததோ யாதி பராங்கதிம். கீ. 6-45.

दुर्लभं त्रयमेवैतद्देवानुग्रह-हेतुकम् ।
मनुष्यत्वं मुमुक्षुत्वं महापुरुषसंश्रयः ॥ ३ ॥

துர்லபம் த்ரயமேவைதத் தேவானுக்ரஹ-ஹேதுகம்|
மனுஷ்யத்வம் முமுக்ஷுத்வம் மஹாபுருஷஸம்ச்ரய: || 3 ||

3. (மனுஷ்யத்வம்) மனிதப் பிறவி (முமுக்ஷுத்வம்) முக்தியில் ஆசை (மஹா புருஷ ஸம்ச்ரய:) மகாபுருஷர்களை நாடி யடைதல் ஆகிய (ஏதத் த்ரயம்) இம் மூன்றும் (துர்லபம்) அடைதற்கரிது; (தேவ-

அனுக்ரஹ-ஹேதுகம் ஏவ) தெய்வத்தின் அருள் காரணமாகத்தான் அடைய இயலும்.

ஒ. மனுஷ்யாணும் ஸஹஸ்ரேஷு கச்சித் யததி ஸித்தயே |
யததாமபி ஸித்தாணும் கச்சின்மாம் வேத்தி தத்வத: ||

மனிதர்களில் ஆயிரவர்க்குள் ஒருவன் சித்தி பெற முயற்சிக்கிருன்; முயற்சி செய்யும் சித்தர்களுள் யாரோ ஒருவன் என்னை உண்மையில் உணர்கின்ருன். கீ 7.3

लब्ध्वा कथंचि-न्नरजन्म दुर्लभं
तत्रापि पुंस्त्वं श्रुतिपारदर्शनम् ।
यस्त्वात्ममुक्तौ न यतेत मूढधीः
स ह्यात्महा स्वं विनिहन्त्यसद्ग्रहात ॥ ४ ॥

லப்த்வா கதஞ்சிந்நரஜன்ம துர்லபம் தத்ராபி பும்-ஸ்த்வம் ச்ருதிபாரதர்சனம் | யஸ்த்வாத்மமுக்தௌ ந யதேத மூடதீ: ஸ ஹ்யாத்மஹா ஸ்வம் விநிஹந்த்-யஸத்க்ரஹாத் || 4 ||

4. (கதஞ்சித்) எப்படியோ (துர்லபம்) அடைதற்கரிய (நர ஜன்ம) மனிதப் பிறவியையும் (தத்ர அபி) அதிலும் (பும்ஸ்த்வம்) ஆண்மையையும் (ச்ருதி பார தர்சனம்) வேதத்தின் உட்கருத்தின் அறிவையும் (லப்த்வா) அடைந்து (ய: து) எவனொருவன் (ஆத்ம முக்தௌ) தன்னுடைய முக்தியின் பொருட்டு (ந யதேத) முயற்சி செய்ய வில்லையோ (ஸ: மூடதீ:) அந்த புத்தி மழுங்கியவன் (ஆத்மஹா) தற்கொலை செய்து கொண்டவனுகிருன்; (ஹி) ஏனெனில் (அஸத்க்ரஹாத்) பொய்யைக் கைக்கொண்டமையால் (ஸ்வம்) உண்மையாகிய தன்னை (விநிஹந்தி) அழித்து விடுகின்ருன்.

೯. எவர்கள் ஆத்மஹத்தி செய்தவர்களோ அவர்கள் அடையும் உலகங்கள் காரிருள் கவிழ்ந்த அசுர உலகங்களேயாம்.

ஈச உப 3.

இறந்துபோனவனிடத்தில் உயிருக்கு அடையாளமான உணர்ச்சி காணப்படாதது போல் அஞ்ஞானியிடம் ஆத்மா இருக்கும் அடையாளமே செயலில் காணப்படுவதில்லை.

**इतः कोन्वस्ति मूढात्मा यस्तु स्वार्थे प्रमाद्यति ।**
**दुर्लभं मानुषं देहं प्राप्य तत्रापि पौरुषम् ॥ ५ ॥**

இத: கோந்வஸ்தி மூடாத்மா யஸ்து ஸ்வார்த்தே ப்ரமாத்யதி | துர்லபம் மானுஷம் தேஹம் ப்ராப்ய தத்ராபி பௌருஷம் ||

5 ||

5. (துர்லபம்) அடைதற்கரிய (மானுஷம் தேஹம்) மனித உடலையும் (தத்ராபி) அதிலும் (பௌருஷம்) ஆண்மையையும் (ப்ராப்ய) அடைந்தும் (யஃ து) எவனொருவன் (ஸ்வார்த்தே) தனது நன்மையில் (ப்ரமாத்யதி) கவனமின்றி இருக்கின்றானோ (இத:) அவனைவிட (மூடாத்மா) முட்டாள் (கஃ நு அஸ்தி) யார் தான் இருக்க முடியும் ?

ஸ்வார்த்தே—தனது நன்மையில்—அதாவது பிறவித்துன்பத்தினின்று விடுதலையாகிய முக்தியில்.

**वदन्तु शास्त्राणि यजन्तु देवान्**
**कुर्वन्तु कर्माणि भजन्तु देवताः ।**
**आत्मैक्यबोधेन विना विमुक्ति-**
**र्न सिध्यति ब्रह्मशतान्तरेपि ॥ ६ ॥**

வதந்து சாஸ்த்ராணி யஜந்து தேவான் குர்வந்து கர்மாணி பஜந்து தேவதாஃ | ஆத்மைக்யபோதேன விநா விமுக்திர் ந ஸித்யதி ப்ரஹ்ம-சதாந்தரேபி || 6 ||

6. (சாஸ்த்ராணி) சாஸ்திரங்களை (வதந்து) பேசட்டும், (தேவான்) தேவர்களைக் குறித்து (யஜந்து) யாகங்களைச் செய்யட்டும், (கர்மாணி) கருமங்களை (குர்வந்து) செய்யட்டும், (தேவதாஃ) தேவதைகளை (பஜந்து) வழிபடட்டும்; (ஆத்ம-ஐக்ய-போதேன விநா) ஆத்மா ஒன்று என்ற அறிவின் விழிப்பில்லாமல் (ப்ரஹம-சத-அந்தரே அபி) பிரம்மாவின் நூறு வயது முடிவிலும் கூட (விமுக்திஃ) விடுதலையானது (ந ஸித்யதி) சித்திக்காது.

பிரம்ம சதம்—

ஒ. ஸஹஸ்ரயுக-பர்யந்தம் அஹர் யத் ப்ரஹ்மணோ விதுஃ |
ராத்ரிம் யுக-ஸஹஸ்ராந்தாம் தேऽஹோராத்ரவிதோ ஜனாஃ || கீ 8.17.

நமது ஒரு வருஷம் தேவர்களுக்கு ஒருநாள். அப்படி அவர்கள் வருஷத்தில் 12000 கொண்டது ஒருசதுர்யுகம். ஆயிரம் சதுர்யுகம் பிரம்மாவின் பகல்; ஆயிரம் சதுர்யுகம் இரவு. அப்படி நூறுவயது பிரம்ம சதம்.

விநாபி முக்திஃ | படந்து சாஸ்த்ராணி பா.பே.

अमृतत्वस्य नाशास्ति वित्तेनेत्येव हि श्रुतिः ।
ब्रवीति कर्मणो मुक्ते-रहेतुत्वं स्फुटं यतः ॥ ७ ॥

அம்ருதத்வஸ்ய நாசாஸ்தி வித்தேனேத்யேவ ஹி ச்ருதிஃ | ப்ரவீதி கர்மணோ முக்தே-ரஹேதுத்வம் ஸ்புடம் யதஃ || 7 ||

7. '(வித்தேன) பொருளைக் கொண்டு (அம்ருதத்வஸ்ய) சாகா நிலையாகிய மோக்ஷத்திற்கு (ந ஆசா அஸ்தி) ஆசைப்படவும் இயலாது' (இதி ஏவ) என்றே (ச்ருதிः) வேதம் (ப்ரவீதி) கூறுகிறது. (யதः) இக்காரணத்தால் (முக்தேः) முக்திக்கு (கர்மணः அஹேதுத்வம்) கர்மம் காரணமாகாது என்று தெளிவாகிறது.

ஒ. 'ஸா ஹோவாச மைத்ரேயீ யந்நு ம இயம் பகோ ஸர்வா ப்ருதிவீ வித்தேன பூர்ணா ஸ்யாத் கதம் தேனாம்ருதா-ஸ்யாமிதி। நேதி ஹோவாச யாஜ்ஞவல்க்ய: யதைவோபகரணவதாம் ஜீவிதம் ஸ்யாத் அம்ருதத்வஸ்ய து நாசாஸ்தி வித்தேனேதி'—மைத்ரேயி கூறியது:— "நாதா! செல்வத்தால் நிறைந்த இந்த பூமி எல்லாம் எனக்கிருந்தாலும் அதனால் நான் அமிருதத்வத்தை அடைவேனா?" "இல்லை தான்" என்றார் யாஜ்ஞவல்க்யர். "போகசாதனங்களுடன் வாழ்பவர்களின் வாழ்க்கை எவ்வாறுனதோ அவ்வாறுனதாகவே இருக்கும் உன் வாழ்க்கையும். செல்வத்தைக் கொண்டு அமிருதுத்வத்துக்கு ஆசைப்படவும் இயலாது —ப்ரு உப. 2.4.2.

ஒ. 'ந கர்மணா ந ப்ரஜயா தனேன த்யாகேனைகே அம்ருதத்வமானசு:—கர்மாவாலன்று, மக்களாலன்று, பொருளாலன்று, துறவாலேயே சிலர் அம்ருதத்துவத்தை அடைந்துள்ளனர்.

தை. ஆரண்யகம்.

## ज्ञानोपलब्ध्युपायः

अतो विमुक्त्यै प्रयतेत विद्वान्
संन्यस्त-बाह्यार्थ-सुखः-स्पृहः सन् ।
सन्तं महान्तं समुपेत्य देशिकं
तेनोपदिष्टार्थ-समाहितात्मा ॥ ८ ॥

**ஜ்ஞானோபலப்த்யுபாய:**

அதோ விமுக்த்யை ப்ரயதேத வித்வான் ஸந்ந்யஸ்த-பாஹ்யார்த்த-ஸுக: ஸ்ப்ருஹ: ஸன் | ஸந்தம் மஹாந்தம் ஸமுபேத்ய தேசிகம் தேனோபதிஷ்டார்த்த-ஸமாஹிதாத்மா || 8 ||

**ஞானமடைய வழி**

8. (அத:) ஆகையால் (ஸந்ந்யஸ்த-பாஹ்யார்த்த-ஸுக:ஸ்ப்ருஹ: ஸன்) வெளிப் பொருள்களிலுள்ள சுகத்தில் பற்றைத் துறந்தவனாய். (ஸந்தம் மஹாந்தம் தேசிகம்) ஸாதுவும் மகாத்மாவுமான குருவை (ஸமுபேத்ய) முறைப்படி அடைந்து (தேன) அவரால் (உபதிஷ்ட-) உபதேசிக்கப் பெற்ற (அர்த்த-ஸமாஹித-ஆத்மா) பொருளில் சித்தத்தை நிலைநிறுத்தியவனாய் (வித்வான்) அறிவாளி (விமுக்த்யை) முக்திக்காக (ப்ரயதேத) நன்முயற்சி செய்ய வேண்டும்.

குருவை முறைப்படி அடைந்து—

ஒ. தத் வித்தி ப்ரணிபாதேன பரிப்ரச்னேன ஸேவயா—பணிவாலும், பரிவுமிகுந்த கேள்வியாலும் சேவையாலும் அதை அறிக. —கீ. 4 34.

ஒ. 'ஆசார்யவான் புருஷோ வேத|' ஆசாரியனையடைந்த புருஷன் ஞானோதயம் பெறுகிறான். —சா.உப. 6.14.2.

उद्धरेदात्मनात्मानं मग्नं संसारवारिधौ ।
योगारूढत्वमासाद्य सम्यग्दर्शन-निष्ठया ॥ ९ ॥

உத்தரேதாத்மனாத்மானம் மக்னம் ஸம்ஸாரவாரிதௌ | யோகாரூடத்வமாஸாத்ய ஸம்யக்தர்சன-நிஷ்ட்டயா || 9 ||

9. (ஸம்யக்தர்சன-நிஷ்ட்டயா) தெளிவான விவேகத்துடன் இடைவிடாது ஆத்மத்தியானம் செய்து (யோகாரூடத்வம்) யோகத்தில் ஊன்றிய ஆரூடனுகும் நிலையை (ஆஸாத்ய) அடைந்து (ஸம்ஸார-வாரிதெள) பிறவிக்கடலில் (மக்னம்) முழுகியிருக்கும் (ஆத்மானம்) தன்னை (ஆத்மனு) தன்னுலேயே (உத்தரேத்) ஒருவன் உயர்த்திக்கொள்ள வேணடும்.

ஒ. உத்தரே - தாத்மனுத்மானம் நாத்மானமவஸாதயேத் | ஆத்மைவஹ்யாத்மனே பந்து-ராத்மைவ ரிபு-ராத்மன: ||—தன்னுலே தன்னை உயர்த்திக் கொள்ள வேண்டும். தன்னைத் தாழ்த்திக் கொள்ளக் கூடாது. உண்மையில் ஒருவன் தனக்குத்தானே உறவினன், தனக்குத்தானே பகைவன். —கீ. 6. 5.

**யோகாருடத்வம்:**—எப்போது ஒருவன் இந்திரியங்கள் நாடும் பொருள்களில் பற்றுக் கொள்வதில்லையோ, கர்மங்களிலும் பற்றுக் கொள்வதில்லையோ அப்போது எல்லா ஸங்கல்பங்களையும் துறந்த அவன் 'யோகாருடன்' என்று சொல்லப்படுகிருன். கீ. 6.4.

**संन्यस्य सर्वकर्माणि भवबन्धविमुक्तये ।**
**यत्यतां पण्डितै-र्धीरै-रात्माभ्यास-उपस्थितैः ॥ १० ॥**

ஸங்ந்யஸ்ய ஸர்வகர்மாணி பவபந்த-விமுக்தயே |
யத்யதாம் பணடிதைர்-தீரை-ராத்மாப்யாஸ-உபஸ்-திதைஃ || 10 ||

10. (ஸர்வகர்மாணி) எல்லாக் கருமங்களையும் துறந்து (ஆத்ம-அப்யாஸே) ஆத்மத்தியானப்பழக்கத்தில் (உபஸ்திதைஃ)இடைவிடாது நிற்கும் (தீரைஃ) புத்திமான்களாகிய (பண்டிதைஃ) வித்வான்களால் (பவபந்த-விமுக்தயே) பிறவிப்பிணியிலிருந்து விடுபடுவதற்கு (யத்யதாம்) முயற்சி செய்யப்படவேண்டும்.

**ஸர்வகர்மாணி :**—மனதின் தூய்மைக்காகச் செய்யப்படும கர்மங்கள் நீங்கலாக ஆசைவாய்ப்பட்டுச் செய்யும் கர்மங்களை யெல்லாம் (துறந்து) எனப்பொருள்.

**चित्तस्य शुद्धये कर्म न तु वस्तूपलब्धये ।**
**वस्तुसिद्धि-र्विचारेण न किंचित् कर्मकोटिभिः ॥ ११ ॥**

சித்தஸ்ய சுத்தயே கர்ம ந து வஸ்தூபலப்தயே |
வஸ்துஸித்திர்-விசாரணே ந கிஞ்சித் கர்மகோடிபி꞉ || 11 ||

11. (சித்தஸ்ய) மனதின் (சுத்தயே) தூய்மைக் காகவே (கர்ம) செயல் ; (வஸ்து-உபலப்தயே து) உண் மைப் பொருளை அடைவதற்கு (ந) அன்று. (வஸ்து-ஸித்தி꞉) உண்மைப்பொருள் சித்திப்பது (விசாரேண) ஆராய்ச்சியால் ; (கர்மகோடிபி꞉) கோடிக்கணக்கான கர்மங்களாலும் (கிஞ்சித்) சிறிதும் (ந)சித்திக்காது.

சாஸ்திரம் விதிக்கும் கர்மங்களைப் பயனில் பற்றின்றிச் செய்வதால் பாவந்தேய்ந்து மனம் பரிசுத்தமாகும். அப்போது ஆத்ம ஞானம் தானே உள்ளத்தில் எழும். ஒ. ஜ்ஞானமுத்பத்யதே பும்ஸாம் க்ஷயாத் பாபஸ்ய கர்மண꞉ ||

**सम्यग्विचारतः सिद्धा रज्जुतत्त्वावधारणा ।**
**भ्रान्त्योदित-महासर्प-भयदुःखविनाशिनी ॥ १२ ॥**

ஸம்யக்விசாரத꞉ ஸித்தா ரஜ்ஜுதத்வாவதாரணா |
ப்ராந்த்யோதித-மஹாஸர்ப்ப-பயதுஃக்கவினாசினீ || 12 ||

12. (ப்ராந்த்யா) மதிமயக்கத்தால் (உதித-) ஏற் பட்ட (மஹாஸர்ப்ப-பய-துஃக்க-) பெரிய பாம்பின் பயத்

தையும் துக்கத்தையும் (விநாசினீ) நாசம் செய்வது (ஸம்யக்-) செம்மையான (விசாரதஃ) ஆராய்ச்சியால் (ஸித்தா) சித்திக்கும் (ரஜ்ஜுதத்வ-) பழுதையின் உண்மை வடிவின் (அவதாரணு) நிச்சயம்.

**ரஜ்ஜுதத்வம்**—பழுதையைப்பழுதையாகக் காண்பது **தத்வம்**, பாம்பாகக் காண்பது மதிமயக்கத்தால் ஏற்பட்ட பிரமை.

**अर्थस्य निश्चयो दृष्टो विचारेण हितोक्तितः ।**
**न स्नानेन न दानेन प्राणायाम-शतेन वा ॥ १३ ॥**

அர்த்தஸ்ய நிச்சயோ த்ருஷ்டோ விசாரேண ஹிதோக்தித: | ந ஸ்நானேன ந தானேன ப்ராணு-யாம-சதேன வா || 13 ||

13. (அர்த்தஸ்ய) ஒரு பொருளினுடைய (நிச்சய:) உண்மை நிலை (ஹித-உக்திதஃ) உயர் நலந்தரும் உபதேசங்களைக் கொண்டு (விசாரேண) ஆராய்வதால் (த்ருஷ்டஃ) காணப்படுகிறது; (ஸ்நானேன) நீராடுவதால் (ந) அன்று; (தானேன) தானம் செய்வதால் (ந) அன்று; (பராணுயாம-சதேன வா) நூறு பிராணுயாமம் செய்வதாலு மன்று.

## अधिकारि-निरूपणम्

**अधिकारिण-माशास्ते फलसिद्धिर्विशेषतः ।**
**उपाया देशकालाद्याः सन्त्यस्मिन्सहकारिणः ॥ १४ ॥**

அதிகாரி நிரூபணம்

அதிகாரிண-மாசாஸ்தே பலஸித்திர்-விசேஷதஃ | உபாயா தேசகாலாத்யாஃ ஸந்த்யஸ்மின் ஸஹகாரிணஃ || 14 ||

14. (பலஸித்திः) பயன் கை கூடுதல் (விசேஷதः) முக்கியமாக (அதிகாரிணம்) தகுந்த அதிகாரியை (ஆசாஸ்தே) வேண்டுகிறது; (தேச-கால-ஆத்யாः) இடம் காலம் முதலிய (உபாயாः) உபாயங்கள் (அஸ்மின்) இதில் (ஸஹகாரிணः) கூடியிருந்து உதவுபவை.

அதிகாரி—ஒரு செயலைத் திறம்படச்செய்து முடிக்கும் ஆற்றலும் அறிவுமுடையவன் அதற்கு அதிகாரி. சுலோகம் 16,17 பார்க்க.

ஒ. இதனை இதனால் இவன் முடிக்கும் என்று ஆய்ந்து
அதனை அவன் கண் விடல். குறள் 517.

अतो विचारः कर्तव्यो जिज्ञासोरात्मवस्तुनः ।
समासाद्य दयासिन्धुं गुरुं ब्रह्मविदुत्तमम् ॥ ॥ १५ ॥

அதோ விசாரः கர்த்தவ்யோ-ஜிஜ்ஞாஸோ-ராத்மவஸ்துனः| ஸமாஸாத்ய தயாஸிந்தும் குரும் ப்ரஹ்மவிதுத்தமம் || 15 ||

15. (அதः)ஆகையால் (ஆத்ம வஸ்துனः) ஆன்மாவின் உண்மையைப்பற்றி (ஜிஜ்ஞாஸோः) அறிய விரும்புபவனுக்கு (கர்த்தவ்யः) செயத்தக்கது (விசாரः) ஆராய்ச்சி; (தயாஸிந்தும்) கருணைக்கடலாயும் (ப்ரஹ்ம விதுத்தமம்) சிறந்த பிரம்மஞானியாயும் உள்ள (குரும்-குருவை (ஸமாஸாத்ய) நாடிச்சரண் புகுந்து—அவருடைய உபதேசப்படி அவ்வுண்மையை ஆராய வேண்டும்.

ஒ. பரம்பொருளை உணர்ந்துய்யும் பொருட்டு ஸமித்தைக் கையுறையாய்க் கொண்டு வேதக் கேள்வியிற் சிறந்தவரும் பிரம்ம நிஷ்டருமான குருவைத் தேடி அடைய வேண்டும். —மு உப. 1.2.12

ஸ்மாரக, வாரச, தாரக, என்ற மூன்று குணங்கள் ஞான குருவிடம் காணப்படும். அவர் ஸத்தியத்தையே இடைவிடாது ஸ்மரிப்பவர்; அதற்கு விரோதமானதை விலக்குவர்; அதில் தானும் நிலை பெற்றுப் பிறரையும் நிலைபெறச் செய்பவர்.

**मेधावी पुरुषो विद्वानूहापोह-विचक्षणः ।**
**अधिकार्यात्मविद्याया-मुक्तलक्षण-लक्षितः ॥ १६ ॥**

மேதாவீ புருஷோ வித்வானூஹாபோஹ-விசக்ஷண: | அதிகார்யாத்மவித்யாயா-முக்தலக்ஷண-லக்ஷித: || 16 ||

16. (மேதாவீ) சிறந்த புத்திமான் (வித்வான்) ஞானக் கலைகளைக் கற்றவன் (ஊஹ-அபோஹ-) ஞான சாஸ்திரங்களின் கருத்தை ஊகித்தறியவும் எதிர் வாதங்களை மறுக்கவும் (விசக்ஷண:) திறமையுள்ளவன். (உக்த-லக்ஷண-லக்ஷித:) என்றிங்ஙனம் கூறப்பட்டுள்ள இலக்கணங்கள் பொருந்தியவனான (புருஷ:) மனிதனே (ஆத்ம வித்யாயாம்) ஆத்ம வித்தைக்கு (அதிகாரி) தகுதியுடையவன்.

**विवेकिनो विरक्तस्य शमादिगुणशालिनः ।**
**मुमुक्षोरेव हि ब्रह्मजिज्ञासा योग्यता मता ॥ १७ ॥**

விவேகினோ விரக்தஸ்ய சமாதிகுணசாலின: | முமுக்ஷோரேவ ஹி ப்ரஹ்மஜிஜ்ஞாஸா-யோக்யதா மதா || 17 ||

17. (விவேகின:) நித்யாநித்ய வஸ்து விவேகம் உள்ளவனுக்கும் (சம-ஆதி-குண-சாலின:) சமம் அதாவது புலனடக்கம் முதலிய குணங்கள் உள்ளவனுக்கும் (முமுக்ஷோ: ஏவ) முக்தியில் அவா உள்ளவனுக்குமே (ப்ரஹ்மஜிஜ்ஞாஸா-யோக்யதா) பிரம்மத்தைப் பற்றி விசாரிப்பதற்குத் தகுதி (மதா) ஒப்புக் கொள்ளப்படுகின்றது.

சமம் முதலிய குணங்கள்—சுலோகம்—22-27 பார்க்க.

விரக்தஸ்ய— இகத்திலும், பரத்திலும் உள்ள போக போக்கியங்களில் விருப்பற்றவனுக்கும்.

## साधन-चतुष्टयम्

**साधनान्यत्र चत्वारि कथितानि मनीषिभिः ।**
**येषु सत्स्वेव सन्निष्ठा यदभावे न सिद्ध्यति ॥ १८ ॥**

**ஸாதன சதுஷ்டயம்**

ஸாதனன்யத்ர சத்வாரி கதிதானி மனீஷிபிঃ | யேஷு ஸத்ஸ்வேவ ஸந்நிஷ்ட்டா யதபாவே ந ஸித்த்யதி || 18 ||

**நான்குவகை ஸாதனம்**

18. (அத்ர) இவ்விஷயத்தில் (ஸாதனனி) கைக் கொள்ள வேண்டிய நடைமுறைகள் (சத்வாரி) நான்கு (மனீஷிபிঃ) நிச்சய ஞான முடையவர்களால் (கதி தானி) கூறப்பட்டுள்ளன. (யேஷு) எவை (ஸத்ஸு ஏவ) இருந்தால் மட்டுமே (ஸந்நிஷ்டா) ஸத்ய வடிவான ஆத்ம நிஷ்டை இயலுமோ (யத்-அபாவே) எவை இல்லாமற் போனல் (ந ஸித்த்யதி) அந்த நிஷ்டை சித்திக்காதோ—அவையே இந் நான்கும்.

அடுத்துவரும் சுலோகங்களில் இந்நான்கு ஸாதனங்களையும் அவைகளைப்பற்றிய விளக்கங்களையும் காணலாம்.

**आदौ नित्यानित्यवस्तुविवेकः परिगण्यते ।**
**इहामुत्र-फलभोग-विराग-स्तदनन्तरम् ।**
**शमादिषट्कसम्पत्ति-र्मुमुक्षुत्व-मिति स्फुटम् ॥ १९ ॥**

ஆதௌ நித்யாநித்ய வஸ்துவிவேகঃ பரிகண்யதே| இஹாமுத்ர-பல-போகவிராகஸ்-ததனந்தரம் | சமாதி-ஷட்கஸம்பத்திர்-முமுக்ஷுத்வ-மிதி-ஸ்புடம் || 19 ||

19. (ஆதௌ) முதன்மையாக (நித்ய-அநித்ய-வஸ்து-விவேகః) நிலையுள்ளதும் நிலையற்றதுமான பொருள்களைப்பற்றிய பகுத்தறிவு, (ததனந்தரம்) அதற்கடுத்தபடியாக (இஹ-அமுத்ர-பலபோக-விராகః) இவ்வுலகிலும் மரணத்திற்குப்பின் மேலுலகங்களிலும் கர்மத்தின் பயனாக ஏற்படும் இன்ப நுகர்ச்சிகளில் பற்றின்மை; (சமாதி-ஷட்க-ஸம்பத்திః) சமம், தமம், உபரதி. திதிக்ஷை, சிரத்தை. ஸமாதானம் என்ற ஆறு வகையான ஞானச் செல்வம்; (முமுக்ஷுத்வம்) முக்தியில் அவா (இதி) என்று (ஸ்புடம்) தெளிவாக (பரிகண்யதே) எண்ணப்படுகின்றது.

**ब्रह्म सत्यं जगन्मिथ्येत्येवं रूपो विनिश्चयः ।**
**सोऽयं नित्यानित्यवस्तुविवेकः समुदाहृतः ॥ २० ॥**

ப்ரஹ்ம ஸத்யம் ஜகன்மித்யேத்யேவம் ரூபோ விநிச்சயః | ஸோऽயம் நித்யாநித்யவஸ்துவிவேகః ஸமுதாஹ்ருதః || 20 ||

20. (ப்ரஹ்ம ஸத்யம்) பிரம்மம் மெய் (ஜகத்) உலகம் (மித்யா) பொய் (ஏவம் ரூபః) என்றிவ்வடிவான (விநிச்சயః) திடமான நிச்சய புத்தி எதுவோ (ஸः அயம்) அந்த நிச்சய புத்தி (நித்ய-அநித்ய-வஸ்து-விவேகః) நித்யாநித்ய வஸ்து **விவேகம்** என்று (ஸமுதாஹ்ருதః) தெளிவாகக் கூறப்பட்டுள்ளது. (1)

**तद्वैराग्यं जिहासा या दर्शनश्रवणादिभिः ।**
**देहादिब्रह्मपर्यन्ते ह्यनित्ये भोगवस्तुनि ॥ २१ ॥**

தத்வைராக்யம் ஜிஹாஸா யா தர்சனச்ரவணாதிபிః | தேஹாதி-ப்ரஹ்மபர்யந்தே ஹ்யநித்யே போகவஸ்துனி || 21 ||

21. (தேஹாதி-ப்ரஹ்ம-பர்யந்தே) இந்த உடல் தொடங்கி பிரம்மாவின் உடல் வரை (அநித்யே) நிலையில்லாத (போக வஸ்துனி) இன்பப் பொருள்களில் (தர்சனச்ரவணுதிபிః) பார்வை கேள்வி முயலியவற்ருல் (ஜிஹாஸா) வெறுப்பு (யா) எதுவோ (தத்) அது (வைராக்யம்) **வைராக்யம்** எனப்படும்.

**தர்சனச்ரவணுதிபி:**—நேரில் பார்த்து ஆராய்தல், குருவிடமிருந்து கேட்டு அறிதல் முதலிய ஸாதனங்களால்; அல்லது கண்ணுல் பார்ப்பது காதால் கேட்பது முதலிய எல்லா இன்ப நுகர்ச்சிகளினின்றும் விலகுவதால் என்றும் கொள்ளலாம்.

தத்வைராக்யம் ஜுகுப்ஸா யா —பா. பே.

**विरज्य विषयव्राताद्दोषदृष्ट्या मुहुर्मुहुः ।**
**स्वलक्ष्ये नियतावस्था मनसः शम उच्यते ॥ २२ ॥**

விரஜ்ய விஷயவ்ராதாத்-தோஷத்ருஷ்ட்யா முஹுர் முஹுః | ஸ்வலக்ஷ்யே நியதாவஸ்தா மனஸః சம உச்யதே || 22 ||

22. (விஷய-வ்ராதாத்) விஷயக்கூட்டத்தினின்று (முஹுர் முஹுః) அடிக்கடி (தோஷத்ருஷ்ட்யா) குற்றத்தைக் காண்பதால் (விரஜ்ய) வெறுப்படைந்து (ஸ்வலக்ஷ்யே) தனது குறிக்கோளில் (மனஸః) மனதின் (நியத-அவஸ்தா) அடக்கமான நிலை (சமః) **சமம்** என்று (உச்யதே) கூறப்படுகிறது.

**விஷயம்**—இந்திரியங்கள் நாடிச் செல்லும் புலன்; சப்தம், ஸ்பர்சம், ரூபம், ரஸம், கந்தம் முதலியன. ஆத்ம ஞானத்தில் நாட்டமுடையவன் விஷயத்தை விஷமெனக்கருதி விலக்க வேண்டும்.

विषयेभ्यः परावर्त्य स्थापनं स्वस्व-गोलके ।
उभयेषा-मिन्द्रियाणां स दमः परिकीर्तितः ॥ २३ ॥

விஷயேப்ய: பராவர்த்ய ஸ்தாபனம் ஸ்வஸ்வ-கோலகே | உபயேஷா-மிந்த்ரியாணும் ஸ தம: பரி-கீர்த்தித: || 23 ||

(உபயேஷாம் இந்த்ரியாணும்) கர்மேந்திரியங்கள் ஞானேந்திரியங்கள் என்ற இருவகையான இந்திரியங்களினுடைய (விஷயேப்ய:) விஷயங்களின்றும் (பரா-வர்த்ய) அவ்விந்திரியங்களைத் திருப்பி (ஸ்வ-ஸ்வ-கோலகே) தத்தம் இருப்பிடத்தில் (ஸ்தாபனம்) நிறுத்தி வைத்தலாகிய (ஸ:) அது (தம:) தமம் என்று (பரி-கீர்த்தித:) கூறப்பெற்றுள்ளது.

கர்மேந்திரியங்கள் :—வாக்கு, பாணி (கை), பாதம் (கால்) பாயு (மலத்துவாரம்), உபஸ்தம் (குறி).

ஞானேந்திரியங்கள் :—காது, கண், நாக்கு, மூக்கு, மெய்.

बाह्यानालम्बनं वृत्ते-रेषोपरतिरुत्तमा ।
सहनं सर्वदुःखाना-मप्रतीकारपूर्वकम् ।
चिन्ताविलापरहितं सा तितिक्षा निगद्यते ॥ २४ ॥

பாஹ்யாலைம்பனம் வருத்தே-ரேஷோபரதிருத்தமா | ஸஹனம் ஸர்வது:க்காணு-மப்ரதீகாரபூர்வகம்| சிந்தாவிலாபரஹிதம் ஸா திதிக்ஷா நிகத்யதே || 24 ||

24. (வ்ருத்தே:) மனதின் வியாபாரத்திற்கு (பாஹ்ய அனுலம்பனம்) வெளியே பொருள்களிலுள்ள பிடிப்பு நீங்குதல் ஆகிய (ஏஷ:) இது (உத்தமா) சிறந்த உபரதி. (ஸர்வ-து:க்காணும்) எல்லாத்துன்பங்களையும்

(அப்ரதீகார பூர்வகம்) அவைகளைப் போக்கும் வழியைத் தேடாமலும் (சிந்தா-விலாபரஹிதம்) கவலையும் புலம்புதலும் இல்லாமலும் (ஸஹனம்) பொறுத்துக் கொள்ளுதலாகிய (ஸா) அது (திதிக்ஷா) திதிக்ஷை என்று (நிகத்யதே) கூறப்படுகிறது.

(3) 84.

शास्त्रस्य गुरुवाक्यस्य सत्यबुद्ध्यवधारणम् ।
सा श्रद्धा कथिता सद्भि-र्यया वस्तूपलभ्यते ॥ २५ ॥

சாஸ்த்ரஸ்ய குருவாக்யஸ்ய ஸத்யபுத்த்யவதாரணம் | ஸா ச்ரத்தா கதிதா ஸத்பிர்-யயா வஸ்தூபலப்யதே || 25 ||

25. (சாஸ்த்ரஸ்ய) ஞானசாஸ்திரங்களினுடைய உண்மையிலும் (குருவாக்யஸ்ய) குரு உபதேசத்தின் உண்மையிலும் (ஸத்ய-புத்தி-அவதாரணம்) இவை ஸத்தியம் என்ற புத்தி நிச்சயம் எதுவோ (ஸா) அது (ச்ரத்தா) சிரத்தை என்று (ஸத்பிः) ஸாதுக்களால் (கதிதா) கூறப்பட்டுளது. (யயா) இங்ஙனம் கூறப்பட்ட சிரத்தையால் (வஸ்து) உண்மை (உபலப்யதே) அடையப்படுகிறது.

(3) 5.

ஒ. ச்ரத்தாவான் லபதே ஜ்ஞானம் தத்பர: ஸம்யதேந்த்ரிய: | ஜ்ஞானம் லப்த்வா பராம் சாந்தி-மசிரேணாதிகச்சதி || —கீ. 4-39.

ஒ. யஸ்ய தேவே பராபக்தி: யதா தேவே ததா குரௌ |
தஸ்யைதே கதிதாஹ்யர்த்தா: ப்ரகாசந்தே மஹாத்மன: ||
ச்வே. உப.

सर्वदा स्थापनं बुद्धेः शुद्धे ब्रह्मणि सर्वदा ।
तत्समाधान-मित्युक्तं न तु चित्तस्य लालनम् ॥ २६ ॥

ஸர்வதா ஸ்தாபனம் புத்தேः சுத்தே ப்ரஹ்மணி ஸர்வதா | தத் ஸமாதான-மித்யுக்தம் ந து சித்தஸ்ய லாலனம் || 26 ||

26. (ஸர்வதா) எப்பொழுதும், (சுத்தே) பரிசுத்த பான (ப்ரஹ்மணி) பிரம்மத்தினிடம் (புத்தே꞉) புத்தியின் (ஸ்தாபனம்) ஸ்திரமான நிலை எதுவோ (தத்) அது (3)6 (ஸமாதானம்) **ஸமாதானம்** (இதி) என்று (உக்தம்) கூறப்பட்டுள்ளது. (சித்தஸ்ய) சித்தத்தினுடைய (லாலனம் து) இஷ்டத்தைப் பூர்த்தி செய்து ஸமாதானப் படுத்துதல் (ந) அன்று.

ஒ. சஞ்சலமானதும் நிலையற்றதுமான மனது எந்தெந்தக் காரணத்தைப்பற்றி வெளிப்போந்து திரியுமோ அந்தந்தக் காரணத்தினின்று இதை மீட்டு அடக்கி ஆத்மாவிலேயே வசமாக வைக்க வேண்டும். —கீ. 6.26.

**ஸம்யகாஸ்தாபனம் புத்தே꞉** பா. பே.

**अहंकारादि-देहान्तान् बन्धानज्ञानकल्पितान् ।**
**स्वस्वरूपावबोधेन मोक्तुमिच्छा मुमुक्षुता ॥ २७ ॥**

அஹங்காராதி-தேஹாந்தான் பந்தா-னஜ்ஞானகல்பிதான் | ஸ்வஸ்வரூபாவபோதேன மோக்துமிச்சா முமுக்ஷுதா || 27 ||

27. (அஹங்காராதி-) அஹங்காரம் முதல் (தேஹாந்தான்) தேகம் வரை உள்ள (பந்தான்) தளைகள் (அஜ்ஞான-கல்பிதான்) அஞ்ஞானத்தால் கல்பனை செய்யப்பட்டவை. (ஸ்வ-ஸ்வரூப-அவபோதேன) தன்னுடைய உண்மையான ரூபத்தை அறிந்து கொண்டு (4) (மோக்தும்) தளைகளினின்று விடுபடுவதற்கு (இச்சா) விரும்புதல் (முமுக்ஷுதா) "முமுக்ஷுத்வம்" எனப்படும்.

**அஹங்காராதி-தேஹாந்தான்:**—அஹங்காரம் ஆனந்தமய கோசம். அதுமுதல் விக்ஞானமயம், மனோமயம், பிராணமயம், அன்னமயம் வரை எல்லாம் தளைகளே.

मन्द-मध्यम-रूपापि वैराग्येण शमादिना ।
प्रसादेन गुरोः सेयं प्रवृद्धा सूयते फलम् ॥ २८ ॥

மந்த-மத்யம-ரூபாபி வைராக்யேண சமாதிநா | ப்ரஸாதேன குரோஃ ஸேயம் ப்ரவ்ருத்தா ஸூயதே பலம் || 28 ||

28. (மந்த-மத்யம-ரூபா அபி)—முக்தியில் அவாவாகிய முமுக்ஷுத்வம் தீவிரமாயில்லாமல்—மந்தமான வடிவிலோ, நடுத்தரமான வடிவிலோ இருப்பினும் கூட (வைராக்யேண) வைராக்கியத்துடனும் (சம-ஆதிநா) சமம் முதலிய ஆறு குணங்களுடனும் (குரோஃ ப்ரஸாதேன) குருவினுடைய அருளுடனும் கூடியிருந்தால் (ஸா இயம்) அந்த முமுக்ஷுத்வம் (ப்ரவ்ருத்தா) வளர்ச்சியடைந்து (பலம்) பயனை (ஸூயதே) உண்டு பண்ணுவதாகும்.

वैराग्यं च मुमुक्षुत्वं तीव्रं यस्य तु विद्यते ।
तस्मिन्नेवार्थवन्तः स्युः फलवन्तः शमादयः ॥ २९ ॥

வைராக்யஞ்ச முமுக்ஷுத்வம் தீவ்ரம் யஸ்ய து வித்யதே | தஸ்மின்னேவார்த்தவந்தஃ ஸ்யுஃ பலவந்தஃ சமாதயஃ || 29 ||

29. (வைராக்யஞ்ச முமுக்ஷுத்வம்) வைராக்கியமும் முமுக்ஷுத்வமும் (யஸ்ய) எவனுக்கு (தீவ்ரம் து) தீவிரமாக (வித்யதே) இருக்கிறதோ (தஸ்மின் ஏவ) அவனிடத்தில்தான் (சம-ஆதயஃ) சமம் முதலிய குணங்கள் (அர்த்தவந்தஃ) அனுஷ்டிக்கப்பட்டு அர்த்தமுடையனவாகவும் (பலவந்தஃ) பயனை அளிப்பனவாகவும் (ஸ்யுஃ) ஆகின்றன.

தீவ்ரவைராக்யம்—ஒ. 'காகஸ்ய விஷ்டாவ-தஸஹ்யபுத்திர் போக்யேஷு ஸா தீவ்ர-விரக்தி-ரிஷ்யதே|' காக்கையின் மலத்தைப்

போல் போக்கியப் பொருள்களில் சகிக்க முடியாத வெறுப்பு தீவ்ர வைராக்கியமெனப்படும்.

—ஸர்வவேதாந்த ஸித்தாந்த ஸாரஸங்க்ரஹம்.

एतयोर्मन्दता यत्र विरक्तत्व-मुमुक्षयोः ।
मरौ सलिलवत्तत्र शमादे-र्भानमात्रता ॥ ३० ॥

ஏதயோர்-மந்ததா யத்ர விரக்தத்வ-முமுக்ஷயோ: |
மரௌ ஸலிலவத் தத்ர சமாதேர்-பான-மாத்ரதா || 30 ||

30. (விரக்தத்வ-முமுக்ஷயோ:) வைராக்கியம் முமுக்ஷுத்வம் ஆகிய (ஏதயோ:) இவைகளுடைய (மந்ததா) சோம்பிய நிலை (யத்ர) எங்குளதோ (தத்ர) அங்கு (மரௌ) பாலைவனத்தில் (ஸலிலவத்) கானல் நீர்த் தோற்றம் போல் (சம-ஆதே:) சமம் முதலியனவற்றின் (பான-மாத்ரதா) தோற்றம் மட்டுந்தானிருக்கும்.

ஒ. 'அபானே ந பரம் ப்ரேம பானே ந விஷயே ஸ்ப்ருஹா |' ஆத்மாவின் பரமானந்த ரூபம் விளங்காவிட்டால் அதில் சிறந்த அன்பு உண்டாகாது; விளங்கிவிட்டால் விஷயங்களில் விருப்பமுண்டாகாது.

—வித்யாரண்யர்—பஞ்சதசீ—1.11

பானமாத்ரதா:—பாஸமாத்ரதா. —பா. பே.

मोक्षकारण-सामग्र्यां भक्तिरेव गरीयसी ।
स्वस्वरूपानुसन्धानं भक्तिरित्यभिधीयते ॥ ३१ ॥

மோக்ஷ-காரண-ஸாமக்ர்யாம் பக்திரேவ கரீயஸீ |
ஸ்வ-ஸ்வரூபானுஸந்தானம் பக்திரித்யபிதீயதே || 31 ||

(மோக்ஷ-காரண-ஸாமக்ர்யாம்) மோக்ஷத்திற்குக் காரணமாகும் ஸாதனங்களுள் (பக்தி: ஏவ) பக்தியே (கரீயஸீ) சிறந்தது. (ஸ்வ-ஸ்வரூப-அனுஸந்தானம்)

தன்னுடைய உண்மையான ஸ்வரூபத்தைத் தொடர்ந்து சிந்தித்தலே (பக்திः இதி) பக்தி என்று (அபிதீய தே) கூறப்படுகிறது.

பக்திசாஸ்திரம் பகவானிடத்தில் செய்யும் அன்பை பக்தி எனக் கூறும். அத்வைத சாஸ்திரம் ஆத்மானுஸந்தானத்தை பக்தியெனக் கூறுகிறது. இரண்டுக்கும் முரண்பாடில்லை, உள்ளத்திலுறையும் ஆத்மாவே பகவானுவதால்.

ஒ. 'க்ஷேத்ரஜ்ஞஞ்சாபி மாம் வித்தி ஸர்வ க்ஷேத்ரேஷு பாரத' பாரதா! எல்லா உடல்களிலும் என்னையே ஆன்மாவாக அறிவாயாக. கீ 13.2.

स्वात्मतत्त्वानुसन्धानं भक्तिरित्यपरे जगुः ।
उक्तसाधन-सम्पन्न-स्तत्त्वजिज्ञासु-रात्मनः ।
उपसीदेद्गुरुं प्राज्ञं यस्माद्बन्ध-विमोक्षणम् ॥ ३२ ॥

ஸ்வாத்ம-தத்வானு ஸந்தானம் பக்திரித்யபரேஜகுः|
உக்த-ஸாதன-ஸம்பன்னஸ்-தத்வஜிஜ்ஞாஸுராத்மனः|
உபஸீதேத் குரும் ப்ராஜ்ஞம் யஸ்மாத் பந்த-விமோக்ஷணம் || 32 ||

32. (ஸ்வாத்ம-தத்வ-அனுஸந்தானம்) ஆத்மாவின் தத்துவத்தைத் தொடர்ந்து சோதித்துணர்தல் (பக்திः இதி) பக்தி என்று (அபரே) வேறு சிலர் (ஜகுः) கூறுகிறார்கள். (உக்த-ஸாதன-ஸம்பன்னः) மேலே கூறப்பட்ட ஸாதனங்களுடன் கூடியவனும் (ஆத்மனः) ஆத்மாவின் (தத்வ-ஜிஜ்ஞாஸுः) தத்துவத்தை அறிவதில் அவாவுள்ளவனுமாயிருப்பவன் (யஸ்மாத்) எவரிடமிருந்து (பவபந்த-விமோக்ஷணம்) பிறவித் தளைகளினின்று விடுதலை கிட்டுமோ அப்படிப்பட்ட (ப்ராஜ்ஞம்) அறிவிற்சிறந்த (குரும்) குருவை (உபஸீதேத்) நாடியடைதல் வேண்டும்.

**ப்ராஜ்ஞும்**—ஓ. எவன் எல்லா இடத்திலும் பற்றில்லாதவனுய் அந்தந்த நன்மைதீமைகளையடைந்து மகிழ்ச்சியால் பூரிப்பதில்லை யோ, துக்கத்தால் மனங் குன்றுவதில்லையோ, அவனுடைய **பிரக்ஞை** அல்லது ஞானம் தான் உறுதியாய் நிலை பெற்றதாகும். அவன் 'ஸ்திதப்ரக்ஞன்' எனப்படுவான். கீ 2.57.

**உபஸீதேத்**—ஓ. கருமத்தாலடையக் கூடிய உலகங்களைப் பரீக்ஷித்து பிராம்மணனுனவன், செயலற்ற பரம்பொருள் ஒரு செயலாலும் அடைதற்கரிய தென்று கண்டு வைராக்கியத்தை அடைய வேண்டும். பின்பு அவன் அப்பரம்பொருளை உணர்ந் துய்யும் பொருட்டு ஸமித்தைக் கையுறையாய்க் கொண்டு வேதக் கேள்வியிற் சிறந்தவரும் பிரம்ம நிஷ்டருமான குருவைத் தேடி யடைய வேண்டும்.

மு. உப. 2.12.

**ஸ்வாத்ம-தத்வானுஸந்தானம்:**—ஓ. பக்தியால் ஆத்மாவாகிய நான் எவன், எத்தன்மையோன், என்று என்னை உண்மையில் உணர்கிறுன். கீ 18.55.

## ॥ गुरुलक्षणम् ॥

श्रोत्रियोऽवृजिनोऽकामहतो यो ब्रह्मवित्तमः ।
ब्रह्मण्युपरतः शान्तो निरिन्धन इवानलः ।
अहेतुक-दयासिन्धु-र्बन्धुरानमतां सताम् ॥ ३३ ॥

### குருலக்ஷணம்

ச்ரோத்ரியோ ऽவ்ருஜினோ ऽகாமஹதோ யோ ப்ரஹ்மவித்தமः | ப்ரஹ்மண்யுபரதः சாந்தோ நிரிந்தன இவானலः | அஹேதுக-தயாஸிந்துர்-பந்துராநமதாம் ஸதாம் || 33 ||

### குருவின் அடையாளங்கள்

33. (ச்ரோத்ரியః) வேதத்தை நன்கு கற்றுணர்ந்தவரும் (அவ்ருஜினః) பாவமற்றவரும் (அகாமஹதః) ஆசைவாய்ப்பட்டு அழியாதவரும் (ப்ரஹ்மவித்தமః) பிரம்ம ஞானிகளில் சிறந்தவரும், (ப்ரஹ்மணி உபரதః) பிரம்ம நிஷ்டையில் ஒடுங்கி நிற்பவரும் (நிரிந்தன இவ அனலః) விறகில்லாத நெருப்புப்போல் (சாந்தః) அமைதியுள்ளவரும் (அஹேதுக-தயாஸிந்துః) காரணமேதுமின்றிக் கடல்போல் கருணையுள்ளவரும் (ஆநமதாம்) தன்னை வணங்கும் (ஸதாம்) நல்லவர்களுக்கு (பந்துः) உறவினரும் (யः) எவரோ—அவரே சிறந்த குரு.

அகாமஹத:—தைத்திரீய உபநிஷத்தில் பிரம்மானந்தவல்லியில் படிப்படியாக ஆனந்தத்தின் உயர்வை வர்ணிக்கையில் ஒவ்வொரு நிலையிலும் உள்ள ஆனந்தம் 'ச்ரோத்ரியஸ்ய ச அகாமஹதஸ்ய', கேள்விகளில் சிறந்தவனாகவும் மனித ஆசைகளில் மடியாதவனாகவும் உள்ளவனுக்குக் கிடைக்கின்றது எனத் திருப்பித் திருப்பி கூறப்படுகிறது.

நிரிந்தன இவானல:—ஒ. நிஷ்கலம் நிஷ்க்ரியம் சாந்தம் நிரவத்யம் நிரஞ்ஜனம் | அம்ருதஸ்ய பரம் ஸேதும் தக்தேந்தனமிவானலம்|

—ச்வே. உப. 6.19

तमाराध्य गुरुं भक्त्या प्रह्वप्रश्रय-सेवनैः ।
प्रसन्नं तमनुप्राप्य पृच्छेज्ज्ञातव्य-मात्मनः ॥ ३४ ॥

தமாராத்ய குரும் பக்த்யா ப்ரஹ்வ-ப்ரச்ரய-ஸேவனைः | ப்ரஸன்னம் தமனுப்ராப்ய ப்ருச்சேஜ்ஜ்ஞாதவ்யமாத்மனः || 34 ||

34. (தம்) அந்த (குரும்) குருவை (பக்த்யா) பக்தியுடனும் (ப்ரஹ்வ-ப்ரச்ரய-ஸேவனைः) நமஸ்காரம், அடக்

கம், ஸேவை முதலியவற்றுடனும் (ஆராத்ய) பூஜித்து (ப்ரஸன்னம்) ஸந்தோஷமாயிருக்கையில் (தம்) அவரை (அனுப்ராப்ய) அண்டி (ஆத்மனঃ) தனக்கு (ஜ்ஞாதவ்யம்) அறிந்து கொள்ள வேண்டியதை (ப்ருச்சேத்) கேட்டுக் கொள்ளவேண்டும்.

ஒ. தத்வித்தி ப்ரணிபாதேன பரிப்ரச்னேன ஸேவயா ||
கீ. 4.34

**स्वामिन्नमस्ते नतलोकबन्धो कारुण्यसिन्धो पतितं भवाब्धौ ।**
**मामुद्धरात्मीय-कटाक्ष-दृष्टया ऋज्व्यातिकारुण्य-**
**सुधाभिवृष्टया ॥ ३५ ॥**

ஸ்வாமிந் நமஸ்தே நதலோகபந்தோ காருண்ய-ஸிந்தோ பதிதம் பவாப்தௌ | மாமுத்த-ராத்மீய-கடாக்ஷ-த்ருஷ்ட்யா ருஜ்வ்யாதி-காருண்ய-ஸுதாபி வ்ருஷ்ட்யா || 35 |

35. (ஸ்வாமின்) ஆண்டவனே! (நமஸ்தே) உமக்கு நமஸ்காரம். (நத-லோக-பந்தோ) வணங்கும் ஜனங்களுக்கு உண்மை உறவினரே! (காருண்ய-ஸிந்தோ), கருணைக்கடலே! (பவாப்தௌ) பிறவிக் கடலில் (பதிதம்) வீழ்ந்துள்ள (மாம்) என்னை (ருஜ்வ்யா) களங்கமற்றதும் (ஸுதாபிவ்ருஷ்ட்யா) அமுதத்தைப் பொழிவதுமான (ஆத்மீய-கடாக்ஷ-த்ருஷ்ட்யா) உம்முடைய கடைக்கண் பார்வையால் (உத்தர) கரையேற்றிவிடும்.

**दुर्वारसंसारदवाग्नितप्तं दोधूयमानं दुरदृष्टवातैः ।**
**भीतं प्रपन्नं परिपाहि मृत्योः शरण्यमन्यद्यदहं न**
**जाने ॥ ३६ ॥**



துர்வாரஸம்ஸார-தவாக்னிதப்தம் தோ தூயமானம் துரத்ருஷ்டவாதைஃ | பீதம் ப்ரபன்னம் பரிபாஹி ம்ருத்யோஃ சரண்ய-மன்யத்-யதஹம் ந ஜானே || 36 ||

36. (துர்வார) தடுக்க முடியாத (ஸம்ஸார-தவாக்னி) பிறவித்துன்பமாகிய காட்டுத்தீயால் (தப்தம்) பொசுக்கப்பட்டவனும் (துரத்ருஷ்ட-வாதைஃ) துரதிருஷ்டமாகிய காற்ருல் (தோதூயமானம்) அலைக்கப்பட்டவனும் (பீதம்) அதனுல் பயந்தவனும் (ப்ரபன்னம்) தங்களைச் சரணடைந்தவனும் ஆகிய அடியேனை (அன்யத்) வேறு (சரண்யம்) புகலிடம் (யத் அஹம் ந ஜானே) நான் அறியாத காரணத்தால்—(ம்ருத்யோஃ) சாவினின்று (பரிபாஹி) காத்தருள்வீராக.

அக்ஞானத்தால் ஆத்மநாசமேற்படுவதால் அக்ஞானம் தான் ம்ருத்யு.

சரண்ய-மன்யம் —பா.பே.

शान्ता महान्तो निवसन्ति सन्तो वसन्तवल्लोकहितं चरन्तः ।
तीर्णाः स्वयं भीमभवार्णवं जना-नहेतुनान्यानपि तारयन्तः
॥ ३७ ॥

சாந்தா மஹாந்தோ நிவஸந்தி ஸந்தோ வஸந்தவல் லோகஹிதம் சரந்தஃ | தீர்ணுஃ ஸ்வயம் பீமபவார்ணவம் ஜனு-னஹேதுனுன்யானபி தாரயந்தஃ || 37 ||

37. (சாந்தாஃ) மனவமைதியுள்ளவர்களும் (மஹாந்தஃ) பெரியோர்களும் (வஸந்தவத்) வஸந்தகாலத்தைபோல் (லோகஹிதம்) உலகிற்கு நன்மையை (சரந்தஃ) செய்பவர்களும் (பீமபவார்ணவம்) பயங்கரமான பிறவிக்கடலை, (ஸ்வயம்) தாங்கள் (தீர்ணுஃ) தாண்டியவர்களாய், (அன்யான் ஜனுன்) பிற மனிதர்களை (அஹேதுனு) காரணத்தை வேண்டாமல்

(தாரயந்த:) தாண்டுவிப்பவர்களும் ஆன (ஸந்த:) ஸாதுக்கள் (நிவஸந்தி) உலகில் வசிக்கிறார்கள்.

அந்தக் காலத்தில் இருந்தார்கள், இந்தக் காலத்தில் அப்படிப்பட்ட மகான்கள் இல்லை என்று சிலர் எண்ணுகிறார்கள். அது தவறு. மகான்கள் எல்லாக் காலத்திலும் இருக்கிறார்கள். அவர்களைக் கண்டுகொள்ள நமக்கு அறிவும் அவாவும் இல்லாததுதான் குறை.

अयं स्वभावः स्वत एव यत्पर-
श्रमापनोदप्रवणं महात्मनाम् ।
सुधांशुरेष स्वयमर्ककर्कश-
प्रभाभितप्ता-मवति क्षितिं किल ॥ ३८ ॥

அயம் ஸ்வபாவ: ஸ்வத ஏவ யத்பரச்ரமாபனோத-ப்ரவணம் மஹாத்மனும்| ஸுதாம்சுரேஷ ஸ்வயமர்க்க-கர்க்கச-ப்ரபாபிதப்தா-மவதி க்ஷிதிம் கில || 38 ||

38. (மஹாத்மனும்) மஹாத்மாக்களுக்கு (ஸ்வத: ஏவ) தாங்களாகவே (பர-ச்ரம-அபனோத-ப்ரவணம்) பிறருடைய துன்பத்தைப் போக்குவதற்கு முயற்சித்தல் ஆகிய (யத்) எது உண்டோ (அயம்) அது (ஸ்வபாவ:) இயற்கை. (அர்க்க-கர்க்கச-) சூரியனுடைய கடுமையான (ப்ரபா-அபிதப்தாம்) வெயிலால் பொசுக்கப்பட்ட (க்ஷிதிம்) பூமியை (ஏஷ:) இந்த (ஸுதாம்சு:) அமிர்தகிரணம் படைத்த சந்திரன் (ஸ்வயம்) தானகவே (அவதி கில) காக்கவில்லையா ?

ब्रह्मानन्द-रसानुभूति-कलितैः पूतैः सुशीतै-र्युतै-
र्युष्मद्वाक्कलशोज्झितैः श्रुतिसुखै-र्वाक्यामृतैः सेचय ।
सन्तप्तं भवताप-दाव-दहन-ज्वालाभिरेनं प्रभो
धन्यास्ते भवदीक्षण-क्षणगतेः पात्रीकृताः स्वीकृताः ॥३९॥

ப்ரஹ்மானந்த-ரஸானுபூதி-கலிதைஃ பூதைஃ ஸுசீ-தைர்-யுதைர்-யுஷ்மத்-வாக்கலசோஜ்ஜிதைஃ ச்ருதிஸு-கைர்-வாக்யாம்ருதைஃ ஸேசய | ஸந்தப்தம் பவதாப-தாவ-தஹன-ஜ்வாலாபிரேனம் ப்ரபோ தன்யாஸ்தே பவதீக்ஷண-க்ஷணகதேஃ பாத்ரீக்ருதாஃ ஸ்வீக்ருதாஃ ||39||

39. (ப்ரபோ) பிரபுவே ! (ப்ரஹ்மானந்தரஸானுபூதி கலிதைஃ) பிரம்மானந்த ரஸத்தை யனுபவித்து (பூதைஃ) பரிசுத்தமானதும் (ஸுசீதைஃ) மிகக்குளிர்ச்சியானதும் (யுஷ்மத்)தங்களுடைய (வாக்-கலச-உஜ்ஜிதைஃ) வாயாகிற கலசத்திலிருந்து பெருகுவதும் (ச்ருதிஸுகைஃ) கேட்பதற்கினியதும் ஆகிய (வாக்யாம்ருதைஃ) பேச்செனும் அமுதத்தால் (பவதாப-) பிறவித் துன்பமாகிற (தாவ-தஹன-) காட்டுத்தீயின் (ஜ்வாலாபிஃ) ஜ்வாலைகளால் (ஸந்தப்தம்) பொசுக்கப்பட்ட (ஏனம்) இவனை (ஸேசய) குளிப்பாட்டுங்கள். (பவத்-) தங்களுடைய (ஈக்ஷண-) பார்வை (க்ஷணகதேஃ) ஒரு விநாடி விழுவதற்கு (பாத்ரீக்ருதாஃ) தகுதியுடையவர்களாய்ச் செய்யப்பட்டு (ஸ்வீக்ருதாஃ) தங்களால் ஏற்றுக்கொள்ளப்பட்ட (தே) அவர்களே (தன்யாஃ) பாக்கிய சாலிகள்.

ஸுசீதை: ஸிதை. —பா. பே.

कथं तरेयं भवसिन्धु-मेतं का वा गतिर्मे कतमोऽस्त्युपायः ।
जाने न किंचित्कृपयाव मां प्रभो संसारदुःखक्षतिमातनुष्व
॥ ४० ॥

கதம் தரேயம் பவஸிந்து-மேதம் கா வா கதிர்-மே கதமோऽஸ்த்யுபாயஃ | ஜானே ந கிஞ்சித் க்ருபயாவ மாம் ப்ரபோ ஸம்ஸாரதுஃக்கக்ஷதி-மாதனுஷ்வ || 40 ||

40. (பவஸிந்தும் ஏதம்) பிறவிக்கடலாகிய இதை (கதம்) எப்படி (தரேயம்) நான் கடப்பேன் ? (மே)

எனக்கு (கா வா கதிః) செல்லும் வழி எது ? (உபாயః) நான் கைக்கொள்ள வேண்டிய உபாயம் (கதமః அஸ்தி) எத்தகையதாகும் ? (கிஞ்சித்) ஒரு சிறிதும் (ந ஜானே) நான் அறியமாட்டேன், (ப்ரபோ) பிரபுவே, (மாம்) என்னை (க்ருபயா) கருணையால் (அவ) காத்தருளும். (ஸம்ஸாரதுக்கக்ஷதிம்) பிறவித்துன்பத்தை யொழிக்கும் வழியில் (ஆதனுஷ்வ) என்னைக் கூட்டி வைத்தருளுங்கள்.

உபாய:—பல சாஸ்திரங்கள் பல வேறு வழிகளைக் கூறுகின்றன. எனக்குத் தகுதியானது எது ? ஒரு நோயாளிக்குத் தகுந்த மருந்து எது என்று வைத்தியர் கூறுவதுபோல் பிறவிப்பிணி தீரும் வழியைக் கூறியருளுதல் வேண்டும்.

க்ருபயாவ மாம் போ: —பா. பே.

## उपदेशविधिः ॥

तथा वदन्तं शरणागतं स्वं संसारदावानल-ताप-तप्तम् ।
निरीक्ष्य कारुण्य-रसार्द्र-दृष्ट्या-दद्यादभीतिं सहसा महात्मा
॥ ४१ ॥

### உபதேச விதி ః

ததா வதந்தம் சரணாகதம் ஸ்வம் ஸம்ஸார-தாவானல-தாப-தப்தம் | நிரீக்ஷ்ய காருண்ய-ரஸார்த்ர-த்ருஷ்ட்யா தத்யா-தபீதிம் ஸஹஸா மஹாத்மா || 41 ||

### உபதேச முறை

41. (ததா) அவ்வாறு (வதந்தம்) பேசுபவனும் (ஸ்வம்) தம்மை (சரணாகதம்) சரணமடைந்தவனும் (ஸம்ஸார-தாவானல-தாப-தப்தம்) காட்டுத்தீபோன்ற

பிறவித் துன்பத்தால் பொசுக்கப்பட்டவனுமாகிய அவனை (காருண்ய-ரஸ-ஆர்த்ர-த்ருஷ்ட்யா) கருணை ரஸத்தின் கசிவுடன் கூடிய பார்வையால் (நிரீக்ஷ்ய) உற்று நோக்கி (ஸஹஸா) விரைவில் (அபீதிம்) பயமின்மையை (தத்யாத்) அளிப்பார் (மஹாத்மா) மஹாத்மாவாகிய குரு.

ஒ. ஸக்ருதேவ ப்ரபன்னய தவாஸ்மீதி ச யாசதே |

அபயம் ஸர்வபூதேப்யோ ததாம்யேதத் வ்ரதம் மம ||

நான் உன்னுடையவன் என்று ஒருவன் ஒருமுறை என்னைச் சரணடைந்தால் எல்லாப் பிராணிகளிடத்திருந்தும் நான் அவனுக்கு அபயம் அளிப்பேன். இது என் விரதம்.

—ஸ்ரீராமர்—வால்மீகி ராமாயணம் 6.18.33.

**विद्वान् स तस्मा उपसत्तिमीयुषे मुमुक्षवे साधु यथोक्तकारिणे ।**
**प्रशान्तचित्ताय शमान्विताय तत्त्वोपदेशं कृपयैव कुर्यात् ॥४२॥**

வித்வான் ஸ தஸ்மா உபஸத்தி-மீயுஷே முமுக்ஷவே ஸாது யதோக்த-காரிணே | ப்ரசாந்தசித்தாய சமான்விதாய தத்வோபதேசம் க்ருபயைவ குர்யாத் ||42||

42. (ஸஃ வித்வான்) அந்த ஞானி (உபஸத்திம் ஈயுஷே) பாதுகாப்பை விரும்புபவனும் (முமுக்ஷவே) மோக்ஷத்தில் நாட்டமுள்ளவனும் (ஸாது யதோக்த காரிணே) நல்லமுறையில் சொன்னதைச் செய்பவனும் (ப்ரசாந்த சித்தாய) அடங்கிய மனமுடையவனும் (சமான்விதாய) சமம் முதலிய நியமங்களை உடையவனும் ஆகிய (தஸ்மை) அவனுக்கு (தத்வ உபதேசம்) தத்துவ உபதேசத்தை (க்ருபயா ஏவ) கருணையாலேயே (குர்யாத்) செய்வார்.

ஒ. தஸ்மை ஸ வித்வானுபஸன்னய ஸம்யக் ப்ரசாந்த சித்தாய சமான்விதாய| யேனக்ஷரம் புருஷம் வேத ஸத்யம் ப்ரோவாச தாம் தத்வதோ ப்ரஹ்மவித்யாம் || —மு. உப. 1.2.13.

मा भैष्ट विद्वंस्तव नास्त्यपायः संसारसिन्धोस्तरणेऽस्त्युपायः ।
येनैव याता यतयोऽस्य पारं तमेव मार्गं तव निर्दिशामि ॥४३॥

மா பைஷ்ட வித்வம்ஸ்தவ நாஸ்த்யபாயஃ ஸம்ஸார ஸிந்தோஸ்தரணேऽஸ்த்யுபாயஃ | யேனைவ யாதா யதயோऽஸ்ய பாரம் தமேவ மார்க்கம் தவ நிர்திசாமி || 43 ||

43. (வித்வன்) கற்றுணர்ந்தவனே ! (மா பைஷ்ட) பயப்படாதே. (தவ) உனக்கு (அபாயஃ) அழிவு (நாஸ்தி) இல்லை. (ஸம்ஸார-ஸிந்தோஃ) பிறவிக்கடலை (தரணே) கடப்பதற்கு (உபாயஃ) வழி (அஸ்தி) உளது, (யதயஃ) முனிவர்கள் (யேன ஏவ) எதனால் (அஸ்ய பாரம்) இதன் அக்கரையை (யாதாஃ) அடைந்தார்களோ (தம்) அந்த (மார்க்கம் ஏவ) வழியையே (தவ) உனக்கு (நிர்திசாமி) காட்டித்தருகிறேன்.

**பயப்படாதே**—ஒ. 'ந ஹி கல்யாணக்ருத் கச்சித் துர்க்கதிம் தாத கச்சதி |' நல்லதைச் செய்பவன் எவனும் ஒரு பொழுதும் கெட்ட நிலையை அடைய மாட்டான் என்பது நிச்சயம். கீ 6. 40.

अस्त्युपायो महान् कश्चित् संसारभय-नाशनः ।
तेन तीर्त्वा भवाम्भोधिं परमानन्दमाप्स्यसि ॥ ४४ ॥

அஸ்த்யுபாயோ மஹான் கச்சித் ஸம்ஸாரபய-நாசனஃ | தேன தீர்த்வா பவாம்போதிம் பரமானந்த-மாப்ஸ்யஸி || 44 ||

44. (மஹான் கச்சித்) சிறந்ததொரு (உபாயஃ) வழி (ஸம்ஸாரபய-நாசனஃ) ஸம்ஸார பயத்தைப் போக்குவது (அஸ்தி) உளது. (தேன) அதனால் (பவாம் போதிம்) பிறவிக்கடலை (தீர்த்வா) கடந்து (பரமானந்தம்) உயர்ந்த ஆனந்தத்தை (ஆப்ஸ்யஸி) அடைவாய்.

**वेदान्तार्थ-विचारेण जायते ज्ञानमुत्तमम् ।**

**तेनात्यन्तिक-संसार-दुःखनाशो भवत्यनु ॥ ४५ ॥**

வேதாந்தார்த்த-விசாரேண ஜாயதே ஜ்ஞானமுத்தமம் | தேனுத்யந்திக-ஸம்ஸார-து:க்கநாசோ பவத்யனு || 45 ||

45. (வேதாந்த-அர்த்த-விசாரணே) உபநிஷத் வாக்கியங்களின் அர்த்தத்தை ஆராய்வதால் (உத்தமம்) சிறந்த (ஞானம்) அறிவு (ஜாயதே) பிறக்கிறது. (தேன அனு) அதனுடைய தொடர்ச்சியாக (ஆத்யந்திக-ஸம்ஸார-துக்க நாச:) ஸம்ஸார துக்கத்திற்கு முற்றிலும் அழிவானது (பவதி) ஏற்படுகின்றது.

**श्रद्धाभक्तिध्यानयोगान्मुमुक्षोर्मुक्तेर्हेतून् वक्ति साक्षाच्छ्रुतेर्गीः ।**

**यो वा एतेष्वेव तिष्ठत्यमुष्य मोक्षोऽविद्याकल्पिताद्देहबन्धात् ॥ ४६ ॥**

ச்ரத்தா - பக்தி - த்யான - யோகான் முமுக்ஷோர்-முக்தேர்-ஹேதூன் வக்தி ஸாக்ஷாச்ச்ருதேர் கீ: | யோ வா ஏதேஷ்வேவ திஷ்டத்யமுஷ்ய மோக்ஷோऽவித்யா-கல்பிதாத்தேஹபந்தாத் || 46 ||

46. (ச்ரத்தா-பக்தி-த்யான-யோகான்) சிரத்தையும் பக்தியும் தியான யோகமும் (முமுக்ஷோ:) வீட்டை விரும்புகிறவனுக்கு (முக்தே: ஹேதூன்) முக்திக்குக் காரணங்களாக (ஸாக்ஷாத்) நேரில் (ச்ருதே: கீ:) வேத வாக்கியம் (வக்தி) கூறுகிறது. (ய: வா) எவனொருவன் (ஏதேஷு ஏவ) இவைகளிலேயே (திஷ்டதி) நிலையாயிருக்கின்றானோ (அமுஷ்ய) அவனுடையது (மோக்ஷ:) விடுதலை—(அவித்யா-கல்பிதாத்) அவித்தையால் கல்பிக்கப்பட்ட (தேஹபந்தாத்) உடலாகிற தளையினின்று.

**ச்ரத்தா**—குரு உபதேசத்திலும் வேதாந்த வாக்கியத்திலும் நன்னம்பிக்கை.

**பக்தி**—ஸ்வ-ஸ்வருபானுஸந்தானம்.

**த்யானம்**—புத்தியை பரப்பிரம்மத்தில் நிலைநிறுத்துதல்.

ஒ. ச்ரத்தா-பக்தி-த்யானயோகாதவேஹி | —கைவல்ய உப.

**अज्ञानयोगात्परमात्मनस्तव ह्यनात्मबन्धस्तत एव संसृतिः ।**
**तयोर्विवेकोदित-बोधवह्नि-रज्ञानकार्यं प्रदहेत्समूलम् ॥ ४७ ॥**

அஜ்ஞான-யோகாத் பரமாத்மனஸ்தவ ஹ்யனாத்ம-பந்தஸ்தத ஏவ ஸம்ஸ்ருதிः | தயோர் விவேகோதித-போத-வஹ்னி-ரஜ்ஞான-கார்யம் ப்ரதஹேத் ஸமூலம் || 47 ||

47. (அஜ்ஞான-யோகாத் ஹி) அஞ்ஞானத்தின் கூட்டுறவால் தான் (பரமாத்மனः) பரமாத்மாவாகிய (தவ) உனக்கு (அனாத்ம-பந்தः) ஆத்மாவல்லாததுடன் பிணைப்பு; (ததः ஏவ) அதினின்றே (ஸம்ஸ்ருதிः) பிறவிச் சுழல்; (தயோः)—ஆத்மா அனாத்மாவாகிய-இவ்விரண்டையும் பற்றிய (விவேக-) பகுத்தறிவினால் (உதித-) எழுந்த (போத-வஹ்னிः) ஞானத்தீ (அஜ்ஞான-கார்யம்) அஞ்ஞானத்தின் செயலை (ஸமூலம்) வேருடன் (ப்ரத ஹேத்) எரித்துவிடும் ||

ஒ. ஞானத்தீ எல்லாக் கருமத்தையும் சாம்பலாய்ச்செய்து விடும். கீ. 4.37.

## ॥ प्रश्ननिरूपणम् ॥

शिष्य उवाच—

**कृपया श्रूयतां स्वामिन्प्रश्नोऽयं क्रियते मया ।**
**यदुत्तर-महं श्रुत्वा कृतार्थः स्यां भवन्मुखात् ॥ ४८ ॥**

### ப்ரச்னநிரூபணம்

சிஷ்ய உவாச—

க்ருபயா ச்ரூயதாம் ஸ்வாமின் ப்ரச்னோऽயம் க்ரியதே மயா | யதுத்தர-மஹம் ச்ருத்வா க்ருதார்த்த: ஸ்யாம் பவன்-முகாத் || 48 ||

### கேள்வி விளக்கம்

சீடன் கூறியது—

48. (ஸ்வாமின்) குருதேவரே! (க்ருபயா) கருணை கூர்ந்து (ச்ரூயதாம்) கேட்டருளுதல் வேண்டும். (மயா) என்னால் (அயம்) இனி இந்த (ப்ரச்ன:) கேள்வி (க்ரியதே) கேட்கப்படுகிறது. (யத் உத்தரம்) அதற்கு மறுமொழியை (பவத் முகாத்) தங்கள் வாயிலிருந்து (ச்ருத்வா) கேட்டு (க்ருதார்த்த:) எனது நோக்கம் பூர்த்தி எய்தியவனாக (அஹம்) நான் (ஸ்யாம்) ஆவேன்.

பவன்முகாத்—தங்களிடம் கேட்டுத் தெளிந்தபின் மீண்டும் இன்னொருவரை நாடும் அவசியம் இராது.

**को नाम बन्धः कथमेष आगतः कथं प्रतिष्ठास्य कथं विमोक्षः । कोऽसावनात्मा परमः क आत्मा तयो-र्विवेकः कथमेत-दुच्यताम् ॥ ४९ ॥**

கோ நாம பந்த: கத மேஷ ஆகத: கதம் ப்ரதிஷ்-டாஸ்ய கதம் விமோக்ஷ: | கோऽஸாவனாத்மா பரம: க ஆத்மா தயோர்-விவேக: கத மேத-துச்யதாம் || 49 ||

49. (க: நாம பந்த:) பிரசித்தமான பந்தம் என்பது யாது? (ஏஷ:) இது (கதம்) எங்ஙனம் (ஆகத:)

வந்தது ? (அஸ்ய) இதற்கு (ப்ரதிஷ்ட்டா) நிலை (கதம்) எவ்வகைத்து ? (விமோக்ஷ:) விடுதலை (கதம்) எப்படி ? (அஸௌ) இந்த (அனாத்மா) ஆத்மாவல்லாதது (க:) எது ? (பரம ஆத்மா) பரமாத்மா (க:) யார் ? (தயோ:) அவ்விரண்டிற்கும் (விவேக:) பாகுபாடு (கதம்) எங்ஙனம் ? (ஏதத்) இதை (உச்யதாம்) கூறியருளுதல் வேண்டும் ||

ப்ரதிஷ்ட்டா—'சிரகாலம் ஸ்திதி:' நீண்டகாலம் நிலைத்திருப்பது.

## शिष्यप्रशंसा

श्रीगुरुरुवाच—

**धन्योऽसि कृतकृत्योऽसि पावितं ते कुलं त्वया ।**
**यदविद्या-बन्धमुक्त्या ब्रह्मीभवितु-मिच्छसि ॥ ५० ॥**

### சிஷ்யப்ரசம்ஸா

ஸ்ரீகுருருவாச—

தன்யோऽஸி க்ருத-க்ருத்யோऽஸி பாவிதம் தே குலம் த்வயா | யதவித்யா-பந்தமுக்த்யா பரஹ்மீபவிது-மிச்சஸி || 50 ||

### சிஷ்யனைப் பெருமைப்படுத்தல்

ஸ்ரீகுரு கூறியது—

50. (தன்ய: அஸி) நீ பாக்கியசாலியாகின்றாய். (க்ருதக்ருத்ய: அஸி) செய்யவேண்டியதைச் செய்தவனாகின்றாய். (த்வயா) உன்னால் (தே) உனது (குலம்) வம்சம் (பாவிதம்) புனிதமாக்கப்பட்டுள்ளது. (அவித்யா-பந்த-முக்த்யா) அறியாமையின் தளையிலிருந்து விடுபட்டு (ப்ரஹ்மீ-பவிதும்)பிரம்ம நிலையை எய்துதற்கு (யத்இச்சஸி) விரும்புகிறாயல்லவா ?

**பாக்யசாலி**—'பாக்யம் விஷயேஷு வைராக்யம்' விஷய சுகங்களில் வைராக்யமே பாக்கியம்.

ஒ. குலம் பவித்ரம் ஜனனீக்ருதார்த்தா
விச்வம் பரா புண்யவதீ ச தேந |
அபாரஸச்சித் ஸுகஸாகரேऽஸ்மின்
லீனம் பரே ப்ரஹ்மணி யஸ்ய சேத: ||

## स्वप्रयत्न-प्रधानता

**ऋणमोचनकर्तारः पितुः सन्ति सुतादयः ।**
**बन्धमोचन-कर्ता तु स्वस्मादन्यो न कश्चन ॥ ५१ ॥**

### ஸ்வப்ரயத்ன-ப்ரதானதா

ருணமோசன-கர்த்தாரः பிதுः ஸந்தி ஸுதாதயः |
பந்த-மோசன-கர்த்தா து ஸ்வஸ்மாதன்யோ ந கச்சன || 51 ||

### தன்முயற்சியின் முக்யத்துவம்

51. (பிதுः) தந்தைக்கு (ருணமோசன-கர்த்தாரः) கடனைத்தீர்த்து விடுவிப்பவர்களாக (ஸுதாதயः) புத்திரன் முதலியவர்கள் (ஸந்தி) இருக்கிறார்கள். (து) ஆனல் (பந்த-மோசனகர்த்தா) அறியாமைத்தளையை நீக்கிவிடுவிப்பவனாக (ஸ்வஸ்மாத்) தன்னையன்றி (அன்யः) வேறு (கச்சன) எவனும் (ந) இல்லை.

**मस्तकन्यस्त-भारादे-र्दुःखमन्यै-र्निवार्यते ।**
**क्षुधादिकृत-दुःखन्तु विना स्वेन न केनचित् ॥ ५२ ॥**

மஸ்தகந்யஸ்த-பாராதேர்-துःக்க - மன்யைர்-நிவார்யதே | க்ஷுதாதி-க்ருத-துःக்கந்து விநா ஸ்வேன ந கேனசித் || 52 ||

52. (மஸ்தக) தலையில் (ந்யஸ்த-) வைக்கப்பட்ட (பாராதே:) பளு முதலியவற்ருல் (து:க்கம்) ஏற்படும் துன்பமும் (அன்யை:) பிறரால் (நிவார்யதே) தீர்க்கப்படலாம். (க்ஷுத்-ஆதி-) பசி முதலியவற்ருல் (க்ருத-) ஆக்கப்பட்ட (து:க்கம் து) துன்பமோ எனின் (ஸ்வேன விநா) தன்னுலன்றி (கேனசித்) வேறு எவராலும் (ந) தீர்க்க இயலாது.

ஒ. உத்தரே - தாத்மனுத்மானம் நாத்மான-மவஸாதயேத் ।
ஆத்மைவ ஹ்யாத்மனே பந்துராத்மைவ ரிபு-ராத்மன: ॥

தன்னுலே தன்னை உயர்த்திக்கொள்ள வேண்டும். தன்னைத் தாழ்த்திக்கொள்ளக் கூடாது. தானே தனக்கு உறவினன், தானே தனக்குப் பகைவன். —கீ 6. 5.

**पथ्यमौषध-सेवा च क्रियते येन रोगिणा ।**
**आरोग्य-सिद्धि-र्दृष्टाऽस्य नान्यानुष्ठितकर्मणा ॥ ५३ ॥**

பத்ய-மௌஷத-ஸேவா ச க்ரியதே யேன ரோகிணு | ஆரோக்ய-ஸித்திர்-த்ருஷ்டாऽஸ்ய நான்யானுஷ்டித-கர்மணு ॥ 53 ॥

53. (பத்யம்) கட்டுப்பாடான உணவும் (ஔஷத-ஸேவா ச) மருந்தை உட்கொள்ளுதலும் (யேன) எந்த (ரோகிணு) நோயாளியால் (க்ரியதே) பின்பற்றப்படுகிறதோ (அஸ்ய) அவனுக்கு (ஆரோக்ய-ஸித்தி:) உடல் நலம் கைகூடுவது (த்ருஷ்டா) காணப்படுகிறது. (அன்ய-) பிறனெருவனுல் (அனுஷ்டித) பின்பற்றப்பட்ட (கர்மணு) இச்செயலால் (ந) இந்த நோயாளிக்கு உடல் நலம் சித்திக்கும் என்பது—இல்லை.

பத்யம்—'த்ருடதர-ஸாதன சதுஷ்டயஸம்பத்தி:' திடமாக ஸாதன சதுஷ்டயத்தைக் கைக்கொள்ளுதல்.

ஔஷதஸேவா—வேதாந்தச்ரவணம்—வேதாந்தத்தை குருமுகமாகக் கேட்டுச்சிந்தனை செய்தல்.

वस्तुस्वरूपं स्फुटबोध-चक्षुषा स्वेनैव वेद्यं न तु पण्डितेन ।
चन्द्रस्वरूपं निजचक्षुषैव ज्ञातव्य-मन्यै-रवगम्यते किम् ॥५४॥

வஸ்துஸ்வரூபம் ஸ்புடபோத-சக்ஷுஷா ஸ்வேனைவ வேத்யம் ந து பண்டிதேன | சந்த்ரஸ்வரூபம் நிஜசக்ஷுஷைவ ஜ்ஞாதவ்ய-மன்யை-ரவகம்யதே கிம் || 54 ||

54. (வஸ்து-ஸ்வரூபம்) ஒரு பொருளின் தன்மை (பண்டிதேன) அறிவாளியால் (ஸ்வேன) தனது (ஸ்புட போத சக்ஷுஷா ஏவ) தெளிவான ஞானக் கண்ணுலேயே (நநு வேத்யம்) அறியப்படுகிறதென்பது நிச்சயம். (சந்த்ரஸ்வரூபம்) சந்திரனுடைய வடிவம் (நிஜ-) தன்னுடைய (சக்ஷுஷா ஏவ) கண்ணுலேயே (ஜ்ஞாதவ்யம்) கண்டறியப்படவேண்டும். (அன்யைః) பிறனெருவனைக் கொண்டு (அவகம்யதே கிம்) காட்சியை எய்த இயலுமா?

நநு பண்டிதேன—'நது பண்டிதேன' என்பது பாடபேதம். சுய அறிவில்லாமல் ஒரு பண்டிதனுடைய அறிவைக் கொண்டு ஞான விளக்கம் ஏற்படாது. நநு—நிச்சயம்; நது—இல்லை.

अविद्या-काम कर्मादि-पाशबन्धं विमोचितुम् ।
कः शक्नुयाद्विनात्मानं कल्पकोटिशतैरपि ॥ ५५ ॥

அவித்யா-காம-கர்மாதி-பாசபந்தம் விமோசிதும் | கః சக்னுயாத்விநாத்மானம் கல்பகோடிசதைரபி || 55 ||

55. (அவித்யா-காம-கர்ம-ஆதி-) அறிவின்மை, ஆசை, தொழில் முதலிய (பாச-) வலைகளாலான (பந்தம்) தளையை (விமோசிதும்) நீக்குவதற்கு (விநா ஆத்மானம்) தனக்குத்தானேயல்லாமல் (கல்பகோடி சதைః அபி) நூறு கோடி கல்ப காலமானலும் (கః) எவன் (சக்னுயாத்) திறமை உடையவனுவான்?

கல்பம்—பிரம்மாவின் பகல்; ஆயிரம் சதுர்யுகம்.

ஒ. ஈசுவரன், குரு, அடியார் இவர்கள் எல்லோருடைய அருளும் இருந்தாலுங்கூட இன்னொரு அருள் இல்லையாகில் ஜீவன் நாசமடைவான். அந்த முக்கியமான அருள் தன் நெஞ்சினது. அதாவது தான் முக்தியடைய வேண்டும் என்ற ஆர்வம் நெஞ்சில் உதிக்க வேண்டும்.

—ரா. கி.

## आत्मज्ञानमहत्त्वम्

**न योगेन न सांख्येन कर्मणा नो न विद्यया ।**
**ब्रह्मात्मैकत्व-बोधेन मोक्षः सिध्यति नान्यथा ॥ ५६ ॥**

### ஆத்மஜ்ஞான மஹத்வம்

ந யோகேன ந ஸாங்க்யேன கர்மணா நோ ந வித்யயா | ப்ரஹ்மாத்மைகத்வ-போதேன மோக்ஷஃ ஸித்த்யதி நான்யதா || 56 ||

### ஆத்ம ஞானத்தின் பெருமை

56. (ந யோகேன) யோகத்தாலன்று, (ந ஸாங்க்யேன) ஸாங்கியத்தாலன்று, (கர்மணா நோ) கர்மத்தாலன்று, (ந வித்யயா) கல்வியாலன்று; (ப்ரஹ்ம-ஆத்ம ஏகத்வ-) பிரம்மமும் தானும் ஒன்று என்ற (போதேன) அறிவின் விழிப்பால் (மோக்ஷஃ) முக்தி (ஸித்த்யதி) சித்திக்கிறது; (ந அன்யதா) வேறு வகையில் இல்லை.

யோகம்—பதஞ்ஜலிமகரிஷி அருளிய யோக தர்சனம்.

ஸாங்கியம்—கபிலமஹரிஷி அருளிய ஸாங்கிய தர்சனம்.

கர்மம்—ஜைமினி அருளிய பூர்வ மீமாம்ஸா தர்சனம்.

வித்யா—பல வகையான கல்வி அல்லது உபாஸனமார்க்கங்கள்.

நான்யதா—ஒ. நான்ய꠰ பந்தா வித்யதேऽயனாய |

—புருஷஸூக்தம்.

वीणाया रूपसौन्दर्यं तन्त्रीवादनसौष्ठवम् ।
प्रजारंजनमात्रं तन्न साम्राज्याय कल्पते ॥ ५७ ॥

வீணயா ரூபஸௌந்தர்யம் தந்த்ரீ - வாதன ஸௌஷ்டவம் | ப்ரஜா ரஞ்ஜன-மாத்ரம் தந் ந ஸாம் ராஜ்யாய கல்பதே || 57 ||

57. (வீணயா:) வீணையின் (ரூப ஸௌந்தர்யம்) வடிவழகும் (தந்த்ரீ-வாதன-ஸௌஷ்டவம்) கம்பிகளின் ஒலித் தெளிவும் (ப்ரஜா-ரஞ்ஜன-மாத்ரம்) மக்களுக்கு மனமகிழ்ச்சியைமட்டுமளிக்கும். (தத்) அது (ஸாம் ராஜ்யாய) சக்கரவர்த்திப் பதவிக்கு (ந கல்பதே) ஒருவனை உரியவனுக்கிவிடாது.

அடுத்த சுலோகத்தில் வரும் கருத்திற்கு இது உபமானம்.

ஸாம்ராஜ்யம்—ரஞ்ஜனம், ராஜ்யம் எனும் சொற்கள் இங்கு சிலேடையாக உபயோகிக்கப்பட்டிருக்கின்றன. 'ராஜா ப்ரக்ருதி ரஞ்ஜனத்' என்பது வசனம். எவன் உலகை மகிழ்விக்கின்ருனே அவன் ராஜா என்று சொல்லியிருப்பதால் வீணைவாசித்து மகிழ் விப்பவன் ராஜா ஆகிவிடமாட்டான்.

वाग्वैखरी शब्दझरी शास्त्रव्याख्यान-कौशलम् ।
वैदुष्यं विदुषां तद्वद्भुक्तये न तु मुक्तये ॥ ५८ ॥

வாக்வைகரீ சப்தஜரீ சாஸ்த்ரவ்யாக்யான-கௌசலம் | வைதுஷ்யம் விதுஷாம் தத்வத் புக்தயே ந து முக்தயே || 58 ||

58. (வாக்-வைகரீ) தெளிவான பேச்சு, (சப்த ஜரீ) பிரவாகம் போன்ற சொற்கள் (சாஸ்த்ர-வ்யாக்யான-கௌசலம்) சாஸ்திரங்களுக்கு விரிவுரை கூறும் திறமை (வைதுஷ்யம்) ஆழ்ந்த கல்வி ஆகிய இவை

(விதுஷாம்) கல்விமான்களுக்கு (தத்வத்) மேலுதாரணத்தில் கூறியதுபோல் (புக்தயே) மகிழ்ந்தனுபவிப்பதற்கு ஆகுமேயன்றி (ந து முக்தயே) முக்திக்குப்பயன் படமாட்டா.

ஒ. 'நானுத்யாயாத் பஹூன் சப்தான் வாசோ விக்லாபனம் ஹி தத் |' பல சாஸ்திரங்களை அப்பியாஸம் செய்ய வேண்டாம். அது வாக்குக்குச் சிரமமேயாகும். —ப்ரு. உப. 4-4-21.

வ்யாக்யானம்—'பதச்சேத: பதார்த்தோக்தி: விக்ரஹோ வாக்யயோஜனா | ஆக்ஷேபஸ்ய ஸமாதானம் வ்யாக்யானம் பஞ்சலக்ஷணம் ||'

**अविज्ञाते परे तत्त्वे शास्त्राधीतिस्तु निष्फला ।**
**विज्ञातेऽपि परे तत्त्वे शास्त्राधीतिस्तु निष्फला ॥५९॥**

அவிஜ்ஞாதே பரே தத்வே சாஸ்த்ராதீதிஸ்து நிஷ்பலா | விஜ்ஞாதேऽபி பரே தத்வே சாஸ்த்ராதீதிஸ்து நிஷ்பலா || 59 ||

59. (பரேதத்வே) உயர்ந்த உண்மை நிலை (அவிஜ்ஞாதே) அறியப்படாவிட்டால் (சாஸ்த்ர-அதீதி:) பல சாஸ்திரங்களைப்படித்தல் (நிஷ்பலா து) வீணேயாம். (பரே தத்வே) உயர்ந்த உண்மை நிலை (விஜ்ஞாதே அபி) அறியப்பட்டு விட்டாலுங் கூட (சாஸ்த்ர-அதீதி:) பலசாஸ்திரங்களைப் படித்தல் (நிஷ்பலா) வீணே—அவசியமில்லை.

ஒ. த்வயி ப்ரஸன்னே மம கிம் குணேன த்வய்யப்ரஸன்னே மம கிம் குணேன | ரக்தே விரக்தே ச வரே வதூனாம் நிரர்த்தக: குங்குமபத்ர-பங்க: || நீ பிரஸன்னமாகிவிட்டால் எனக்கு குணங்களாலாவதென்ன? ப்ரஸன்னமாகாவிட்டால் எனக்கு குணங்களாலாவதென்ன? ஸ்திரீகளுக்குக் கணவனுடைய அன்பொன்று இருக்குமேயானல் குங்குமம் தளிர் பூ முதலியவற்றால் அலங்காரம் அவசியமில்லை. அன்பு இல்லையானல் அப்போதும் அது பயனில்லை.

—கிருஷ்ணகர்ணாம்ருதம் 2.99.

**शब्दजालं महारण्यं चित्तभ्रमण-कारणम् ।**
**अतः प्रयत्नाज्ज्ञातव्यं तत्त्वज्ञैस्तत्त्वमात्मनः ॥ ६० ॥**

சப்தஜாலம் மஹாரண்யம் சித்தப்ரமணகாரணம் |
அதঃ ப்ரயத்னாஜ்ஜ்ஞாதவ்யம் தத்வஜ்ஞைஸ்-தத்வ-மாத்மனঃ || 60 ||

60. (சப்தஜாலம்) சொற்களின் கூட்டம் (மஹாரண்யம்) ஒரு பெரிய காடு போன்றது. (சித்தப்ரமண-காரணம்) மனதை மயக்குவதற்குக் காரணமாகின்றது. (அதঃ) ஆகையால் (தத்வஜ்ஞைঃ) உண்மையறிவை நாடுபவர்களால் (ஆத்மனঃ தத்வம்) ஆத்மாவைப் பற்றிய உண்மை ஒன்றே (ப்ரயத்னாத்) நன் முயற்சியால் (ஜ்ஞாதவ்யம்) அறியப்படுதற்குரியதாம்.

ஒ. தமேவைகம் ஜானத ஆத்மானம் அன்யா வாசோ விமுஞ்சத| அம்ருதஸ்யைஷ ஸேதுঃ || அந்த ஒருவனாகிய பரமாத்மாவையே அறிவீர்களாக. மற்ற வார்த்தைகளை விட்டொழிக. இதுவே மோக்ஷத்திற்குப் பாலம். —மு. உப. 2.2.5.

ஒ. மாம்பழங்களைச் சாப்பிடு. தோட்டத்தில் எத்தனை ஆயிரம் மரங்கள் எத்தனை கோடி இலைகள் என்று கணக்கிடுவதில் பயன் என்ன ? —ரா. கி.

**अज्ञानसर्पदष्टस्य ब्रह्मज्ञानौषधं विना ।**
**किमु वेदैश्च शास्त्रैश्च किमु मन्त्रैः किमौषधैः ॥ ६१ ॥**

அஜ்ஞான-ஸர்ப்பதஷ்டஸ்ய ப்ரஹ்மஜ்ஞானௌஷதம் விநா | கிமு வேதைச்ச சாஸ்த்ரைச்ச கிமு மந்த்ரைঃ கிமௌஷதைঃ || 61 ||

61. (அஜ்ஞான-ஸர்ப்ப-தஷ்டஸ்ய) அஞ்ஞானமாகிற பாம்பினுல் கடிக்கப்பட்டவனுக்கு (ப்ரஹ்மஜ்ஞான ஔஷதம்) பிரம்ம ஞானமாகிற மருந்து (விநா) அல்லாமல் (கிமு வேதைச் ச சாஸ்த்ரைச்ச) வேதங்களாலும் சாஸ்திரங்களாலும் ஆவதென்ன? (கிமு மந்த்ரைঃ) மந்திரங்களாலாவதென்ன? (கிம் ஔஷதைঃ) வேறு மருந்துகளாலாவதென்ன?

## अपरोक्षानुभव-आवश्यकता

**न गच्छति विना पानं व्याधिरौषध-शब्दतः ।**
**विनाऽपरोक्षानुभवं ब्रह्मशब्दै-र्न मुच्यते ॥ ६२ ॥**

அபரோக்ஷானுபவ-ஆவச்யகதா

ந கச்சதி விநா பானம் வ்யாதிரௌஷத-சப்ததঃ |
விநாऽபரோக்ஷானுபவம் ப்ரஹ்மசப்தைர்-ந முச்யதே ||62||

**தனக்குத்தானே அனுபவம் அவசியம்**

62. (வ்யாதிঃ) நோயானது (விநா பானம்) மருந்தைப் பருகாமல் (ஔஷத-சப்ததঃ) மருந்தினுடைய பெயரை உச்சரிப்பதால் (ந கச்சதி) போய்விடாது. (விநா அபரோக்ஷ-அனுபவம்) பிறர் கண் கொண்டு பாராமல் தனக்குத்தானே அனுபவம் ஏற்பட்டாலன்றி (ப்ரஹ்மசப்தைঃ) பிரம்மத்தைப் பற்றிய பேச்சால் (ந முச்யதே) ஒருவன் முக்தி எய்துவதில்லே.

**अकृत्वा दृश्यविलय-मज्ञात्वा तत्त्व-मात्मनः ।**
**ब्रह्मशब्दैः कुतो मुक्ति-रुक्तिमात्र-फलै-र्नृणाम् ॥ ६३ ॥**

அக்ருத்வா த்ருச்யவிலய-மஜ்ஞாத்வா தத்வ-மாத்மனঃ | ப்ரஹ்மசப்தைঃ குதோ முக்தி-ருக்திமாத்ர-பலேர்-ந்ருணும் || 63 ||

63. (ஆத்மனः) ஆத்மாவின் (தத்வம்) உண்மை யை (அஜ்ஞாத்வா) அறியாமலும் (த்ருச்ய-விலயம்) அஞ்ஞானத்தால் தோன்றும் பிரபஞ்சத்தின் மறைவை (அக்ருத்வா) ஞானத்தால் சாதிக்காமலும், (உக்தி-மாத்ர-பலைः) வெறும் பேச்சை மட்டும் பயனுய்க் கொண்ட (ப்ரஹ்மசப்தைः) பிரம்ம சப்தத்தால் (முக்திः) முக்தியானது (குதः) எங்ஙனம் ஏற்படும்?

இதை விளக்க அடுத்த சுலோகத்தில் உவமானம் கூறப்படு கிறது. பாஹ்யசப்தை: குதோ முக்தி: —பா. பே.

**अकृत्वा शत्रुसंहार-मगत्वाखिल-भूश्रियम् ।**
**राजाहमिति शब्दान्नो राजा भवितुमर्हति ॥ ६४ ॥**

அக்ருத்வா சத்ருஸம்ஹார-மகத்வாகில பூச்ரியம் |
ராஜாஹமிதி சப்தாந்நோ ராஜா பவிதுமர்ஹதி || 64 ||

64. (சத்ருஸம்ஹாரம்) பகையைவென்று ஒழிக்கும் செயலை (அக்ருத்வா) செய்யாமலும் (அகில-பூச்ரியம்) பூமியிலுள்ள செல்வத்தை (அகத்வா) அடையாமலும் (அஹம்) நான் (ராஜா இதி) அரசன் என்ற (சப்தாத்) பேச்சால் (ராஜா பவிதும்) அரசனுவதற்கு (ந அர்ஹதி) ஒருவன் தகுதியடைந்து விடமாட்டான்.

**आप्तोक्तिं खननं तथोपरि शिलाद्युत्कर्षणं स्वीकृतिम् ।**
**निक्षेपः समपेक्षते न हि बहिः शब्दैस्तु निर्गच्छति ।**
**तद्वद्ब्रह्म-विदोपदेश-मनन-ध्यानादिभि-र्लभ्यते**
**माया-कार्यतिरोहितं स्वममलं तत्त्वं न दुर्युक्तिभिः ॥६५॥**

ஆப்தோக்திம் கனனம் ததோபரி சிலாத்யுத்-கர்ஷணம் ஸ்வீக்ருதிம் நிக்ஷேபः ஸமபேக்ஷதே நஹி-பஹிः சப்தைஸ்து நிர்கச்சதி | தத்வத் ப்ரஹ்ம விதோ-பதேச-மனன-த்யாஞதிபிர்-லப்யதே மாயா-கார்யதிரோ ஹிதம் ஸ்வமமலம் தத்வம் ந துர்யுக்திபிः || 65 ||

65. (ஆப்த-உக்திம்)-இரகசியம் உணர்ந்த-நண் பனுடைய ஆலோசனைப் பேச்சையும் (கனனம்) பூமியைத் தோண்டுதலையும் (ததஃ) பிறகு (உபரி)- மேலுள்ள (சிலா-ஆதி) பாராங்கல் முதலியவற்றை (உத்கர்ஷணம்) தூக்கி எடுத்தலையும் (ஸ்வீக்ருதிம்) தன்னுடையதாக்கிக் கொள்ளுதலையும் (நிக்ஷேபஃ) புதையலானது (ஸமபேக்ஷதே) வேண்டுகிறது. (பஹிஃ) வெளியே இருந்து (சப்தைஃ து) சத்தம் போடுவதால் மட்டும் (ந ஹி நிர்க்கச்சதி) அது வெளியே வந்து விடாதன்றே? (தத்வத்) அவ்வாறே (ப்ரஹ்மவிதா) பிரம்மத்தை அறிந்த ஒருவரால் (உபதேச-) உபதேசத் தாலும் (மனன-) அதைச்சிந்தித்துணர்வதாலும் (த்யா னுதிபிஃ) தியானம் முதலியவற்ருலும் (மாயா-கார்ய- திரோ ஹித ம்) மாயையினுலாக்கப்பட்ட திரையால் மறைக்கப்பட்டிருக்கும் (ஸ்வம் அமலம் தத்வம்) நிர்மல மான ஆத்மதத்துவச் செல்வம் (லப்யதே) அடையப் படுகிறது. (ந துர்யுக்திபிஃ) கெட்ட யுக்திவாதங் களாலன்று.

तस्मात्सर्वप्रयत्नेन भवबन्धविमुक्तये ।
स्वैरेव यत्नः कर्तव्यो रोगादाविव पण्डितैः ॥ ६६ ॥

தஸ்மாத் ஸர்வப்ரயத்னேன பவபந்த-விமுக்தயே |
ஸ்வைரேவ யத்னஃ கர்த்தவ்யோ ரோகாதாவிவ பண்டிதைஃ || 66 ||

66. (தஸ்மாத்) ஆகையால் (ஸர்வப்ரயத்னேன) எல்லாவிதமான முயற்சியைக்கொண்டும் (பவபந்த- விமுக்தயே) பிறவித்தளைகளின்று விடுபடுவதற்கு (ஸ்வைஃ ஏவ) தனக்குத்தானுகவே (ரோகாதௌ இவ) நோய் முதலியவற்றினின்று-விடுவதற்கு முயற்சிப்பது போல் (யத்னஃ) முயற்சியானது (பண்டிதைஃ) அறி வாளிகளால் (கர்த்வ்யஃ) செய்யப்படவேண்டும்.

ரோகாதேரிவ | —பா. பே.

**यस्त्वयाद्य कृतः प्रश्नो वरीयाञ्छास्त्रविन्मतः ।**
**सूत्रप्रायो निगूढार्थो ज्ञातव्यश्च मुमुक्षुभिः ॥ ६७ ॥**

யஸ்த்வயாத்ய க்ருதः ப்ரச்னோ வரீயான் சாஸ்த்ர வின் மதः | ஸூத்ரப்ராயோ நிகூடார்த்தோ ஜ்ஞாத-வ்யச்ச முமுக்ஷுபிः || 67 ||

67. (த்வயா) உன்னால் (அத்ய) இப்பொழுது (க்ருதः ப்ரச்னः) கேட்கப்பட்ட கேள்வி (யः) எதுவோ அது (வரீயான்) சிறந்தது, (சாஸ்த்ரவித்மதः) சாஸ் திரங்களை அறிந்தவர்களால் மெச்சுதற்குரியது, (ஸூத்ரப்ராயः) ஸூத்ரம் போல் சுருக்கமானது (நிகூடார்த்தः) ஆழ்ந்த கருத்துடையது, (ச) மேலும் (முமுக்ஷுபிः) முக்தியை நாடுபவர்களால் (ஜ்ஞாதவ்யः) அறிந்து கொள்ளவேண்டியது.

சாஸ்த்ரஸம்மதः —பா. பே.

**शृणुष्वावहितो विद्वन्यन्मया समुदीर्यते ।**
**तदेतच्छ्रवणात्सद्यो भवबन्धाद्विमोक्ष्यसे ॥ ६८ ॥**

ச்ருணுஷ்வாவஹிதோ வித்வன் யன்மயா ஸமு-தீர்யதே | ததேதச்ச்ரவணாத் ஸத்யோ பவபந்தாத்-விமோக்ஷ்யஸே || 68 ||

68. (வித்வன்) அறிவாளியே! (யத்) எது (மயா) என்னால் (ஸமுதீர்யதே) விளக்கிக்கூறப்படுகிறதோ (தத்)-அதை-(அவஹிதः) கவனத்துடன் (ச்ருணுஷ்வ) கேட்பாயாக. (ஏதத்) இதை (ச்ரவணாத்) கேட்பதால் (ஸத்யः) உடனே (பவபந்தாத்) பிறவித்தளையிலிருந்து (விமோக்ஷ்யஸே) விடுபடுவாய்.

ஒ. ‘அனந்த-சாஸ்த்ரம் பஹுவேதிதவ்யம் அல்பச்ச காலோ பஹவச்ச விக்னா: | யத்ஸாரபூதம் ததுபாஸிதவ்யம் ஹம்ஸோ யதா

க்ஷீரமிவாம்புமிச்ரம் ||' சாஸ்திரம் எல்லையில்லாதது. அறிய வேண்டியது அதிகம். காலம் குறைவு. இடையூறுகள் பல. எது ஸாரமாயுள்ளதோ அதை நீர் கலந்த பாலிலிருந்து பாலை மட்டும் ஹம்ஸம் கிரகிப்பதுபோல் நாடியடைய வேண்டும்.

**मोक्षस्य हेतुः प्रथमो निगद्यते वैराग्य-मत्यन्त-मनित्यवस्तुषु ।**
**ततः शमश्चापि दमस्तितिक्षा न्यासः प्रसक्ताखिल-कर्मणां**
**भृशम् ॥ ६९ ॥**

மோக்ஷஸ்ய ஹேதுः ப்ரதமோ நிகத்யதே வைராக்ய-மத்யந்த-மநித்யவஸ்துஷு | ததः சமச்சாபி தமஸ்திதிக்ஷா ந்யாஸः ப்ரஸக்தாகில-கர்மணாம் ப்ருசம் || 69 ||

69. (மோக்ஷஸ்ய) முக்திக்கு (ப்ரதமः) முதன்மையான (ஹேதுः) காரணம் அல்லது படி (அநித்ய வஸ்துஷு) நிலையற்ற பொருள்களில் (அத்யந்தம் வைராக்யம்) தீவிரமான வைராக்கியம். (ததः) பிறகு (சமः ச) அகக்கரணங்களின் அடக்கம், (அபி) மேலும் (தமः) புறக்கரணங்களின் அடக்கம் (திதிக்ஷா) பொறுமை (ப்ரஸக்த-அகில-கர்மணாம்) பற்றுவைத்த எல்லாக்கருமங்களையும் (ப்ருசம்) அறவே (நியாஸः) துறந்து விடுதல்.

**ततः श्रुति-स्तन्मननं सतत्त्वध्यानं चिरं नित्यनिरन्तरं मुनेः ।**
**ततोऽविकल्पं परमेत्य विद्वानिहैव निर्वाणसुखं समृच्छति**
**॥ ७० ॥**

ததः ச்ருதிஸ்-தன்மனனம் ஸதத்வத்யானஞ் சிரம் நித்யநிரந்தரம் முனேः | ததோऽவிகல்பம் பரமேத்ய வித்வானிஹைவ நிர்வாணஸுகம் ஸம்ருச்சதி || 70 ||

70. (ததஃ) பிறகு (முனேஃ) முக்தியில் நாட்டமுடையவனுக்கு (ச்ருதிஃ) குருவிடமிருந்து உபதேசம் பெறுதல் (தத் மனனம்) அதைச்சிந்தித்தல் (நித்ய-நிரந்தரம்) எப்பொழுதும் இடைவிடாது (சிரம்) நீண்ட காலம் (த்யானம்) தியானம் பழகுதல். (ததஃ) அதற்கு மேல் (அவிகல்பம் பரம்) உயர்ந்த நிர்விகல்ப ஸமாதியை (ஏத்ய) அடைந்து (வித்வான்) அறிவாளி (இஹ ஏவ) இங்கேயே (நிர்வாண ஸுகம்) முக்தியின்பத்தை (ஸம்ருச்சதி) அடைகிருன்.

**த்யானம் சிரம் நித்ய-நிரந்தரம்**—ஒ. 'ஸது தீர்க்ககால நைரந்தர்ய ஸத்காரஸேவிதோ **த்ருடபூமிஃ**।' நீண்டகாலம் இடையருமல் ஏற்பட்ட ஸாதனங்களுடன் அப்பியாஸம் நிகழுமாகில் அது திடமாகி விரும்பிய பலனை அளிப்பதாகும். —யோ. சூ. 1.14.

ஒ. 'ஆத்மா வா அரே த்ரஷ்டவ்ய: ச்ரோதவ்யோ மந்தவ்யோ நிதித்யாஸிதவ்யஃ' ஆத்மாவே பார்க்கப்படவேண்டும், கேட்கப்படவேண்டும், நினைக்கப்படவேண்டும், நிச்சயமாக அறியப்படவேண்டும். —ப்ரு.உப. 2.4.5.

**यद्बोद्धव्यं तवेदानी-मात्मानात्मविवेचनम् ।**
**तदुच्यते मया सम्यक् श्रुत्वात्मन्यवधारय ॥ ७१ ॥**

யத்போத்தவ்யம் தவேதானீ-மாத்மானுத்மவிவேசனம் | ததுச்யதே மயா ஸம்யக் ச்ருத்வாத்மன்யவதாரய || 71 ||

71. (ஆத்ம-அனுத்ம-விவேசனம்) ஆத்ம அனுத்மப் பகுத்தறிவு ஆகிய (யத்)எது (போத்தவ்யம்) அறியப்படவேண்டுமோ (தத்) அது (தவ) உனக்கு (மயா) என்னுல் (ஸம்யக்) தெளிவாக (இதானீம்) இப்பொழுது (உச்யதே) சொல்லப்படும். (ச்ருத்வா) கேட்டு (ஆத்மனி) உள்ளத்தில் (அவதாரய) இருத்திக்கொள்வாயாக.

மஜ்ஜை - மூளை.



**मज्जास्थिमेदः पलरक्तचर्मत्वगाह्वयै-र्धातुभि-रेभि-रन्वितम् ।**
**पादोरुवक्षो-भुज-पृष्ठ-मस्तकैरंगै-रुपांगै-रुपयुक्तमेतत् ॥ ७२ ॥**

மஜ்ஜாஸ்திமேதః பலரக்த-சர்ம-த்வகாஹ்வயைர்-தாதுபி-ரேபி-ரன்விதம் | பாதோரு-வக்ஷோ-புஜ-ப்ருஷ்ட-மஸ்தகை-ரங்கை-ருபாங்கை-ருபயுக்த-மேதத் || 72 ||

72. (மஜ்ஜா) [1]ஊன் (அஸ்தி) [2]எலும்பு (மேதః) [3]கொழுப்பு (பல-)[4]மாம்ஸம் (ரக்த-) [5]இரத்தம் (சர்ம-) [6]அடித்தோல் (த்வக்-) [7]மேல் தோல் (ஆஹ்வயைః) எனப்பெயர் பெற்ற (ஏபிః) இந்த (தாதுபிః) தாதுக்களுடன் (அன்விதம்) கூடியது ; (பாதః) பாதம் (ஊரு) துடை, (வக்ஷः) மார்பு, (புஜ-) கை (ப்ருஷ்ட-) பின்பாகம் (மஸ்தகைः) தலை முதலிய (அங்கைः) உறுப்புக்களுடனும் (உபாங்கைः) உதவி உறுப்புக்களுடனும் ஆகிய (ஏதத்) இது அதாவது இவ்வுடல் ;

**अहं ममेति प्रथितं शरीरं मोहास्पदं स्थूलमितीर्यते बुधैः ।**
**नभो-नभस्वद्दहनाम्बु-भूमयः सूक्ष्माणि भूतानि भवन्ति तानि ॥ ७३ ॥**

அஹம் மமேதி ப்ரதிதம் சரீரம் மோஹாஸ்பதம் ஸ்தூல-மிதீர்யதே புதைः | நபோ நபஸ்வத்தஹனம்பு-பூமயः ஸூக்ஷ்மாணி பூதானி பவந்தி தானி || 73 ||

73. (அஹம் மம இதி) 'நான்' என்றும் 'என்னுடையது' என்றும் (ப்ரதிதம்) சொல்லப்படுவதும் (மோஹ-ஆஸ்பதம்) மதிமயக்கத்திற் கிடமாயிருப்பதுமான (சரீரம்) இவ்வுடல் (புதைः) புத்திமான்களால் (ஸ்தூலம் இதி) ஸ்தூலம் என்று (ஈர்யதே) கூறப்படுகிறது.

(நப:) ஆகாயம் (நபஸ்வத்) காற்று (தஹன-) நெருப்பு (அம்பு) நீர் (பூமய:) பூமி முதலிய தனிப் பொருள்கள் (ஸூக்ஷ்மாணி பூதானி) ஸூக்ஷ்ம பூதங்கள் (பவந்தி) ஆகின்றன. (தானி) அவை—

**परस्परांशै-र्मिलितानि भूत्वा स्थूलानि च स्थूलशरीर-हेतवः ।**
**मात्रास्तदीया विषया भवन्ति शब्दादयः पंच सुखाय भोक्तुः**
**॥ ७४ ॥**

பரஸ்பராம்சைர்-மிலிதானி பூத்வா ஸ்தூலானி ச ஸ்தூல-சரீர ஹேதவ: | மாத்ராஸ்ததீயா விஷயா பவந்தி சப்தாதய: பஞ்ச ஸுகாய போக்து: || 74 ||

74. (பரஸ்பர-அம்சை:) ஒன்றின் பகுதி மற்றவைகளின் பகுதிகளுடன் (மிலிதானி) கூடியவையாக (பூத்வா) ஆகி (ஸ்தூலானி ச) ஸ்தூலபூதங்களாகவும் (ஸ்தூல சரீர ஹேதவ:) ஸ்தூல சரீரத்திற்குக் காரணங்களாகவும் ஆகின்றன, (ததீயா மாத்ரா:) அவ்வவற்றின் தன்மாத்திரைகள் (போக்து:) ஜீவனுடைய (ஸுகாய) இன்பநுகர்ச்சிக்குரிய (பஞ்ச) ஐந்து (சப்தாதய:) சப்தம் முதலிய (விஷயா:) புலன்களாக (பவந்தி) ஆகின்றன.

**य एषु मूढा विषयेषु बद्धा रागोरु-पाशेन सुदुर्दमेन ।**
**आयान्ति निर्यान्त्यध ऊर्ध्वमुच्चैः स्वकर्मदूतेन जवेन नीताः**
**॥ ७५ ॥**

ய ஏஷு மூடா விஷயேஷு பத்தா ராகோரு-பாசேன ஸுதுர்தமேன | ஆயாந்தி நிர்யாந்த்யத ஊர்த்வமுச்சை: ஸ்வகர்மதூதேன ஜவேன நீதா: || 75 ||

75. (யே) எந்த (மூடாঃ) மூடர்கள் (ஸுதுர்தமேன) அறுக்கமுடியாத (ராக-உரு-பாசேன) பற்று எனும் வலிய கயிற்றால் (ஏஷு விஷயேஷு) இவ்விஷயங் களில் (பத்தாঃ) கட்டுண்டிருப்பவர்களோ அவர்கள் (ஜவேன) வேகம் மிகுந்த (ஸ்வகர்ம தூதேன) தமது கருமமாகிய தூதர்களால் (நீதாঃ) கவரப்பட்டவர்க ளாய் (உச்சைঃ) மிகவும் (அதঃ) தாழ்ந்த நிலைக்கும் (ஊர்த்வம்) உயர்ந்த நிலைக்கும் (ஆயாந்தி நிர்யாந்தி) வருவதும் போவதுமாயிருக்கிறார்கள்.

**शब्दादिभिः पंचभिरेव पंच पंचत्वमापुः स्वगुणेन बद्धाः ।**
**कुरंग-मातंग-पतंगमीनभृंगा नरः पंचभिरंचितः किम्**
**॥ ७६ ॥**

**சப்தாதிபிঃ** பஞ்சபிரேவ பஞ்ச பஞ்சத்வமாபுঃ ஸ்வகுணேன **பத்தாঃ** | குரங்க-மாதங்க-பதங்கமீன-ப்ருங்கா நரঃ பஞ்சபி-ரஞ்சிதঃ கிம் || 76 ||

76. (குரங்க-) மான் (மாதங்க-) யானை (பதங்க) விட்டில் பூச்சி (மீன) மீன் (ப்ருங்காঃ) வண்டு ஆகிய (பஞ்ச) ஐந்தும் (ஸ்வகுணேன) தத்தம் முக்கிய குணத்தால் (பத்தாঃ) கட்டுண்டவைகளாய் (சப்தாதிபிঃ) சப்தம் முதலிய (பஞ்சபிঃ ஏவ) ஐந்து விஷயங்களில் ஒன்றினாலேயே (பஞ்சத்வம்) மரணத்தை (ஆபுঃ) அடைந்திருக்கின்றன. (நரঃ) மனிதனோ (பஞ்சபிঃ) ஐந்தினாலும் (அஞ்சிதঃ) கவரப்பட்டவனாயிருக்கவே (கிம்) என்ன சொல்வது?

**குணம்** எனும் சொல் கயிறு என்றும் இயல்பு என்றும் பொருள் படும்.

**दोषेण तीव्रो विषयः कृष्णसर्पविषादपि ।**
**विषं निहन्ति भोक्तारं द्रष्टारं चक्षुषाप्ययम् ॥ ७७ ॥**

தோஷேண தீவ்ரோ விஷய: க்ருஷ்ணஸர்ப்ப
விஷாதபி | விஷம் நிஹந்தி போக்தாரம் த்ரஷ்டாரம்
சக்ஷுஷாப்யயம் || 77 ||

77. (தோஷேண) கெடுதலைச் செய்யும் தன்மையில் (க்ருஷ்ணஸர்ப்ப-விஷாத் அபி) கருநாகத்தின் விஷத்தைக்காட்டிலும் (விஷய:) ஐந்து விஷயங்களும் (தீவ்ர:) கொடிது, (விஷம்) விஷமானது (போக்தாரம்) உண்பவனை (நிஹந்தி) கொல்லுகிறது; (அயம்)விஷயமாகிய இதுவோ (சக்ஷுஷா) கண்ணால் (த்ரஷ்டாரம் அபி) பார்ப்பவனையுங்கூட—கொல்லுகிறது.

विषयाशा-महापाशाद् यो विमुक्तः सुदुस्त्यजात् ।
स एव कल्पते मुक्त्यै नान्यः षट्-शास्त्रवेद्यपि ॥७८॥

விஷயாசா-மஹாபாசாத் யோ விமுக்த: ஸுதுஸ்த்-
யஜாத் | ஸ ஏவ கல்பதே முக்த்யை நான்ய: ஷட் சாஸ்
த்ரவேத்யபி || 78 ||

78. (ஸுதுஸ்த்யஜாத்) அகற்றுவதற்கு மிகவும் கடினமான (விஷய - ஆசா-மஹா - பாசாத்) விஷய ஆசையாகிற கடும் பிணைப்பிலிருந்து (ய:) எவன் (விமுக்த:) விடுபட்டவனோ (ஸ: ஏவ) அவனே (முக்த்யை) முக்திக்கு (கல்பதே) உரியவனாகிறான். (ஷட்சாஸ்த்ர-வேத்யபி) ஆறுசாஸ்திரங்களையும் அறிந்தவனாயிருந்தாலும் (ந அன்ய:) வேறு ஒருவனும் உரியவனாகமாட்டான்.

ஒ. விகதேச்சா - பயக்ரோதோ ய: ஸதா முக்த ஏவ ஸ: |
ஆசையும் பயமும் கோபமும் இல்லாதவன் எவனோ அவன் எப்போதும் முக்தனே. —கீ.5.27.

आपात वैराग्यवतो मुमुक्षून् भवाब्धिपारं प्रतियातु-मुद्यतान् ।
आशाग्रहो मज्जयतेऽन्तराले निगृह्य कण्ठे विनिवर्त्य वेगात्
॥ ७९ ॥

ஆபாத வைராக்யவதோ முமுக்ஷூன் பவாப்தி-பாரம் ப்ரதியாது-முத்யதான் | ஆசாக்ரஹோ மஜ்ஜயதேऽந்தராலே நிக்ருஹ்ய கண்டே விநிவர்த்ய வேகாத் || 79 ||

79. (பவாப்திபாரம்) பிறவிக்கடலின் கரையை (ப்ரதியாதும்) கடப்பதற்கு (உத்யதான்) முயற்சி செய்யும் (முமுக்ஷூன்) முமுக்ஷுக்களை (ஆபாத-வைராக்யவதः) திடமான வைராக்கிய மில்லாதவர் களாயின் (ஆசாக்ரஹः) ஆசையெனும் முதலை (கண்டே நிக்ருஹ்ய) கழுத்தில் கவ்வி (வேகாத்) வேகமாக (விநிவர்த்ய) இழுத்து (அந்தராலே) நடுவழியில் (மஜ்ஜயதே) முழுக்கடித்து விடுகிறது.

विषयाख्य-ग्रहो येन सुविरक्त्यसिना हतः ।
स गच्छति भवाम्भोधेः पारं प्रत्यूहवर्जितः ॥ ८० ॥

விஷயாக்ய - க்ரஹோ யேன ஸுவிரக்த்யஸிநா ஹதः | ஸ கச்சதி பவாம்போதேः பாரம் ப்ரத்யூஹவர்ஜிதः || 80 ||

80. (விஷய-ஆக்ய-க்ரஹः) விஷயம் எனும் முதலை (யேன) எவனால் (ஸு விரக்தி-அஸிநா) நல்ல வைராக்கியம் எனும் வாளால் (ஹதः) கொல்லப்பட்டதோ (ஸः) அவன் (ப்ரத்யூஹ-வர்ஜிதः) தடையேதுமில்லாதவனாய் (பவ-அம்போதேः) பிறவிக்கடலின் (பாரம்) கரையை (கச்சதி) அடைகிறான்.

विषम-विषयमार्गे-गच्छतोऽनच्छबुद्धेः
प्रतिपदमभियातो मृत्युरप्येष विद्धि ।
हितसुजन-गुरूक्त्या गच्छतः स्वस्य युक्त्या
प्रभवति फलसिद्धिः सत्यमित्येव विद्धि ॥ ८१ ॥

விஷம-விஷயமார்க்கைர்-கச்சதோனऽச்சபுத்தே:
ப்ரதிபத-மபியாதோ ம்ருத்யுரப் - யேஷ வித்தி | ஹித-
ஸுஜன-குருக்த்யா கச்சத: ஸ்வஸ்ய யுக்த்யா ப்ரபவதி
பலஸித்தி: ஸத்ய-மித்யேவ வித்தி || 81 ||

81. (விஷம-விஷய-மார்க்கை:) கொடிய விஷயமாகிய வழியில் (கச்சத:) செல்லும் (அனச்ச புத்தே:) புத்திக்கலக்கமுடையவனுடைய (ப்ரதி பதம்) ஒவ்வொரு அடியிலும் (ம்ருத்யு: அபி) யமனும் (அபியாத:) தொடர்ந்துவருகின்ருன் என்று (ஏஷ வித்தி) இதை அறிவாயாக. (ஹித-ஸுஜன-குரு-உக்த்யா) நன்மையை விரும்பும் நல்லவர்களின் சொல்லாலும் குருவின் உபதேசத்தாலும் (ஸ்வஸ்ய யுக்த்யா) தன்னுடைய யோசனையாலும் (கச்சத:) செல்பவனுக்கு (பலஸித்தி:) பயன் கூடிவருதல் (ப்ரபவதி) தானே உண்டாகிறது- (ஸத்யம் இதி ஏவ) இது உண்மையே என்று (வித்தி) அறிவாயாக.

मोक्षस्य कांक्षा यदि वै तवास्ति
त्याजातिदूराद्विषयान्विषं यथा ।
पीयूषवत्तोषदया-क्षमार्जव-
प्रशान्ति-दान्ती-र्भज-नित्य-मादरात् ॥ ८२ ॥

மோக்ஷஸ்ய காங்க்ஷா யதி வை தவாஸ்தி த்யஜாதி
தூராத்-விஷயான் விஷம் யதா | பீயூஷவத்-தோஷ-
தயா-க்ஷமார்ஜவ-ப்ரசாந்தி-தாந்தீர்-பஜ நித்ய-மாதராத் ||
82 ||

82. (மோக்ஷஸ்ய காங்க்ஷா) முக்தியில் விருப்பம் (தவ) உனக்கு (யதி வை அஸ்தி) இருக்குமேயானல் (விஷயான்) விஷயங்களை (விஷம் யதா) விஷத்தைப் போல (அதி தூராத்) வெகு தூரத்தில் (த்யஜ) ஒதுக்

கித் தள்ளிவிடு. (பீயூஷவத்) அமிருதத்தைப்போல (தோஷ-) திருப்தி (தயா-) இரக்கம் (க்ஷமா-) பொறுமை (ஆர்ஜவ-) நேர்மை (ப்ரசாந்தி) மனவமைதி (தாந்தீ:) புலனடக்கம் ஆகியவற்றை (நித்யம்) எப்பொழுதும் (ஆதராத்) பரிவுடன் (பஜ) கைக்கொள்வாயாக.

ஒ. 'நிஷித்த-பரிஹாரேண விஹிதே லபதே மதிம்' விலக்க வேண்டியதை விலக்கினல் கொள்ள வேண்டியதில் ஒருவன் புத்தியை யடைவான். —ஸூத ஸம்ஹிதை.

## ॥ देहासक्ति-निन्दा ॥

**अनुक्षणं यत्परिहृत्य कृत्य-मनाद्यविद्याकृत-बन्धमोक्षणम् ।**
**देहः परार्थोऽयममुष्य पोषणे यः सज्जते स स्वमनेन हन्ति ॥ ८३ ॥**

### தேஹாஸக்தி-நிந்தா

அனுக்ஷணம் யத்பரிஹ்ருத்ய க்ருத்ய-மனாத்யவித்-யாக்ருத-பந்த மோக்ஷணம் | தேஹ: பரார்த்தோऽய மமுஷ்ய போஷணே ய: ஸஜ்ஜதே ஸ ஸ்வமனேன ஹந்தி || 83 ||

### உடற் பற்றின் நிந்தை

83. (அனாதி-அவித்யா-க்ருத-) தொடக்கம் காண முடியாத அவித்தையால் விளைந்த (பந்த-) கட்டிலிருந்து (மோக்ஷணம்) விடுபடுவதாகிய (அனுக்ஷணம் யத் க்ருத்யம்) ஒவ்வொருநொடியிலும் செய்யவேண்டிய இச் செயலை (பரிஹ்ருத்ய) விட்டுவிட்டு (பரார்த்த:) பிறர்க்குப் பொருளாக (அயம் தேஹ:) இவ்வுடலிருக்கையில் (அமுஷ்ய போஷணே) அதைப் போஷிப்பதில் (ய:) எவன் (ஸஜ்ஜதே) பற்று வைக்கிறானோ (ஸ:)

அவன் (அனேன) அதனுல் (ஸ்வம்) தன்னையே (ஹந்தி) கொல்பவனுகிருன்.

பரார்த்த:—மண்ணுக்கும் நெருப்புக்கும் புழுக்களுக்கும் முடிவில் இரையாவதால்.

**शरीर-पोषणार्थी सन् य आत्मानं दिदृक्षति ।**
**ग्राहं दारुधिया धृत्वा नदीं तर्तुं स इच्छति ॥ ८४ ॥**

சரீர-போஷணுர்த்தீ ஸன் ய ஆத்மானம் தித்ருக்ஷதி | க்ராஹம் தாரு-தியா த்ருத்வா நதீம் தர்த்தும் ஸ இச்சதி || 84 ||

84. (சரீர-போஷணுர்த்தீ ஸன்) உடலைப் போஷிப்பதில் பற்றுடையவனுக இருந்துகொண்டு (ய:) எவன் (ஆத்மானம்) ஆத்மாவை (தித்ருக்ஷதி) காண ஆசைப்படுகின்ருனே (ஸ:) அவன் (க்ராஹம்) ஒரு முதலையை (தாருதியா) தெப்பக் கட்டை என்ற புத்தியால் (த்ருத்வா) பிடித்துக்கொண்டு (நதீம்) ஆற்றை (தர்த்தும்) கடப்பதற்கு (இச்சதி) விரும்புகிருன்.

நதீம் தர்த்தும் ஸ கச்சதி—பாட பேதம்.

**मोह एव महामृत्यु-र्मुमुक्षोर्वपुरादिषु ।**
**मोहो विनिर्जितो येन स मुक्तिपद-मर्हति ॥ ८५ ॥**

மோஹ ஏவ மஹாம்ருத்யுர் - முமுக்ஷோர்-வபுராதிஷு | மோஹோ விநிர்ஜிதோ யேன ஸ முக்தி-பத-மர்ஹதி || 85 ||

85. (வபு: ஆதிஷு) உடல் முதலியவற்றில் (மோஹ: ஏவ) மதியயக்கமே (முமுக்ஷோ:) முக்தியில் நாட்டமுடையவனுக்கு (மஹாம்ருத்யு:) கொடிய யமன். (யேன) எவனுல் (மோஹ:) இந்த மதிமயக்கமானது

(விநிர்ஜிதஃ) வெல்லப்பட்டதோ (ஸஃ) அவன் (முக்தி பதம்) முக்திப்பதவிக்கு (அர்ஹதி) உரியவனுகின்றுன்.

**மதிமயக்கம்**—உடல் நான் என்றும், உடல் என்னுடையது என்றும் கருதுவது.

**मोहं जहि महामृत्युं देहदारसुतादिषु ।**
**यं जित्वा मुनयो यान्ति तद्विष्णोः परमं पदम् ॥८६॥**

மோஹம் ஜஹி மஹாம்ருத்யும் தேஹதார-ஸுதாதிஷு | யம் ஜித்வா முனயோ யாந்தி தத்விஷ்ணேஃ பரமம் பதம் || 86 ||

86. (தேஹ-தார-ஸுத-ஆதிஷு) உடல், மனைவி, மக்கள் ஆகியவற்றில் (மோஹம்) மதிமயக்கமாகிற (மஹாம்ருத்யும்) கொடிய யமனை (ஜஹி) வெல்லுவாயாக. (யம்) அவனை (ஜித்வா) வென்றே (முனயஃ) முனிவர்கள் (விஷ்ணேஃ பரமம் பதம்) விஷ்ணுவின் பரமபதம் எனப்படும் (தத்) அந்நிலையை (யாந்தி) அடைகிறுர்கள்.

**முனய:**—'மனனசீலா:' மனதையடக்கி தியானம் செய்யும் இயல்புடையவர்கள்.

**விஷ்ணேஃ பரமம் பதம்**—ஒ. 'விக்ஞான ஸாரதிர் யஸ்து மன: ப்ரக்ரஹவான் நரஃ| ஸோऽத்வன: பாரமாப்னேதி தத் விஷ்ணேஃ பரமம் பதம்||' எந்த மனிதன் விவேகமுள்ள புத்தியை ஸாரதியாகவும் அடக்கப்பட்ட மனதைக் கடிவாளமாகவும் உடையவனே அவன் ஸம்ஸாரமாகிற கடுவழியின் எல்லை நிலத்தை யடைகிறுன். அதுவே எங்கும் நிறைந்த பரம்பொருளுடன் ஒன்றுபட்ட பரமபதம் எனும் நிலையாம். கட. உப. 3.9.

## स्थूल शरीरम्

**त्वङ्मांस-रुधिर-स्नायु-मेदो-मज्जास्थि-संकुलम् ।**
**पूर्णं मूत्रपूरिषाभ्यां स्थूलं निन्द्यमिदं वपुः ॥ ८७ ॥**

### ஸ்தூல சரீரம்

த்வங்மாம்ஸ - ருதிர - ஸ்நாயு - மேதோ - மஜ்ஜாஸ்தி-ஸங்குலம் | பூர்ணம் மூத்ர-புரீஷாப்யாம் ஸ்தூலம் நிந்த்ய-மிதம் வபு: || 87 ||

### ஸ்தூல சரீரம்

87. (த்வக்-) தோல் (மாம்ஸ-) மாம்ஸம் (ருதிர-) இரத்தம் (ஸ்நாயு-) நரம்பு (மேதஸ்-) கொழுப்பு (மஜ்ஜா-) ஊன் (அஸ்தி) எலும்பு (ஸங்குலம்) ஆகியவற்றின் தொகுதியும் (மூத்ர-புரீஷாப்யாம்) மூத்திரத்தாலும் மலத்தாலும் (பூர்ணம்) நிறைந்ததும் (நிந்த்யம்) பழிக்கத்தக்கதுமான (இதம்) இந்த (வபு:) உடல் (ஸ்தூலம்) ஸ்தூலம் சரீரம் எனப்படுவது.

पंचीकृतेभ्यो भूतेभ्यः स्थूलेभ्यः पूर्वकर्मणा ।
समुत्पन्नमिदं स्थूलं भोगायतन-मात्मनः ।
अवस्था जागरस्तस्य स्थूलार्थानुभवो यतः ॥ ८८ ॥

பஞ்சீக்ருதேப்யோ பூதேப்ய: ஸ்தூலேப்ய: பூர்வ-கர்மணா | ஸமுத்பன்னமிதம் ஸ்தூலம் போகாயதன-மாத்மன: | அவஸ்தா ஜாகரஸ்தஸ்ய ஸ்தூலார்த்தானு-பவோ யத: || 88 ||

88. (பஞ்சீக்ருதேப்ய: பூதேப்ய:) பஞ்சீகரணம் செய்யப்பட்ட (ஸ்தூலேப்ய:) ஸ்தூலமான (பூதேப்ய:) பொருள்களினின்று (பூர்வகர்மணா) முன்வினையால் (ஸமுத்பன்னம்) தோற்றுவிக்கப்பட்டது (இதம்) இந்த (ஸ்தூலம்) ஸ்தூலசரீரம்; (ஆத்மன:) ஜீவனுக்கு (போக-ஆயதனம்) இன்பதுன்ப அனுபவத்திற்கு இருப்பிடமானது. (யத:) எந்நிலையில் (ஸ்தூல-அர்த்த-

அனுபவ:) ஸ்தூலமான பொருள்களின் அனுபவம் ஏற்படுகிறதோ அது (தஸ்ய) அந்த ஜீவனுடைய (ஜாகர: அவஸ்தா) ஜாக்ராவஸ்தை அல்லது விழிப்பு நிலை.

ஜாக்ராவஸ்தை—'இந்த்ரியைரர்த்தோபலப்திர் ஜாகரிதம்" இந்திரியங்கள் வெளிப்போந்து போகவிஷயங்களைத் தேடியடையும் நிலை ஜாக்ரம்.

பஞ்சீகரணம்—சுலோகம் 74 பார்க்க.

**बाह्येन्द्रियैः स्थूलपदार्थसेवां स्रक् चन्दनस्त्र्यादि-विचित्ररूपाम् ।**
**करोति जीवः स्वयमेतदात्मना तस्मात्प्रशस्ति-र्वपुषोऽस्य जागरे ॥ ८९ ॥**

பாஹ்யேந்த்ரியை: ஸ்தூல - பதார்த்தஸேவாம் ஸ்ரக்-சந்தனஸ்த்ர்யாதி-விசித்ரரூபாம் | கரோதி ஜீவ: ஸ்வயமேத-தாத்மனு தஸ்மாத் ப்ரசஸ்திர்-வபுஷோऽஸ்ய ஜாகரே || 89 ||

89. (ஸ்வயம்) தான் (ஏதத் ஆத்மனு) இந்த ஸ்தூலசரீரமே என்று அத்துடன் ஒன்று பட்டவனுய் (ஜீவ:) ஜீவனுனவன் (பாஹ்ய இந்த்ரியை:) வெளி இந்திரியங்களால் (ஸ்ரக்-) மாலை (சந்தன-) சந்தனம் (ஸ்த்ரீ-ஆதி-) ஸ்திரீ முதலிய (விசித்ர-ரூபாம்) பல-வகைப்பட்ட (ஸ்தூல-பதார்த்த-ஸேவாம்) ஸ்தூலமான பொருள்களின் சேவையை (கரோதி) செய்கிறுன். (தஸ்மாத்) ஆகையால் (ஜாகரே) விழிப்பு நிலையில் (அஸ்ய வபுஷ:) இவ்வுடலுக்கு (ப்ரசஸ்தி:) முக்கியத்துவம்.

ஏததாத்மனு—பிரத்யகாத்மாவாகிய ஜீவன் மனதின் மூலம் ஸ்தூல சரீரத்தில் பிரதிபலித்த சைதன்யத்தால் அதையே ஆத்மா (தான்) எனக் கொள்கிறுன். ஸ்வப்னத்தில் ஸ்தூலதேகத்திற்கு

மனதுடன் தொடர்பு விட்டுப்போனதால் அங்கு ஸ்வரூபப்பிரதி பலனமும் இல்லை. அப்பொழுது அது போகத்திற்குக்காரணமாவதில்லை. வாஸனமயமான வேறு தேவசரீரமோ மிருகசரீரமோ கூட ஸ்வப்னத்தில் போகத்திற்குக் காரணமாவது பிரசித்தம். ஆகையால் ஸ்தூல சரீரத்திற்கு முக்கியத்துவம் ஜாக்ரத்தில் மட்டும்.

**सर्वोऽपि बाह्यसंसारः पुरुषस्य यदाश्रयः ।**
**विद्धि देहमिदं स्थूलं गृहवद् गृहमेधिनः ॥ ९० ॥**

ஸர்வோऽபி பாஹ்யஸம்ஸாரঃ புருஷஸ்ய யதாச்ரயঃ | வித்தி தேஹமிதம் ஸ்தூலம் க்ருஹவத் க்ருஹமேதிநঃ || 90 ||

90. (பாஹ்ய-ஸம்ஸாரঃ) வெளி உலக விவகாரம் (ஸர்வঃ அபி) அனைத்தும் (புருஷஸ்ய) ஜீவனுக்கு (யத் ஆச்ரயঃ) எதைப்பற்றியதாக உளதோ (இதம்) அப்படிப் பட்ட இந்த (ஸ்தூலம் தேஹம்) ஸ்தூல உடலை (க்ருஹ மேதினঃ) இல்லறத்தானுக்கு (க்ருஹவத்) வீட்டைப் போன்றது என்று (வித்தி) உணர்வாயாக.

வீட்டில் பற்றினுல் விவகாரம் வளர்வது போல் உடல்பற்றிஞலும்.

**स्थूलस्य सम्भव-जरामरणानि धर्माः**
**स्थौल्यादयो बहुविधाः शिशुताद्यवस्थाः ।**
**वर्णाश्रमादि-नियमा बहुधाऽऽमयाः स्युः**
**पूजावमान-बहुमानमुखा विशेषाः ॥ ९१ ॥**

ஸ்தூலஸ்ய ஸம்பவ-ஜராமரணனி தர்மாঃ ஸ்தௌல்யாத்யோ பஹுவிதாঃ சிசுதாத்யவஸ்தாঃ | வர்ணுச்ரமாதி-நியமா பஹுதாऽऽமயாঃ ஸ்யுঃ பூஜாவமான-பஹுமான-முகா விசேஷாঃ || 91 ||

91. (ஸம்பவ-) பிறப்பு (ஜரா-) மூப்பு (மரணானி) சாவு ஆகிய (தர்மா꞉) இயல்புகள்; (ஸ்தௌல்யாதய꞉) பருமன் முதலியஸவ; (பஹுவிதா꞉) பலவகையான (சிசுதா-ஆதி- அவஸ்தா꞉) குழந்தைப்பருவம் முதலிய நிலைகள்; (வர்ண - ஆச்ரம - ஆதி - நியமா꞉) வர்ணம் ஆசிரமம் முதலிய நியமங்கள்; (பஹுதா-) பல வகையான (ஆமயா꞉) நோய்கள்; (பூஜா-) பூஜை (அவமான-) அவமானம் (பஹுமான-முகா꞉) வெகு மானம் முதலிய (விசேஷா꞉) விசேஷங்கள்-ஆகிய இவையனைத்தும்-(ஸ்தூலஸ்ய) ஸ்தூலதேஹத்திற்கு (ஸ்யு꞉) ஏற்படுவன.

**நியமா பஹுதா யமா꞉**—பலவகையான நியமங்களும் யமங்களும் (பாடபேதம்).

**வர்ணம்**—பிராம்மணன், க்ஷத்திரியன், வைசியன், சூத்திரன் என்ற நான்கு.

**ஆசிரமம்**—பிரம்மசாரி, கிருஹஸ்தன், வானப்பிரஸ்தன் ஸந்நியாஸி என்ற நான்கு.

## दशेन्द्रियाणि

**बुद्धीन्द्रियाणि श्रवणं त्वगक्षि घ्राणं च जिह्वा विषयाव-**
**बोधनात् ।**
**वाक्पाणि-पादा गुद-मप्युपस्थः कर्मेन्द्रियाणि प्रवणेन कर्मसु**
**॥ ९२ ॥**

### தசேந்த்ரியாணி

புத்தீந்த்ரியாணி ச்ரவணம் த்வகக்ஷி க்ராணஞ் ச ஜிஹ்வா விஷயாவ போதனாத் | வாக்பாணி-பாதா-குத-மப்யுபஸ்த꞉ கர்மேந்த்ரியாணி ப்ரவணேன கர்மஸு || 92 ||

**பத்து இந்திரியங்கள்**

92. (ச்ரவணம்) காதும் (த்வக்) தோலும் (அக்ஷி) கண்ணும் (க்ராணம்) மூக்கும் (ஜிஹ்வா ச) நாக்கும் (விஷய-அவபோதனுத்) விஷயங்களை உணர்விப்பதால் (புத்தி-இந்த்ரியாணி) ஞானேந்திரியங்கள்—எனப்படு கின்றன. (வாக்) வாக்கு (பாணி) கை (பாதஃ) கால் (குதம்) மலத்துவாரம் (உபஸ்தம் அபி) ஆண் பெண் குறியுடன் (கர்மஸு) செயல்களில் (ப்ரவணேன) புகு வன வாதலால் (கர்ம இந்த்ரியாணி) கர்மேந்திரியங் கள்—எனப்படுகின்றன.

வாக்-பாணி-பாதா குத-மப் யுபஸ்தம் கர்மேந்த்ரியாணி ப்ரவ ணானி கர்மஸு —பா. பே.

**निगद्यतेऽन्तः करणं मनोधी-रहंकृति-श्चित्तमिति स्ववृत्तिभिः ।**
**मनस्तु संकल्पविकल्पनादिभि-र्बुद्धिः पदार्थाध्यवसाय-धर्मतः ॥ ९३ ॥**

**अत्राभिमाना-दहमित्यहंकृतिः ।**
**स्वार्थानुसन्धानगुणेन चित्तम् ॥ ९४ ॥**

நிகத்யதே ऽந்தஃகரணம் மனோதீ-ரஹங்க்ருதிச்-சித்தமிதி ஸ்வவ்ருத்திபிஃ | மனஸ்து ஸங்கல்ப-விகல்பனா திபிர்-புத்திஃ பதார்த்தாத்யவஸாய-தர்மதஃ || 93 ||

அத்ராபிமானா-தஹமித்யஹங்க்ருதிஃ | ஸ்வார்த்தா னுஸந்தானகுணேன சித்தம் || 94 ||

93-94. (அந்தஃ கரணம்) ஒரே அகக்கரணமானது (மனஃ) மனது என்றும் (தீஃ) புத்தி என்றும் (அஹங் க்ருதிஃ) அஹங்காரமென்றும் (சித்தம் இதி) சித்தம் என்றும் (ஸ்வவ்ருத்திபிஃ) தன்னுடைய செயலுக்குத்

தக்கவாறு (நிகத்யதே) வெவ்வேறு பெயரால் கூறப் படுகிறது; (ஸங்கல்ப-விகல்பன-ஆதிபிஃ)—ஒரு பொருளைப் பற்றி—இப்படிப்பட்டதா அல்லது மாறுனதா என்று எண்ணுவதால் (மனஃ) மனது; (பதார்த்த-அத்யவஸாய-தர்மதஃ) ஒருபொருள் இப்படிப்பட்டது தான் என்று நிச்சயிக்கும் குணத்தால் (**புத்திஃ**) புத்தி; (அத்ர-) இவ்வுடல் முதலியவற்றில் (அஹம் இதி) நான் என்று (அபிமானுத்) அபிமானத்தால் (அஹங்க்ருதிஃ) அஹங்காரம்; (ஸ்வ-அர்த்த-அனுஸந்தான குணேன) தனக்குப் பிரியமான பொருளைத் தொடர்ந்து சிந்தித்து ஞாபகத்தில் வைக்கும் குணத்தால் (சித்தம்) சித்தம்.

## पंचप्राणाः

**प्राणापान-व्यानोदान-समाना भवत्यसौ प्राणः ।**
**स्वयमेव वृत्तिभेदा-द्विकृतिभेदात्सुवर्ण-सलिलादिवत् ॥ ९५ ॥**

### பஞ்சப்ராணுஃ

ப்ராணுபான-வ்யானேதான-ஸமானு பவத்யஸௌ ப்ராணஃ | ஸ்வயமேவ வ்ருத்திபேதாத்-விக்ருதி-பேதாத் ஸுவர்ண-ஸலிலாதிவத் || 95 ||

### ஐந்து பிராணன்கள்

95. (ப்ராண-) பிராணனும் (அபான-) அபானனும் (வ்யான-) வியானனும் (உதான-) உதானனும் (ஸமானு-) ஸமானனுமாக (அஸௌ ப்ராணஃ) இந்த ஒரு பிராணன் (ஸ்வயம் ஏவ) தானே (வ்ருத்திபேதாத்) செயலின் வேறுபாட்டாலும் (விக்ருதி பேதாத்) வடிவின் வேறு பாட்டாலும் (ஸுவர்ண-ஸலில-ஆதிவத்) தங்கம் தண்ணீர் முதலியவற்றைப் போல் (பவதி) ஆகிறது.

## सूक्ष्मशरीरम्

**वागादि पंच श्रवणादि पंच प्राणादि पंचाभ्रमुखानि पंच ।
बुद्ध्याद्यविद्यापि च कामकर्मणी पुर्यष्टकं सूक्ष्मशरीरमाहुः ॥९६॥**

ஸூக்ஷ்மசரீரः

வாகாதி பஞ்ச ச்ரவணாதி பஞ்ச ப்ராணாதி பஞ்சா-ப்ரமுகானி பஞ்ச | புத்த்யாத்யவித்யாபி ச காமகர்மணீ புர்யஷ்டகம் ஸூக்ஷ்ம-சரீரமாஹு: || 96 ||

ஸூக்ஷ்ம சரீரம்

96. (வாக்-ஆதி-பஞ்ச) வாக்கு முதலிய ஐந்து கர்மேந்திரியங்கள், (ச்ரவண-ஆதி-பஞ்ச) காது முதலிய ஐந்து ஞானேந்திரியங்கள், (ப்ராண-ஆதி-பஞ்ச) பிராணன் முதலிய ஐந்து, (அப்ர-முகானி பஞ்ச) ஆகாயம் முதலிய ஐந்து பூதங்கள், (புத்தி ஆதி) புத்தி முதலிய நான்கு பகுதி கொண்ட அந்தக்கரணம் (அவித்யா) அவித்தை (அபி ச) மேலும் (காம-) விருப்பம் (கர்மணீ) செயல் ஆகிய (புர்யஷ்டகம்) எட்டு பாகங்கொண்ட பட்டணத்தை (ஸூக்ஷ்ம சரீரம்) ஸூக்ஷ்ம சரீரம் என்று (ஆஹு:) கூறுகின்றனர்.

**इदं शरीरं शृणु सूक्ष्मसंज्ञितं लिंगं त्वपंचीकृत-भूतसम्भवम् ।
सवासनं कर्मफला-नुभावकं स्वाज्ञानतोऽनादि-रुपाधि-
रात्मनः ॥ ९७ ॥**

இதம் சரீரம் ச்ருணு ஸூக்ஷ்மஸம்ஜ்ஞிதம் லிங்கம் த்வபஞ்சீக்ருத-பூதஸம்பவம் | ஸவாஸனம் கர்மபலாநு-பாவகம் ஸ்வாஜ்ஞானதோऽநாதி-ருபாதி-ராத்மன: ||97||

97. (ச்ருணு) கேள். (ஸூக்ஷ்ம-ஸம்ஜ்ஞிதம்) ஸூக்ஷ்மம் என்று குறிப்பிடப்பட்டதும்-அல்லது-(லிங்கம்) லிங்கசரீரம் எனப்படுவதும் ஆகிய (இதம்) இந்த (சரீரம்) உடல் (அபஞ்சீக்ருத-பூத-ஸம்பவம்) பஞ்சீகரணம் செய்யப்படாத மூலப்பொருள்களினின்று தோன்றியது, (ஸவாஸனம்) பூர்வகர்ம வாஸனையுடன் கூடியது, (கர்மபல-அனுபாவகம்) கருமத்தின் பயனை அனுபவிக்கச்செய்வது, (ஸ்வ-அஜ்ஞானதஃ) தன்னைத்தான் அறியாமையால் (ஆத்மனஃ) தனக்கு (அனாதிஃ உபாதிஃ) எப்பொழுது ஏற்பட்டதென்று தெரியாத ஒரு தொடர்பு.

**स्वप्नो भवत्यस्य विभक्त्यवस्था स्वमात्रशेषेण विभाति यत्र ।**
**स्वप्ने तु बुद्धिः स्वयमेव जाग्रत् कालीन-नानाविध-वासनाभिः ।**
**कर्त्रादिभावं प्रतिपद्य राजते यत्र स्वयं ज्योतिरयं परात्मा**
**॥ ९८ ॥**

ஸ்வப்னோ பவத்யஸ்ய விபக்த்யவஸ்தா ஸ்வமாத்ர-சேஷேண விபாதி யத்ர | ஸ்வப்னே து புத்திஃ ஸ்வய-மேவ ஜாக்ரத்-காலீன-நானாவித-வாஸனாபிஃ | கர்த்ராதிபாவம் ப்ரதிபத்ய ராஜதே யத்ர ஸ்வயஞ் ஜ்யோதிரயம் பராத்மா || 98 ||

98. (அஸ்ய) இந்த ஜீவனுக்கு (ஸ்வப்னஃ) கனவானது (விபக்தி-அவஸ்தா) தனியான ஒரு நிலையாக (பவதி) ஆகிறது. (யத்ர) அந்நிலையில் (ஸ்வமாத்ர-சேஷேண) ஸ்தூலதேக அபிமானமில்லாமல் தான் தனித்திருந்து (விபாதி) பிரகாசிக்கிறது; (ஸ்வப்னே து) கனவில் (புத்திஃ) புத்தியானது (ஜாக்ரத்-காலீன-) விழிப்பு நேரத்தின் (நானாவித-வாஸனாபிஃ) பலவகை வாசனையுடன் (கர்த்ரு-ஆதி-பாவம்) கர்த்தா முதலிய எண்ணத்தை (ப்ரதிபத்ய) அடைந்து (ராஜதே) பிரகா

சிக்கிறது; (யத்ர) அங்கு (பராத்மா) பரமாத்மா (ஸ்வயஞ்ஜ்யோதிः) தன்னொளியால் பிரகாசிக்கிறது. (புத்தி பரமாத்மாவின் ஒளியால் பிரகாசிக்கிறது).

ஸ்வப்னவஸ்தையில் ஸூக்ஷ்மசரீரத்திற்கு முக்கியத்துவம்.

**धीमात्रकोपाधि-रशेषसाक्षी न लिप्यते तत्कृत-कर्मलेशैः ।**
**यस्मादसंगस्तत एव कर्मभिर्न लिप्यते किंचिदुपाधिना कृतैः**
**॥ ९९ ॥**

தீமாத்ரகோபாதி-ரசேஷஸாக்ஷீ ந லிப்யதே தத்-க்ருத-கர்மலேசைः | யஸ்மா-தஸங்கஸ்தத ஏவ கர்மபிர் ந லிப்யதே கிஞ்சிதுபாதினா க்ருதைः || 99 ||

99. (தீ-மாத்ரக-உபாதிः) புத்தியை மட்டும் போர்வையாய்க் கொண்டதும் (அசேஷஸாக்ஷீ) அனைத்தையும் பார்த்துக்கொண்டிருப்பதுமான பரமாத்மா (தத்க்ருத-)அந்த புத்தியால் செய்யப்பட்ட (கர்மலேசைः) கர்மத்தின் சிறு பகுதியாலும் (ந லிப்யதே) தொடப்படுவதில்லை; (யஸ்மாத் அஸங்கः) இயற்கையாகவே பற்றற்ற தன்மையுடையதாதலால்; (உபாதினக்ருதைः) உபாதியாகிற புத்தியால் செய்யப்பட்ட (கர்மபிः) செயல்களால் (தத ஏவ) அக்காரணத்தாலேயே (கிஞ்சித்) சிறிதும் (ந லிப்யதே) தொடப்படுவதில்லை.

புத்தி—இங்கு மனம் சித்தம் அஹங்காரம் ஆகிய மூன்றுடன் கூடிய புத்தியாகிய அந்தக்கரணம் என்று கொள்ள வேண்டும்.

**सर्वव्यापृतिकरणं लिंगमिदं स्याच्चिदात्मनः पुंसः ।**
**वास्यादिकमिव तक्षणस्तेनैवात्मा भवत्यसंगोऽयम् ॥ १०० ॥**

ஸர்வவ்யாப்ருதிகரணம் லிங்கமிதம் ஸ்யாச்சிதாத்மனः பும்ஸः | வாஸ்யாதிகமிவ தக்ஷணஸ்-தேனைவாத்மா பவத்யஸங்கோऽயம் || 100 ||

100. (சிதாத்மனঃ) சித்ரூபியான (பும்ஸঃ) ஜீவாத்மாவிற்கு (இதம்) இந்த (லிங்கம்) ஸூக்ஷ்மசரீரம் (தக்ஷ்ணঃ) ஒரு தச்சனுக்கு (வாஸ்யாதிகம் இவ) வாச்சி முதலிய கருவிகளைப்போல் (ஸர்வ-வ்யாப்ருதி-கரணம்) எல்லாச்செயல்களுக்கும் கருவியாக (ஸ்யாத்) உளது. (தேன ஏவ) அதனாலேயே (அயம் ஆத்மா) இந்த ஆத்மாவானது (அஸங்கঃ) பற்றற்றதாக (பவதி) ஆகிறது.

லிங்கசரீர சம்பந்தத்தால் தான் எல்லா வியவஹாரமும் ஸுஷுப்தியில் லிங்கசரீரத்தின் தொடர்பில்லாததால் அங்கு வியவஹாரம் இல்லை. ஆனால் அங்கு அவ்யக்தம் எனும் காரண சரீரம் உண்டு.

வி.சூ. 120 பார்க்க.

अन्धत्व-मन्दत्व-पटुत्व-धर्माः सौगुण्य-वैगुण्य-वशाद्धि चक्षुषः ।
बाधिर्य-मूकत्व-मुखास्तथैव श्रोत्रादि-धर्मा न तु वेत्तुरात्मनः
॥ १०१ ॥

அந்தத்வ-மந்தத்வ-படுத்வ-தர்மாঃ ஸௌகுண்ய-வைகுண்ய-வசாத்தி சக்ஷுஷঃ | பாதிர்ய-மூகத்வ-முகாஸ்-ததைவ ச்ரோத்ராதி-தர்மா ந து வேத்து-ராத்மனঃ ||
101 ||

101. (அந்தத்வ-) குருட்டுத்தன்மை (மந்தத்வ-) பார்வைக்குறைவு (படுத்வ-) நல்ல பார்வை முதலிய (தர்மாঃ) குணங்கள் (சக்ஷுஷঃ) கண்ணினுடைய (ஸௌ குண்ய-வைகுண்ய-வசாத்-ஹி) செம்மை செம்மையின்மை என்ற நிலையைப் பொருத்ததே ஆகும்; (ததா ஏவ) அவ்வாறே (பாதிர்ய-) செவிட்டுத் தன்மை (மூகத்வ-) ஊமைத்தன்மை (முகாঃ) முதலியவை (ச்ரோத்ர-ஆதி-) காது நாக்கு முதலியவற்றின் (தர்மாঃ) குணங்கள்; (வேத்துঃ) அறிபவனாகிய (ஆத்மனঃ) ஆத்மாவினுடையவை (ந து) ஆகமாட்டா.

**उच्छ्वास-निःश्वास-विजृम्भण-क्षुत् प्रस्यन्दनाद्युत्क्रमणादिकाः क्रियाः ।**
**प्राणादि कर्माणि वदन्ति तज्ज्ञाः प्राणस्य धर्मावशनापिपासे ॥ १०२ ॥**

உச்ச்வாஸ-நிஃச்வாஸ-விஜ்ரும்பண-க்ஷுத் ப்ரஸ்யந்தனுத்யுத்க்ரமணுதிகாஃ க்ரியாஃ | ப்ராணுதி கர்மாணி வதந்தி தஜ்ஜ்ஞாஃ ப்ராணஸ்ய தர்மாவசனுபிபாஸே || 102 ||

102. (உச்ச்வாஸ-) உள் மூச்சு (நிஃச்வாஸ-) வெளி மூச்சு (விஜ்ரும்பண-) கொட்டாவி (க்ஷுத்-) பசி (ப்ரஸ்யந்தன-ஆதி) தும்முதல் முதலியவையும் (உத்க்ரமணுதிகாஃ) உடலை விட்டுக்கிளம்புதல் முதலியவையுமான (க்ரியாஃ) செயல்கள் (ப்ராண-ஆதி-) பிராணன் அபானன் முதலியவற்றின் (கர்மாணி) காரியங்களாக (தஜ்ஜ்ஞாஃ) அதையறிந்தவர்கள் (வதந்தி) கூறுகிருர்கள். (அசனுபிபாஸே) பசியும் தாகமும் (ப்ராணஸ்ய) முக்கியப்பிராணனுடைய (தர்மாஃ) குணங்கள்.

## अहंकारः

**अन्तःकरणमेतेषु चक्षुरादिषु वर्ष्मणि ।**
**अहमित्यभिमानेन तिष्ठत्याभास-तेजसा ॥ १०३ ॥**

### அஹங்காரஃ

அந்தஃகரண-மேதேஷு சக்ஷுராதிஷு வர்ஷ்மணி | அஹமித்யபிமானேன திஷ்டத்யாபாஸ-தேஜஸா || 103 ||

**அஹங்காரம்**

103. (அந்தஃ கரணம்) அகக்கரணமானது (ஏதேஷு) இந்த (சக்ஷுராதிஷு) கண் முதலியவை களிலும் (வர்ஷ்மணி) உடலிலும் (ஆபாஸ-தேஜஸா) ஆத்மாவிடமிருந்து பிரதிபலித்த ஒளியால் (அஹம் இதி) நான் என்ற (அபிமானேன) அபிமானத்துடன் (திஷ்ட்டதி) நிலை பெற்றுளது.

**अहंकारः स विज्ञेयः कर्ता भोक्ताभिमान्ययम् ।**
**सत्त्वादि-गुण-योगेन चावस्था-त्रय-मश्नुते ॥ १०४ ॥**

அஹங்காரஃ ஸ விஜ்ஞேயஃ கர்த்தா **போக்தாபி**-மான்யயம் | ஸத்வாதி-குண-யோகேன சாவஸ்தா-த்ரய-மச்னுதே || 104 ||

104. (அஹங்காரஃ) அஹங்காரம் (ஸஃ) அது என்று (விஜ்ஞேயஃ) உணரவேண்டும்; (அயம்) இது (கர்த்தா-) செயல் புரிபவன் (போக்தா) அனுபவிப்ப வன் என்ற (அபிமானீ) அபிமானம் கொள்வது; (ச) மேலும் (ஸத்வாதி-) ஸத்துவம் முதலிய (குண-யோகேன) குணங்களுடைய கூட்டுறவால் (அவஸ்தா-த்ரயம்) விழிப்பு கனவு உறக்கம் என்ற மூன்று நிலை களையும் (அச்னுதே) அனுபவிக்கிறது.

ஜாக்ரத்தில் ரஜோகுணமும் ஸ்வப்னத்தில் ஸத்துவமும் ஸுஷுப்தியில் தமோகுணமும் மேலிட்டிருக்கும்.

**विषयाणा-मानुकूल्ये सुखी दुःखी विपर्यये ।**
**सुखं दुःखं च तद्धर्मः सदानन्दस्य नात्मनः ॥ १०५ ॥**

விஷயாணு-மானுகூல்யே ஸுகீ துஃக்கீ விபர்யயே | ஸுகம் துஃக்கஞ்ச தத்தர்மஃ ஸதானந்தஸ்ய நாத்மனஃ || 105 ||

105. (விஷயாணும்) விஷயங்களின் (ஆனு கூல்யே) அனுகூல நிலையில் (ஸுகீ) இன்புறுவதாகவும் (விபர்யயே) அனுகூலமில்லாதநிலையில் (து:க்கீ) துன் புறுவதாகவும் இது உளது. (ஸுகம்) இன்பமும் (து:க்கஞ் ச) துன்பமும் (தத்தர் ம:) அதினுடைய குணங்கள். (ஸதானந்தஸ்ய) எப்பொழுதும் ஆனந்த வடிவாகிய (ஆத்மன:) ஆத்மாவினுடைய-குணங்கள்- (ந) அன்று.

ஒரேவிஷயத்தை மனது ஒருசமயத்தில் சுகமாகவும் மற்றொரு சமயத்தில் துக்கமாகவும் கொள்ளுகிறது. ஒருவனுக்கு சுகமாயிருப் பது மற்றொருவனுக்கு துக்கமாயிருக்கிறது. ஆகையால் சுகமும் துக்கமும் விஷயத்தில் இல்லை, மனதில்தான் உளது. ஆத்மா எப்போதும் ஆனந்தமாயுளது.

## प्रेमस्वरूपम्

आत्मार्थत्वेन हि प्रेयान्विषयो न स्वतः प्रियः ।
स्वत एव हि सर्वेषा-मात्मा प्रियतमो यतः ॥
तत आत्मा सदानन्दो नास्य दुःखं कदाचन ॥ १०६ ॥

### ப்ரேமஸ்வரூபம்

ஆத்மார்த்தத்வேன ஹி ப்ரேயான் விஷயோ ந ஸ்வத: ப்ரிய: | ஸ்வத ஏவ ஹி ஸர்வேஷா-மாத்மா ப்ரியதமோ யத: || தத ஆத்மா ஸதானந்தோ நாஸ்ய து:க்கம் கதாசன || 106 ||

### அன்பின் உண்மைவடிவம்

106. (விஷய:) சப்தம் முதலிய விஷயம் (ஆத்ம-அர்த்தத்வேன ஹி) தன் பொருட்டேயன்றோ (ப்ரேயான்) பிரியமுள்ளதாகிறது; (ஸ்வத:) விஷயம்

விஷயத்திற்காகவே (ந ப்ரிய:) பிரியமாவதில்லை. (ஹி) ஆனால் (ஸர்வேஷாம்) அனைவருக்கும் (யத:) எக்காரணத்தால் (ஸ்வத: ஏவ) தனக்காகவே (ஆத்மா) ஆத்மாவாகிய தான் (பிரியதம:) அனைத்திலும் பிரியமாயிருக்கிறதோ (தத:) அக்காரணத்தால் (ஆத்மா) (ஸதா-ஆனந்த:) எப்பொழுதும் ஆனந்த வடிவானது, (அஸ்ய) இதற்கு (கதாசன) ஒருபொழுதும் (து:க்கம்) துன்பமென்பது (ந) இல்லை.

**यत्सुषुप्तौ निर्विषय आत्मानन्दोऽनुभूयते ।**
**श्रुति-प्रत्यक्ष-मैतिह्य-मनुमानं च जाग्रति ॥ १०७ ॥**

யத் ஸுஷுப்தௌ நிர்விஷய ஆத்மானந்தோऽனுபூயதே | ச்ருதி-ப்ரத்யக்ஷ - மைதிஹ்ய - மனுமானஞ்ச ஜாக்ரதி || 107 ||

107. (நிர்விஷயே) விஷயம் ஏதுமில்லாத (ஸுஷுப்தௌ) உறக்கத்தில் (ஆத்மானந்த:) ஆத்மானந்தமானது (யத் அனுபூயதே) அனுபவிக்கப்படுகிறது என்பதற்கு (ச்ருதி-) வேதமும் (ப்ரத்யக்ஷம்) சொந்த அனுபவமும் (ஐதிஹ்யம்) சரித்திரமும் (அனுமானம்) ஊகையும் (ஜாக்ரதி) சாக்ஷி சொல்லுகிறது.

ச்ருதி— 'ஏஷோऽஸ்ய பரமானந்த:' என்று ஸுஷுப்தி நிலையை அக்ஞானிகளின் பரமானந்தமாக பிருஹதாரணிய உபநிஷத்து (3.32) வர்ணிக்கிறது.

## मायानिरूपणम्

**अव्यक्तनाम्नी परमेश शक्तिरनाद्यविद्या त्रिगुणात्मिका परा ।**
**कार्यानुमेया सुधियैव माया यया जगत्सर्वमिदं प्रसूयते**
**॥ १०८ ॥**

**மாயா நிரூபணம்**

அவ்யக்த-நாம்னீ பரமேச-சக்தி-ரனாத்யவித்யா
த்ரிகுணாத்மிகா பரா | கார்யானுமேயா ஸுதியைவ
மாயா யயா ஜகத்ஸர்வமிதம் ப்ரஸூயதே || 108 ||

**மாயா நிரூபணம்**

108. (மாயா) மாயை என்பது (அவ்யக்த-நாம்னீ) அவ்யக்தம் எனப் பெயருடையது, (அனாதி) ஆதியற்றது, (அவித்யா) அஞ்ஞான வடிவானது, (த்ரிகுணாத்மிகா) முக்குணமயமானது, (பரமேச-சக்திঃ பரா) பரமேசுவரனுடைய உன்னத சக்தியாயிருப்பது. (ஸுதியா ஏவ) சிறந்த புத்திமானால் தான் (கார்ய-அனுமேயா) அதனுடைய செயல்களினின்று அது ஊகித்தறியப்படும். (யயா) அந்த மாயையால் (இதம்) இந்த (ஜகத் ஸர்வம்) உலகம் முழுதும் (ப்ரஸூயதே) பிறப்பிக்கப் படுகிறது.

கார்யானுமேயா—மின்சாரம் முதலிய சக்திகள் கண்ணால் காணப்படாமல் காரியத்தால் அறியப்படுவது போல்.

பரமேசசக்தி:—ஒ. 'மாயாந்து ப்ரக்ருதிம் வித்யான் மாயினந்து மஹேச்வரம்' மாயையைப் பிரகிருதி என்றும் மாயை எவனுடைய சக்தியோ அவனை மஹேச்வரனென்றும் அறிய வேண்டும்.

ஒ. முக்குணவடிவானதும் தெய்வசக்தி வாய்ந்ததுமான என்னுடைய மாயை கடத்தற்கரியது; எவர்கள் என்னையே சரணடைகிறார்களோ அவர்கள்தான் இந்தமாயையை தாண்டுகிறார்கள். கீ.7.14.

सन्नाप्यसन्नाप्युभयात्मिका नो
भिन्नाप्यभिन्नाप्युभयात्मिका नो ।
सांगाप्यनंगा ह्युभयात्मिका नो
महाद्भुताऽनिर्वचनीय-रूपा ॥ १०९ ॥

ஸங்நாப்யஸங்நாப்யுபயாத்மிகா நோ பின்னுப்ய-பின்னுப்யுபயாத்மிகா நோ | ஸாங்காப்யனங்காஹ்யுப யாத்மிகா நோ மஹாத்புதாऽநிர்வசனீய-ரூபா || 109 ||

109. (ஸத் ந) அது இருப்புடையதன்று, (அபி அஸத் ந) இருப்பில்லாததுமன்று (அபி உபயாத்மிகா நோ) இருவகைப் பட்டதுமன்று; (பின்ன அபி) பகுக் கப்பட்டதாகவோ (அபின்ன அபி) பகுக்கப்படாததாக வோ (உபயாத்மிகா) இருவகைப்பட்டதாகவோ (நோ) அது இல்லை; (ஸ அங்கா அபி) அங்கங்களை உடைய தாகவோ (அனங்கா ஹி) அங்கங்களில்லாததாகவோ (உபயாத்மிகா) இருவகைப்பட்டதாகவோ (நோ) இல்லை; (மஹா அத்புதா) மிகவும் ஆச்சரியமானது, (அநிர்வசனீய ரூபா) இப்படிப்பட்டதென்று கூறமுடி யாத ரூபமுடையது.

**शुद्धाद्वय-ब्रह्म-विबोध-नाश्या सर्पभ्रमो रज्जुविवेकतो यथा ।**
**रजस्तमः सत्त्वमिति प्रसिद्धा गुणास्तदीयाः प्रथितैः स्वकार्यैः ॥ ११० ॥**

சுத்தாத்வய-ப்ரஹ்ம-விபோத-நாச்யா ஸர்ப்ப-ப்ரமோ ரஜ்ஜுவிவேகதோ யதா | ரஜஸ்தமः ஸத்வமிதி ப்ரஸித்தா குணாஸ்ததீயாः ப்ரதிதைः ஸ்வகார்யைः || 110 ||

110. (ஸர்ப்ப-ப்ரமः) பாம்பு என்ற மதிமயக்கம் (ரஜ்ஜு விவேகதः) பழுதை என்ற அறிவால் (யதா) எங்ஙனம் நீங்குமோ அவ்வாறு (சுத்த-அத்வய-ப்ரஹ்ம-விபோத-) பரிசுத்தமான இரண்டற்ற பிரம்ம ஞானத் தால் (நாச்யா) மாயையானது அழிவுறும். (ப்ரதிதைः) பிரசித்தமான (ஸ்வகார்யைः) தத்தம் செயல்களால் (ரஜஸ்-தமः-ஸத்வம் இதி) ரஜஸ் தமஸ் ஸத்வம் என்று (ப்ரஸித்தாः) நன்குணரப்பட்ட (குணாः) குணங்கள் (ததீயாः) அந்த மாயையைச் சார்ந்தவை.

## रजोगुणः

**विक्षेपशक्ती रजसः क्रियात्मिका यतः प्रवृत्तिः प्रसृता पुराणी ।**
**रागादयोऽस्याः प्रभवन्ति नित्यं दुःखादयो ये मनसो विकाराः**
**॥ १११ ॥**

ரஜோகுணஃ

விக்ஷேபசக்தீ ரஜஸஃ க்ரியாத்மிகா யதஃ ப்ரவ்ருத்திஃ ப்ரஸ்ருதா புராணீ | ராகாதயோऽஸ்யாஃ ப்ரபவந்தி நித்யம் துஃக்காதயோ யே மனஸோ விகாராஃ || 111 ||

ரஜோகுணம்

111. (விக்ஷேப சக்திஃ) இல்லாததைக் தோற்றுவிக்கும் விக்ஷேப சக்தியானது (ரஜஸஃ) ரஜோகுணத்தினுடையது, (க்ரியாத்மிகா) செயல் வடிவானது; (யதஃ) அதிலிருந்து (புராணீ) பழைமையான (ப்ரவ்ருத்திஃ) சிருஷ்டி வெள்ளம் (ப்ரஸ்ருதா) பெருகியுள்ளது. (நித்யம்) இடைவிடாது (அஸ்யாஃ) இதனின்று (ராக-ஆதயஃ) விருப்பு வெறுப்பு முதலியவை (மனஸஃ) மனதின் (விகாராஃ) மாறுபட்ட நிலைகளான (துஃக்காதயஃ) துன்பம் முதலியவை (யே) எவையோ அவையும் (ப்ரபவந்தி) உண்டாகின்றன.

**कामः क्रोधो-लोभदम्भाद्यसूयाऽहंकारेर्ष्या-मत्सराद्यास्तु घोराः ।**
**धर्मा एते राजसाः पुंप्रवृत्तिर्यस्मादेषा तद्रजो बन्धहेतुः ॥ ११२ ॥**

காமஃ க்ரோதோ-லோப-தம்பாத்யஸூயாऽஹங்காரேர்ஷ்யா-மத்ஸராத்யாஸ்து கோராஃ | தர்மா ஏதே ராஜஸாஃ பும் ப்ரவ்ருத்திர்-யஸ்மாதேஷா தத்ரஜோ பந்தஹேதுஃ || 112 ||

112. (காம:) ஆசை (க்ரோத:) கோபம் (லோப)-லோபம் (தம்ப-ஆதி) இடம்பம் முதலியவை (அஸூயா) குணத்தில் தோஷம் கற்பித்தல் (அஹங்காரம்) அஹங்காரம் (ஈர்ஷ்யா) பொருமை (மத்ஸர-ஆத்யா:து) பகைமை முதலிய (கோரா:) கொடிய (தர்மா:) குணங்களாகிய (ஏதே) இவை (ராஜஸா:) ராஜஸமானவை. (யஸ்மாத்) இதினின்றே (பும் ப்ரவ்ருத்தி:) புருஷனுடைய வெளிநாட்டச் செயல் ஏற்படுகிறது. (ஏஷா தத் ரஜ:) இப்படிப்பட்ட அந்த ரஜோகுணம் (பந்த ஹேது:) பந்தத்திற்குக் காரணம்.

ஒ. பேராசை, இந்திரியங்களின் சேஷ்டை, தொழில் முயற்சி, அமைதியின்மை, பற்று, ஆகிய இவை ரஜோகுண மேலீட்டால் உண்டாகின்றன. —கீ 14.12.

## तमो गुणः

**एषाऽऽवृतिर्नाम तमोगुणस्य शक्तिर्यया वस्त्ववभासतेऽन्यथा ।**
**सैषा निदानं पुरुषस्य संसृतेर्विक्षेपशक्तेः प्रवणस्य हेतुः ॥११३॥**

**தமோ குண:**

ஏஷாऽऽவ்ருதிர்-நாம தமோகுணஸ்ய சக்திர்-யயா வஸ்த்வவபாஸதேऽன்யதா | ஸைஷா நிதானம் புருஷஸ்ய ஸம்ஸ்ருதேர்-விக்ஷேபசக்தே: ப்ரவணஸ்ய ஹேது: || 113 ||

**தமோ குணம்**

113. (யயா) எதனுல் (வஸ்து) ஒரு பொருள் (அன்யதா) மற்ருென்ருக (அவபாஸதே) தோற்றமளிக்கிறதோ (ஏஷா) அது (ஆவ்ருதிர் நாம சக்தி:) ஆவ்ருதி அல்லது ஆவரணசக்தி எனப்படுவது, (தமோ குணஸ்ய) தமோ குணத்தைச்சார்ந்தது. (ஸா ஏஷா) அப்படிப்பட்ட இந்த ஆவரணசக்தியே (புருஷஸ்ய) ஜீவனுடைய (ஸம்ஸ்ருதே:) பிறப்பிறப்புச்

சுழலுக்கு (நிதானம்) ஆதிகாரணம். (விக்ஷேப சக்தேஃ) விக்ஷேபசக்தியினுடைய (ப்ரவணஸ்ய) திறமைக்கும் (ஹேதுஃ) காரணம்.

ப்ரஸரஸ்ய ஹேதுஃ—பாடபேதம்.

ஒ. 'கபலிததினநாதே' —வி.சூ. 147

எவனுக்கு ஒரு பொருளில் ஐயமும் திரிபும் உளதோ அவனுக்கே விக்ஷேபம் ஏற்படுகிறது. எவனுக்கு உண்மை விளங்கிற்றே அவனுக்கு விக்ஷேபமில்லை.

प्रज्ञावानपि पण्डितोऽपि चतुरोऽप्यत्यन्त-सूक्ष्मार्थदृक्
व्यालीढस्तमसा न वेत्ति बहुधा संबोधितोऽपि स्फुटम् ।
भ्रान्त्यारोपित-मेव साधु कलयत्यालम्बते तद्गुणान्
हन्तासौ प्रबला दुरन्ततमसः शक्तिर्महत्यावृतिः ॥ ११४ ॥

ப்ரஜ்ஞாவானபி பண்டிதோऽபி சதுரோऽப்யத்யந்த-ஸூக்ஷ்மார்த்தத்ருக் வ்யாலீடஸ்தமஸா ந வேத்தி பஹுதா ஸம்போதிதோऽபி ஸ்புடம் | ப்ராந்த்யா-ரோபித-மேவ ஸாது கதயத்யாலம்பதே தத்குணன் ஹந்தாஸௌ ப்ரபலா துரந்த-தமஸஃ சக்திர்-மஹத்யா-வ்ருதிஃ || 114 ||

114. (ப்ரஜ்ஞாவான் அபி) புத்திமானயிருந்தாலும் (பண்டிதஃ அபி) கல்விமானயிருந்தாலும் (சதுரஃ அபி) திறமை மிக்கவனயிருந்தாலும் (ஸூக்ஷ்ம-அர்த்த-த்ருக்) நுட்பமான விஷயங்களையும் காணக்கூடியவனயிருந்தாலும் (தமஸா) தமோ குணத்தால் (வ்யாலீடஃ) பீடிக்கப்படுவானேயானல் (பஹுதா) பலதடவை (ஸ்புடம்) தெளிவாக (ஸம்போதிதஃ அபி) உபதேசிக்கப்பட்ட போதிலும் (ந வேத்தி) உண்மையை அறிவதில்லை. (ப்ராந்த்யா) மதிமயக்கத்தால் (ஆரோபிதம்

ஏவ) கல்பிக்கப் பட்டதையே (ஸாது) ஸத்தியம் என்று (கலயதி) கருதுகிறான். (தத் குணான்) அதனுடைய குணங்களை (ஆலம்பதே) பிடித்துக் கொள்ளுகிறான். (ஹந்த) ஐயோ! (துரந்த-தமஸ: சக்தி:) கொடிய தமோ குணத்தின் சக்தியாகிய (அஸௌ மஹதி ஆவ்ருதி:) இப்பெரிய ஆவரணசக்தி (ப்ரபலா) மிகுந்த பலமுடையது.

**ப்ரஜ்ஞாவான்**—'ப்ரஜ்ஞா த்ரைகாலிகீமதா'। முக்காலத்தும் ஒரேமாதிரியான நிச்சய புத்தியுடையவன்.

**பண்டிதன்**—'சாஸ்த்ரஜன்ய-ஜ்ஞானம் பரோக்ஷம் பண்டா' சாஸ்திரக்கல்வியாலேற்படும் பரோக்ஷஞானம் 'பண்டா' எனப்படுவது. அதை உடையவன் பண்டிதன்.

**அறிவதில்லை**—ஒ. 'ச்ருண்வந்தோபி பஹவோ யந்ந வித்யு:।'
—கட.உப. 2.23

अभावना वा विपरीत-भावना ऽसंभावना विप्रतिपत्तिरस्याः ।
संसर्गयुक्तं न विमुंचति ध्रुवं विक्षेपशक्तिः क्षपयत्यजस्रम्
॥ ११५ ॥

அபாவனா வா விபரீதபாவனாऽஸம்பாவனா விப்ரதிபத்தி-ரஸ்யா: । ஸம்ஸர்க்கயுக்தம் ந விமுஞ்சதி த்ருவம் விக்ஷேபசக்தி: க்ஷபயத்யஜஸ்ரம் ॥ 115 ॥

115. (அபாவனா) பிரம்மபாவனையின்மையும் (விபரீதபாவனா) ஒரு நம்பிக்கையுமில்லாமையும் (விப்ரதிபத்தி:) ஸந்தேஹமும் (அஸ்யா:) இந்த ஆவரண சக்தியுடன் (ஸம்ஸர்க்க-யுக்தம்) தொடர்புடையவனை (த்ருவம்) நிச்சயமாக (ந விமுஞ்சதி) விடுவதில்லை. (விக்ஷேபசக்தி:) விக்ஷேபசக்தியும் (அஜஸ்ரம்) இடைவிடாது (க்ஷபயதி) இவனை வாட்டுகிறது.

அபாவனு—பிரம்மம் இல்லை என்பது. விபரீதபாவனு—நான் இவ்வுடல் என்ற எண்ணம். அஸம்பாவனு—எதிலும் நம்பிக்கையின்மை.

விப்ரதிபத்தி:— இப்படியிருக்குமா அப்படியிருக்குமா என்ற ஸந்தேஹம்.

अज्ञान-मालस्य-जडत्व-निद्रा-प्रमाद-मूढत्व-मुखा-स्तमोगुणाः ।
एतैः प्रयुक्तो न हि वेत्ति किंचिन्निद्रालुवत्स्तम्भवदेव तिष्ठति ॥ ११६ ॥

அஜ்ஞான-மாலஸ்ய-ஜடத்வ-நித்ரா-ப்ரமாத-மூடத்வ முகாஸ்-தமோகுணுஃ | ஏதைஃ ப்ரயுக்தோ நஹி வேத்தி கிஞ்சிந்-நித்ராலுவத்-ஸ்தம்பவதேவ திஷ்டதி || 116 ||

116. (அஜ்ஞான-) அறியாமை (ஆலஸ்ய-) சோம்பல் (ஜடத்வ-) பகுத்தறிவின்மை (நித்ரா-) உறக்கம் (ப்ரமாத-) அஜாக்கிரதை (மூடத்வ-) முட்டாள்தனம் (முகாஃ) முதலியவை (தமோகுணுஃ) தமோகுணங்கள். (ஏதைஃ) இவற்றுடன் (ப்ரயுக்தஃ) கூடியவன் (கிஞ்சித்) ஒரு சிறிதும் (நஹி வேத்தி) உண்மையை உணரவே மாட்டான். (நித்ராலுவத்) உறங்குபவனைப் போலும் (ஸ்தம்பவத்) தூணைப்போலும் (திஷ்டதி ஏவ) இருந்த இடத்தில் இருக்கத்தான் செய்வான்.

ஒ. ஞானமில்லாதவனும், சிரத்தையில்லாதவனும் ஸம்சயசித்தமுடையவனும் நாசமடைகிருன். —கீ. 4.40.

மூடத்வம்—ஒன்றை மற்ருென்ருயறிதல்.

## सत्त्वगुणः

सत्त्वं विशुद्धं जलवत्तथापि ताभ्यां मिलित्वा सरणाय कल्पते ।
यत्रात्मबिम्बः प्रतिबिम्बितः सन् प्रकाशयत्यर्क इवाखिलं जडम् ॥ ११७ ॥

## ஸத்வகுண:

ஸத்வம் விசுத்தம் ஜலவத்ததாபி தாப்யாம் மிலித்வா ஸரணாய கல்பதே | யத்ராத்ம-பிம்ப: ப்ரதிபிம்பித: ஸன் ப்ரகாசயத்யர்க்க இவாகிலம் ஜடம் || 117 ||

## ஸத்துவ குணம்

117. (ஸத்வம்) ஸத்வ குணம் (ஜலவத்) நல்ல நீரைப்போல் (விசுத்தம்) பரிசுத்தமானது. (ததா அபி) அப்படியிருந்தபோதிலும் (தாப்யாம்) ரஜோகுணதமோ குணங்களுடன் (மிலித்வா) கூடும் போது (ஸரணாய) பிறவித்தளைக்கு (கல்பதே) காரணமாகிறது. (யத்ர) அதில் (ஆத்மபிம்ப:) ஆத்மாவின் ஒளி (ப்ரதிபிம்பித: (ஸன்) பிரதிபலித்து (அர்க்க இவ) சூரியனைப்போல் (அகிலம் ஜடம்) ஜடவுலகனைத்தையும் (ப்ரகாசயதி) பிரகாசிக்கச் செய்கிறது.

ஒ. ஸத்வாத் ஸஞ்ஜாயதே ஜ்ஞானம் —கீ. 14.27.

मिश्रस्य सत्त्वस्य भवन्ति धर्मा-स्त्वमानिताद्या नियमा यमाद्याः ।
श्रद्धा च भक्तिश्च मुमुक्षुता च दैवी च सम्पत्ति-रसन्निवृत्तिः
॥ ११८ ॥

மிச்ரஸ்ய ஸத்வஸ்ய பவந்தி தர்மாஸ்-த்வமானிதாத்யா நியமா யமாத்யா: | ச்ரத்தா ச பக்திச்ச முமுக்ஷுதா ச தைவீ ச ஸம்பத்தி-ரஸந்நிவ்ருத்தி: || 118 ||

118. (மிச்ரஸ்ய) கலப்படமான (ஸத்வஸ்ய) ஸத்வ குணத்தின் (தர்மா: து) அடையாளங்கள் (பவந்தி) பின் வருபவை ஆகின்றன (அமானிதா-ஆத்யா:) கர்வமின்மை முதலியன; (நியமா யம ஆத்யா:) நியமம் யமம் முதலியவை; (ச்ரத்தா ச) சிரத்தையும் (பக்திச் ச) பக்தியும் (முமுக்ஷுதா ச) முக்தியில் ஆசையும்; (தைவீ ச ஸம்பத்தி:) தெய்வஸம்பத்து,

(அஸத்நிவ்ருத்திः) பொய்யானவற்றினிருந்து விலகுதல்.

**அமானிதா**—ஒ. அமானித்வ-மதம்பித்வ-மஹிம்ஸா-க்ஷாந்தி —கீ. 13.7-11.

**நியமா:**—சௌச-ஸந்தோஷ-தப:-ஸ்வாத்யாய-ஈச்வரப்ரணிதானி நியமா: | —யோ. சூ. 2. 32.

**யமா:**—அஹிம்ஸா-ஸத்ய-அஸ்தேய-ப்ரஹ்மசர்ய-அபரிக்ரஹா-யமா:— —யோ.ஸூ. 2.30.

**ச்ரத்தா**—ஒ. விவேகசூடாமணி 25.

**பக்தி**—ஒ. விவேகசூடாமணி 31.

**தைவீஸம்பத்**— ஒ. கீ. 16.1-3.

**विशुद्धसत्त्वस्य गुणाः प्रसादः स्वात्मानुभूतिः परमा प्रशान्तिः ।**
**तृप्तिः प्रहर्षः परमात्मनिष्ठा यया सदानन्दरसं समृच्छति ॥ ११९ ॥**

விசுத்தஸத்வஸ்ய குணா: ப்ரஸாத: ஸ்வாத்மானுபூதி: பரமா ப்ரசாந்தி: | த்ருப்தி: ப்ரஹர்ஷ: பரமாத்மநிஷ்டா யயா ஸதானந்த-ரஸம் ஸம்ருச்சதி || 119 ||

119. (விசுத்த-ஸத்வஸ்ய) பரிசுத்தமான ஸத்துவத்தின் (குணா:) இயல்புகள் (ப்ரஸாத:) மனத்தெளிவு (ஸ்வாத்மானுபூதி:) தன்னைத்தானறிதல் (பரமா ப்ரசாந்தி:) சிறந்த அமைதி (த்ருப்தி:) போதுமென்ற மனது (ப்ரஹர்ஷ:) ஸந்தோஷம் (பரமாத்ம-நிஷ்டா) பரமாத்மாவிடம் மனதை நிலை நிறுத்துதல். (யயா) இவற்றால் (ஸதானந்த ரஸம்) எப்பொழுது இன்ப ரஸத்தை (ஸம்ருச்சதி) அடைந்து அனுபவிக்கிறான்.

**ஸதானந்தரஸம்**—ஸாதனம் பயிலும் நிலையில் பிரயத்னத்தால் அடையப்பட்ட அமைதியும் ஆனந்தமும் சுத்த ஸத்துவ நிலையில் பிரயத்தினமின்றி இயல்பாகவே எப்பொழுதும் உளது. இது 'ஸஹஜ ஸமாதி' எனப்படும்.

**சுத்த ஸத்வம்**—ரஜோகுணமும் தமோகுணமும் நீங்கியது.

## कारण-शरीरम्

**अव्यक्तमेतत् त्रिगुणै-र्निरुक्तं तत्कारणं नाम शरीर-मात्मनः ।**
**सुषुप्ति-रेतस्य विभक्त्यवस्था प्रलीनसर्वेन्द्रिय-बुद्धिवृत्तिः**
**॥ १२० ॥**

**காரண சரீரம்**

அவ்யக்த-மேதத் த்ரிகுணைர்-நிருக்தம் தத்காரணம் நாம சரீர-மாத்மனஃ | ஸுஷுப்தி-ரேதஸ்ய விபக்த்ய-வஸ்தா ப்ரலீன-ஸர்வேந்த்ரிய-புத்தி-வ்ருத்திஃ || 120 ||

**காரண சரீரம்**

120. (த்ரிகுணைஃ நிருக்தம்) முக்குணங்களால் நிரூபிக்கப்பட்ட (ஏதத் அவ்யக்தம்) இந்த அவ்யக்தம் எதுவோ (தத்) அது (ஆத்மனஃ) ஜீவனுக்கு (காரணம் நாம) காரணசரீரம் எனப்படும். (ப்ரலீன-ஸர்வேந்த்ரிய-புத்தி வ்ருத்திஃ) எல்லா இந்திரியச் செயல்களும் புத்தி விருத்தியும் ஒடுங்கிய (ஸுஷுப்திஃ) உறக்கம் (ஏதஸ்ய) இதனுடைய (விபக்தி அவஸ்தா) தனிப்பட்ட நிலை.

அறியாமை எல்லா நிலைகளிலுமிருந்தாலும் ஜாக்ரத்திலும் ஸ்வப்னத்திலும் புத்தியின் வியாபாரமுண்டு. இங்கு அதுவுமில்லாததால் இது ஒரு தனிப்பட்ட நிலை.

**सर्वप्रकार-प्रमिति-प्रशान्ति-र्बीजात्मनाऽवस्थिति-रेव बुद्धेः ।**
**सुषुप्तिरेतस्य किल प्रतीतिः किंचिन्न वेद्मीति जगत्प्रसिद्धेः**
**॥ १२१ ॥**

ஸர்வப்ரகார - ப்ரமிதி - ப்ரசாந்திர்-பீஜாத்மனாऽவஸ்-திதி-ரேவ புத்தேஃ | ஸுஷுப்தி-ரேதஸ்ய கில ப்ரதீதிஃ கிஞ்சிந்ந வேத்மீதி ஜகத்-ப்ரஸித்தேஃ || 121 ||

121. (ஸர்வப்ரகார-) எல்லா வகையான (ப்ரமிதி-) உணர்வின் (ப்ரசாந்தி꞉) ஒழிவும் (புத்தே꞉) புத்தியின் (பீஜ-ஆத்மனு) விதை வடிவான (அவஸ்திதி꞉ ஏவ) நிலேயுமே (ஸுஷுப்தி꞉) உறக்கம். (ஏதஸ்ய) இதனுடைய (ப்ரதீதி꞉ கில) அடையாளமோ எனின் '(கிஞ்சித் ந வேத்மி) நான் ஒரு சிறிதும் அறியவில்லே' (இதி) என்பதாகும்—(ஜகத்-ப்ரஸித்தே꞉) இது உலகில் அனேவருக்கும் அனுபவ சித்தமாதலால்.

## अनात्मनिरूपणम्

देहेन्द्रिय-प्राण-मनोऽहमादयः सर्वे विकारा विषयाः सुखादयः।
व्योमादि भूतान्यखिलं च विश्व-मव्यक्त-पर्यन्त-मिदं ह्यनात्मा
॥ १२२ ॥

### அனுத்ம நிருபணம்

தேஹேந்த்ரிய-ப்ராண-மனே஽ஹமாதய꞉ ஸர்வே விகாரா விஷயா꞉ ஸுகாதய꞉ | வ்யோமாதி-பூதான்யகிலஞ் ச விச்வ-மவ்யக்த-பர்யந்த-மிதம் ஹ்யனுத்மா || 122 ||

### அனுத்ம-நிருபணம்

122. (தேஹ-) உடல் (இந்த்ரிய-) இந்திரியங்கள் (ப்ராண-) பிராணன் (மன꞉) மனது (அஹம்) அஹங்காரம் (ஆதய꞉) முதலியவையும் (ஸர்வே) எல்லா (விகாரா꞉) மாறுபாடுகளும் (விஷயா꞉) சப்தம் முதலிய விஷயங்களும் (ஸுகாதய꞉) இன்பம் முதலியவைகளும் (வ்யோம-ஆதி) ஆகாயம் முதலிய (பூதானி) பூதங்கள் (அகிலஞ் ச) அனேத்தும் (விச்வம்) பிரபஞ்சமும் (அவ்யக்த-பர்யந்தம்) அவ்யக்தம் அல்லது மூலப்பிரகிருதி வரையுள்ள (இதம்) இது (அனுத்மா ஹி) அனுத்மா, ஆத்மா அல்லாதது என்பது பிரசித்தம்.

ஒ. ‘மஹாபூதான்யஹங்காரோ..........ஏதத்க்ஷேத்ரம் ஸமாஸேன ஸவிகார-முதாஹ்ருதம்’:—இது எல்லாம் அனாத்மா எனக் கூறப்படும். ஆத்மா க்ஷேத்ரக்ஞன்.

**माया मायाकार्यं सर्वं महदादि-देहपर्यन्तम् ।**
**असदिद-मनात्मतत्त्वं विद्धि त्वं मरुमरीचिका-कल्पम् ॥१२३॥**

மாயா மாயாகார்யம் ஸர்வம் மஹதாதி தேஹபர்-யந்தம் | அஸதித-மனாத்மதத்வம் வித்தி த்வம் மரு-மரீசிகா-கல்பம் || 123 ||

123. (மாயா) மாயையும் (மஹத்-ஆதி) ‘மஹத்’ முதல் (தேஹபர்யந்தம்) உடல் வரை (ஸர்வம் மாயா-கார்யம்) மாயையின் செயலாகிய அனைத்தும் (அஸத்) பொய். (இதம்) இந்த (அனாத்மதத்வம்) அனாத்ம தத்துவம் (மருமரீசிகா கல்பம்) கானல் நீருக்கொப்பானது என்று (த்வம்) நீ (வித்தி) அறிவாயாக.

அஸதித-மனாத்மகம் த்வம் வித்தி—பாடபேதம். மஹத்-ஸமஷ்டிபுத்தி.

## आत्मनिरूपणम्

**अथ ते संप्रवक्ष्यामि स्वरूपं परमात्मनः ।**
**यद्विज्ञाय नरो बन्धान्मुक्तः कैवल्यमश्नुते ॥ १२४ ॥**

### ஆத்ம நிருபணம்

அத தே ஸம்ப்ரவக்ஷ்யாமி ஸ்வரூபம் பரமாத்மன꞉ | யத்விஜ்ஞாய நரோ பந்தான் முக்த꞉ கைவல்ய-மச்னுதே || 124 ||

### ஆத்ம நிருபணம்

124. (அத) இனி (தே) உனக்கு (பரமாத்மன꞉) பரமாத்மாவின் (ஸ்வரூபம்) உண்மை வடிவை (ஸம்)

ப்ரவக்ஷ்யாமி) விளக்கிக் கூறுகிறேன். (யத்-விஜ்ஞாய) அதை அறிந்து (நர:) மனிதன் (பந்தாத்) கட்டிலிருந்து (முக்த:) விடுபட்டவனய் (கைவல்யம்) தான் தானு யிருக்கும் மோக்ஷநிலையை (அச்னுதே) அனுபவிக்கிருன்.

கைவல்யம்—'கேவல-த்ருக்ரூபத்வம்' தனித்து எதிலும் பற்றின்றி ஸாக்ஷியாயிருக்கும் தன்மை.

**अस्ति कश्चित्स्वयं नित्य-महं प्रत्यय-लंबनः ।**
**अवस्थात्रय-साक्षी सन् पंचकोश-विलक्षणः ॥ १२५ ॥**

அஸ்தி கச்சித்ஸ்வயம் நித்ய-மஹம் ப்ரத்யய-லம்பன: | அவஸ்தாத்ரய-ஸாக்ஷீ ஸன் பஞ்சகோச-விலக்ஷண: || 125 ||

125. (அஹம்-ப்ரத்யய-லம்பன:) நான் என்னும் உணர்விற்கு ஆதாரமானதும் (ஸ்வயம்) இயற்கையாக (நித்யம்) என்று முளதுமாகிய (கச்சித்) ஒன்று (அஸ்தி) இருக்கிறது. (அவஸ்தா-த்ரய-ஸாக்ஷீ ஸன்) —விழிப்பு, கனவு, உறக்கம் என்ற—மூன்று நிலைகளுக்கும் ஸாக்ஷியாக இருந்து கொண்டு (பஞ்சகோச விலக்ஷண:)—அன்னமயம், பிராணமயம், மனோமயம், விக்ஞானமயம், ஆனந்தமயம் என்ற—ஐந்து கோசங்களினின்றும் வேருக—அது உளது.

ஐந்துகோசங்கள்—இவை சுலோகம் 154—210ல் விளக்கப்படுகின்றன.

**यो विजानाति सकलं जाग्रत्स्वप्न-सुषुप्तिषु ।**
**बुद्धि तद्वृत्ति-सद्भाव-मभाव-महमित्ययम् ॥ १२६ ॥**

யோ விஜானுதி ஸகலம் ஜாக்ரத்-ஸ்வப்ன-ஸுஷுப்திஷு | புத்தி தத்வ்ருத்தி-ஸத்பாவ-மபாவ-மஹமித்யயம் || 126 ||

126. (ஜாக்ரத்-ஸ்வப்ன-ஸுஷுப்திஷு) விழிப்பு, கனவு, உறக்கம் ஆகிய நிலேகளில் (புத்தி) புத்தியையும் (தத் வ்ருத்தி-) அதன் தொழிலின் (ஸத்பாவம்) இருப்பையும் (அபாவம்) இன்மையையும் (அஹம் இதி) நான் என்று அஹம்பாவத்துடன் (ஸகலம்) அனேத்தையும் (யஃ) எவன் (விஜாஞதி) அறிகிருனே—அவன் தான்—(அயம்) இவன்.

**यः पश्यति स्वयं सर्वं यन्न पश्यति कश्चन ।**
**यश्चेतयति बुद्ध्यादि न तद्यं चेतयत्ययम् ॥ १२७ ॥**

யஃ பச்யதி ஸ்வயம் ஸர்வம் யந்ந பச்யதி கச்சன |
யச் சேதயதி புத்த்யாதி ந தத்யம் சேதயத்யயம் || 127 ||

127. (யஃ) எவன் (ஸ்வயம்) தாஞகவே (ஸர்வம்) அனேத்தையும் (பச்யதி) பார்க்கிருனே (யம்) எவனே (கச்சன) வேறெதுவும் (ந பச்யதி) பார்க்க இயலாதோ, (யஃ) எவன் (புத்தி-ஆதி) புத்தி முதலியவற்றை (சேதயதி) பிரகாசிக்கின்ருனே (யம்) எவனே (தத்) அந்த புத்தி (நது சேதயதி) பிரகாசிக்கச் செய்யாதோ—அவன்தான் (அயம்) இவன்.

ந து யம் சேதயத்யயம் —பாட பேதம்.

ஒ. 'அத்ருஷ்டோ த்ரஷ்டாऽச்ருதஃ ச்ரோதா ऽமதோ மந்தா ऽவிஜ்ஞாதோ விஜ்ஞாதா நான்யோऽதோஸ்தி த்ரஷ்டா'. அவன் காணப்படாமல் காண்பவன், கேட்கப் படாமல் கேட்பவன், நினேக்கப்படாமல் நினேப்பவன், அறியப்படாமல் அறிபவன், அவனேக் காட்டிலும் வேருகக் காண்பவன் இல்லே. —ப்ரு.உப. 3.7.23.

ஒ. யச்சக்ஷுஷா ந பச்யதி யேன சக்ஷூம்ஷி பச்யதி கேன.உப. 1.6.

**येन विश्वमिदं व्याप्तं यन्न व्याप्नोति किंचन ।**
**आभारूपमिदं सर्वं यं भान्त-मनुभात्ययम् ॥ १२८ ॥**

யேன விச்வமிதம் வ்யாப்தம் யங்ந வ்யாப்னோதி கிஞ்சன | ஆபாரூபமிதம் ஸர்வம் யம் பாந்த-மனுபாத்யயம் || 128 ||

128. (யேன) எவனால் (இதம்) இந்த (விச்வம்) உலகு (வ்யாப்தம்) வியாபிக்கப்பட்டுள்ளதோ (யம்) எவனை (கிஞ்சன) எதுவும் (ந வ்யாப்னோதி) வியாபிக்காதோ, (ஆபா ரூபம் இதம்) பிரகாசமுடையதுபோல் தோன்றும் இவ்வுலகு (ஸர்வம்) அனைத்தும் (பாந்தம்) பிரகாசிக்கும் (யம்) எவனை (அனு-) பின்பற்றி (பாதி) பிரகாசிக்கிறதோ (அயம்) அவனே இவன்.

ஒ. 'விஷ்டப்யாஹமிதம் க்ருத்ஸ்னம் ஏகாம்சேன ஸ்திதோ ஜகத்' உலகனைத்தையும் என் யோகசக்தியின் ஒரு பகுதியால் தாங்கி நான் நிற்கின்றேன். —கீ. 1.42.

ஒ. 'தமேவ பாந்த-மனுபாதிஸர்வம் தஸ்ய பாஸா ஸர்விமிதம் விபாதி: கட.உப. 5.15.

यस्य सन्निधिमात्रेण देहेन्द्रियमनोधियः ।
विषयेषु स्वकीयेषु वर्तन्ते प्रेरिता इव ॥ १२९ ॥

யஸ்ய ஸங்நிதி - மாத்ரேண தேஹேந்த்ரியமனோதிய: | விஷயேஷு ஸ்வகீயேஷு வர்த்தந்தே ப்ரேரிதா இவ || 129 ||

129. (யஸ்ய) எவனுடைய (ஸங்நிதி மாத்ரேண) முன்னிலை மாத்திரத்தால் (தேஹ) உடல் (இந்திரிய-) இந்திரியங்கள் (மன:) மனது (திய:) புத்தி முதலியவை (ஸ்வகீயேஷு) தத்தமக்குரிய (விஷயேஷு) விஷயங்களில் (ப்ரேரிதா: இவ) ஏவப்பட்டவைகளைப் போல் (ப்ரவர்த்தந்தே) செயல் படுகின்றனவோ—அவனே இவன்.

ஒ. 'மயாऽத்யக்ஷேண ப்ரக்ருதி: ஸூயதே ஸசராசரம்'. என்னுடைய ஸந்நிதிமாத்திரத்தால் பிரகிருதி சராசரப்பிரபஞ்சத்தைப் பிறப்பிக்கின்றது. —கீ. 9.10.

ஒ. 'கேனேஷிதம் பததி ப்ரேஷிதம் மன:' எவனால் விரும்பப் பட்டும் தூண்டப்பட்டும் மனது விஷயங்களில் புகுகின்றது ? —கேன.உப. 1

**अहंकारादि-देहान्ता विषयाश्च सुखादयः ।**
**वेद्यन्ते घटवद्येन नित्यबोधस्वरूपिणा ॥ १३० ॥**

அஹங்காராதி-தேஹாந்தா விஷயாச்ச ஸுகா தய: | வேத்யந்தே கடவத்யேன நித்ய-போத-ஸ்வரூ பிணா || 130 ||

130. (அஹங்கார-ஆதி) அஹங்காரம் முதல் (தேஹ-அந்தா)-உடல் வரை உள்ள (விஷயா: ச) விஷயங்களும் (ஸுக-ஆதய:) இன்பம் முதலியவை களும் (நித்ய-போத-ஸ்வரூபிணு) என்றும் விழிப்பு வடிவுடைய (யேன) எவனால் (கடவத்) குடம் முதலிய வற்றைப்போல் (வேத்யந்தே) அறியப்படுவனவாகின் றனவோ—அவனே இவன்.

**एषोऽन्तरात्मा पुरुषः पुराणो निरन्तराखण्ड-सुखानुभूतिः ।**
**सदैकरूपः प्रतिबोध-मात्रो येनेषिता वागसवश्चरन्ति ॥१३१॥**

ஏஷோऽந்தராத்மா புருஷ: புராணோ நிரந்தரா-கண்ட-ஸுகானுபூதி: | ஸதைகரூப: ப்ரதிபோத-மாத்ரோ யேனேஷிதா வாகஸவச்சரந்தி || 131 ||

131. (ஏஷ: அந்தராத்மா) இவன் தான் அந்த ராத்மா, (புருஷ: புராண:) பழைமையான புருஷன்; (நிரந்தர-) எல்லையற்றதும் (அகண்ட-) பிளவு படாததுமான (ஸுக-அனுபூதி:) இன்ப அனுபவமே வடிவானவன்; (ஸதா) எப்பொழுதும் (ஏகரூப:) ஒரே

ரூபமுடையவன்; (ப்ரதிபோத மாத்ர:) ஒவ்வொரு உணர்விலும் விளங்குபவன்; (யேன) அவனுல் (ஈஷிதா:) ஏவப்பெற்றே (வாக்) வாக்கும் (அஸவ:) பிராணன்களும் (சரந்தி) இயங்குகின்றன.

ப்ரதிபோதமாத்ர:—'போதே போதே ப்ரதிபோதம் மீயத இதி மாத்ர:' ஒ. 'ப்ரதிபோதவிதிதம் மதம்' —கே.உ. 2.4'

अत्रैव सत्त्वात्मनि धीगुहाया-मव्याकृताकाश उशत्प्रकाशः ।
आकाश उच्चै-रविवत्प्रकाशते स्वतेजसा विश्वमिदं प्रकाशयन्
॥ १३२ ॥

அத்ரைவ ஸத்வாத்மனி தீகுஹாயா-மவ்யாக்ருதாகாச உசத்ப்ரகாச: | ஆகாச உச்சை-ரவிவத் ப்ரகாசதே ஸ்வதேஜஸா விச்வமிதம் ப்ரகாசயன் || 132 ||

132. (அத்ர ஏவ) இங்கே இவ்வுடலிலேயே (ஸத்வ-ஆத்மனி) ஸத்துவ குணம் நிறைந்த மனதில் (தீ-குஹாயாம்) புத்திகுகையில் (அவ்யாக்ருத-ஆகாசே) அவ்யாக்ருத ஆகாசத்தில் (உசத்ப்ரகாச:) சிறந்த ஒளியுடன் (ஆகாச:) ஆத்மாவானது (உச்சை: ரவிவத்) நடுப்பகல் சூரியன்போல் (ஸ்வதேஜஸா) தனது ஒளியால் (இதம் விச்வம்) இவ்வுலகனைத்தையும் (ப்ரகாசயன்) பிரகாசிப்பித்துக்கொண்டு (ப்ரகாசதே) விளங்குகிறது.

உருப்ரகாச: —பாடபேதம்

ज्ञाता मनोऽहंकृति-विक्रियाणां देहेन्द्रिय-प्राण-कृत-क्रियाणाम्
अयोऽग्निवत्तानुवर्तमानो न चेष्टते नो विकरोति किंचन
॥ १३३ ॥

ஜ்ஞாதா மனோऽஹங்க்ருதி-விக்ரியாணாம் தேஹேந்த்ரிய-ப்ராண-க்ருத-க்ரியாணாம் | அயோऽக்னிவத்-

தானனுவர்த்தமானோ ந சேஷ்டதே நோ விகரோதி கிஞ்சன || 133 ||

133. (மனஃ) மனது (அஹங்க்ருதி) அஹங்காரம் ஆகியவற்றின் (விக்ரியாணும்) மாறுதல்களையும் (தேஹ-) உடல் (இந்த்ரிய-) இந்திரியங்கள் (ப்ராண-) பிராணன் ஆகியவற்ருல் (க்ருத-) செய்யப்பட்ட (க்ரியாணும்) செயல்களையும் (ஜ்ஞாதா) அறிவதாயுளது—அந்தராத்மா. (அயோऽக்னிவத்) இரும்பைப்பற்றியுள்ள நெருப்பைப்போல் (தான்) அவற்றை (அனுவர்த்தமானஃ) தொடர்ந்திருப்பினும் (ந சேஷ்டதே) ஒன்றும் செய்வது மில்லை (கிஞ்சன) ஒரு சிறிதும் (நோ விகரோதி) மாறுதலடைவதுமில்லை.

ஒ. அக்னிர்யதைகோ புவனம் ப்ரவிஷ்டோ ரூபம் ரூபம் ப்ரதிரூபோ பபூவ| ஏகஸ்ததா ஸர்வபூதாந்தராத்மா ரூபம் ரூபம் ப்ரதிரூபோ பஹிச்ச || —கட.உப. 5.9.

न जायते न म्रियते न वर्धते न क्षीयते नो विकरोति नित्यः।
विलीयमानेऽपि वपुष्यमुष्मिन् न लीयते कुम्भ इवाम्बरः स्वयम् ॥ १३४ ॥

ந ஜாயதே ந ம்ரியதே நவர்த்ததே ந க்ஷீயதே நோ விகரோதி நித்யஃ || விலீயமானேऽபி வபுஷ்யமுஷ்யமுஷ்மின் ந லீயதே கும்ப இவாம்பரஃ ஸ்வயம் || 134 ||

134. (நித்ய) என்றுமுள்ள இவ்வாத்மா (ந ஜாயதே) பிறப்பதில்லை, (ந ம்ரியதே) இறப்பதில்லை, (நவர்த்ததே) வளர்வதில்லை. (நக்ஷீயதே) குறைவதில்லை, (நோ விகரோதி) மாறுவதில்லை. (அமுஷ்மின்) இந்த (வபுஷி விலீயமானே அபி) உடல் லயமடைந்த பொழுதும் (கும்பே) குடத்திலுள்ள (அம்பரஃ இவ) ஆகாயம் போல் (ஸ்வயம்) தான் (ந லீயதே) அழிவதில்லை.

**ந ஜாயதே**—'ஜாயதே அஸ்தி வர்த்ததே விபரிணமதே அபக்ஷீயதே நச்யதி இதி ஷட்விகாரா:' பிறக்கிறது இருக்கிறது வளர்கிறது மாறுகிறது குறைகிறது அழிகிறது என்று உடல் முதலியவற்றிற்கு விவகாரங்கள் ஆறு. இவை ஆத்மாவிற்கில்லை.

ஒ. கீ. 2.20—25. கட. உப. 2.18.

**प्रकृतिविकृति-भिन्नः शुद्धबोध-स्वभावः**
**सदसदिद-मशेषं भासयन्निर्विशेषः ।**
**विलसति परमात्मा जाग्रदादिष्ववस्था-**
**स्वहमहमिति साक्षात् साक्षिरूपेण बुद्धेः ॥१३५॥**

ப்ரக்ருதி-விக்ருதி-பின்னঃ சுத்த போத-ஸ்வபாவঃ ஸதஸதித-மசேஷம் பாஸயந்நிர்விசேஷঃ | விலஸதி பரமாத்மா ஜாக்ர-தாதிஷ்வவஸ்தாஸ்வஹமஹமிதி ஸாக்ஷாத் ஸாக்ஷி ரூபேண புத்தேঃ || 135 ||

135. (ப்ரக்ருதி-விக்ருதி-பின்னঃ) மூலப்பிரக்கிருதியினின்றும் அதன் மாறுபாடுகளினின்றும் வேறுபட்டதாயும் (சுத்த-போத-ஸ்வபாவঃ) பரிசுத்தமான ஞான இயல்புடையதாயும் (ஸத்-அஸத்-இதம் அசேஷம்) ஸூக்ஷ்மமாகவும் ஸ்தூலமாகவும் உள்ள இவ்வுலகனைத்தையும் (பாஸயன்) பிரகாசிப்பித்துக் கொண்டும் (நிர்விசேஷঃ) நிர்க்குணமான (பரமாத்மா) பரமாத்மா (ஜாக்ரத்-ஆதிஷு-அவஸ்தாஸு) விழிப்பு முதலிய நிலைகளில் (அஹம் அஹம் இதி) நான், நான் என்று (ஸாக்ஷாத்) அனைவராலும் உணரப்படுவதாய் (புத்தேঃ) (புத்தியின் ஸாக்ஷிரூபேண) ஸாக்ஷி வடிவில் (விலஸதி) விளங்குகிறது.

ஒ. பால்யாதிஷ்வபி ஜாக்ரதாதிஷு ததா ஸர்வாஸ்வவஸ்தாஸ்வபி வ்யாவ்ருத்தாஸ்வனு வர்த்தமான-மஹமித்-யந்தঃ ஸ்புரந்தம் ஸதா | ஸ்வாத்மானம் ப்ரகடீகரோதி பஜதாம் யோ முத்ரயா

பத்ரயா தஸ்மை ஸ்ரீகுருமூர்த்தயே நம இதம் ஸ்ரீதக்ஷிணாமூர்த்தயே ||
—சங்.—தக்ஷிணாமூர்த்தி ஸ்தோத்ரம்.

नियमित-मनसा त्वं स्वमात्मान-मात्म-
न्ययमहमिति साक्षाद्विद्धि बुद्धिप्रसादात् ।
जनिमरणतरंगापारसंसारसिन्धुं
प्रतर भव कृतार्थो ब्रह्मरूपेण संस्थः ॥ १३६ ॥

நியமித-மனஸா த்வம் ஸ்வமாத்மான-மாத்மன்-யய-மஹமிதி ஸாக்ஷாத்வித்தி புத்தி ப்ரஸாதாத் | ஜனி-மரண-தரங்காபாரஸம்ஸாரஸிந்தும் ப்ரதர பவ க்ருதார்த்தோ ப்ரஹ்மரூபேண ஸம்ஸ்தஃ || 136 ||

136. (நியமித-மனஸா) அடக்கப்பட்ட மனதால் (ஆத்மனி) உன்னிடத்திலேயே (த்வம்) நீ (ஸ்வம் ஆத்மானம்) உன்னுடைய ஆத்மாவை (அயம் அஹம் இதி) இது தான் நான் என்று (புத்தி ப்ரஸாதாத்) புத்தியின் தெளிவால் (ஸாக்ஷாத்) நேராக (வித்தி) அறிவாயாக. (ஜனி-) பிறப்பு (மரண) இறப்பு ஆகிய (தரங்க-) அலையுடன் கூடிய (அபார-) கடக்க முடியாத (ஸம்ஸார-ஸிந்தும்) பிறவிக்கடலை (ப்ரதர) கடப்பாயாக. (ப்ரஹ்மரூபேண) பிரம்மரூபத்துடன் (ஸம்ஸ்தஃ) நிலை பெற்றவனாய் (க்ருதார்த்தஃ) செய்ய வேண்டியதைச் செய்தவனாய் (பவ) ஆவாயாக.

நியமித-மனஸாமும் த்வம் —பாடபேதம்.

புத்திப்ரஸாதாத்—ஒ. 'விதேயாத்மா ப்ரஸாத-மதிகச்சதி' தன்னடக்கம் பெற்றவன் உள்ளத்தெளிவை எய்துகிறான்.—கீ. 2.64.

ஐயம் திரிபு அறியாமை நீங்குவதால் புத்தியின் தெளிவு ஏற்படும். அதனால் ஆத்மதரிசனம் ஏற்படும்.

ஒ. 'ஜ்ஞானப்ரஸாதேன விசுத்த-ஸத்வஸ்-ததஸ்து தம் பச்யதே நிஷ்கலம் த்யாயமான:' —மு. உப. 3.1.8.

ஒ. பாதரஸங் தடவின கண்ணுடியில் ஒருவனுடைய முகம் பிரதிபலிக்கும். அது போலச்சக்தியையும் தூய்மையையும் பிரம்ம சரியத்தால் காப்பாற்றிக் கொண்டிருக்கிறவனுடைய இருதயத்தில் பரமாத்ம ரூபம் பிரதிபலிக்கும். ரா.கி.

க்ருதரார்த்த:—ஜ்ஞாநம்ருதேன த்ருப்தஸ்ய க்ருத-க்ருத்யஸ்ய யோகின:| நைவாஸ்தி கிஞ்சித் கர்த்தவ்யம் அஸ்தி சேந்ந ஸ தத்வவித் ||

अत्रानात्मन्यहमिति मति-र्बन्ध एषोऽस्य पुंसः
प्राप्तोऽज्ञानाज्जननमरणक्लेश-संपातहेतुः ।
येनैवायं वपुरिद-मसत्सत्यमित्यात्मबुद्ध्या
पुष्यत्युक्षत्यवति विषयै-स्तन्तुभिः कोशकृद्वत् ॥ १३७ ॥

**அத்யாஸ:**

அத்ராநாத்மன்-யஹமிதி மதிர்-பந்த ஏஷோऽஸ்ய பும்ஸ: ப்ராப்தோऽஜ்ஞாநாஜ்ஜனன-மரண-க்லேச-ஸம்பாதஹேது: | யேனைவாயம் வபுரித-மஸத்ஸத்யமித்-யாத்மபுத்த்யா புஷ்யத்யுக்ஷத்யவதி விஷயைஸ்-தந்துபி: கோசக்ருத்வத் || 137 ||

**அத்யாஸம்**

137. (அத்ர) இங்கு (அநாத்மனி) ஆத்மா அல்லாததில் (அஹம் இதி) நான் என்ற (ஏஷ:) இந்த (மதி:) எண்ணம் (அஸ்ய பும்ஸ:) இப்புருஷனுக்கு (பந்த:) தளையாகும். (அஜ்ஞாநாத்) அறிவின்மையால் (ப்ராப்த:) அடையப்பெற்ற இது (ஜனன-மரண-க்லேச-ஸம்பாத-ஹேது:) பிறப்பு இறப்பு முதலியவற்றால் ஏற்படும் துன்பங்களுக்குக் காரணம். (யேன ஏவ) இதனால் தான் அயம்) இவன் (அஸத்) பொய்யான (இதம் வபு:) (இவ்வுடலை (ஆத்ம-புத்த்யா) ஆத்மா என்ற எண்ணத்தால் (ஸத்யம் இதி) மெய்யென்று (தந்துபி:) நூல்

களால் (கோசக்ருத்வத்) பட்டுப்புழுவைப் போல் (விஷயைः) விஷயங்களால் (புஷ்யதி) போஷிக்கிருன், (உக்ஷதி) நீராட்டுகிருன் (அவதி) காப்பாற்றுகிருன்.

ஒ.' அநித்யாசுசி-து:க்காளுத்மஸு நித்ய-சுசி-ஸுகாத்மத்வக்யாதிரவித்யா'. நிலையற்றதும் அசுத்தமானதும் துன்பம் நிறைந்தது மான அனுத்மப் பொருளில் நிலையுள்ளது பரிசுத்தமானது இன்பமுள்ளது என்ற ஆத்மபுத்தி அவித்தை எனப்படும்.

—யோ. சூ. 2.5.

**பட்டுப்புழுவைப்போல்**—தான் செய்த கூட்டில் பட்டுப்புழு மறைந்து மடிவதைப்போல் அஞ்ஞானி அழிகிருன்.

अतस्मिंस्तद्बुद्धिः प्रभवति विमूढस्य तमसा
विवेकाभावाद्वै स्फुरति भुजगे रज्जुधिषणा ।
ततोऽनर्थव्रातो निपतति समादातुरधिक-
स्ततो योऽसद्ग्राहः स हि भवति बन्धः शृणु सखे
॥ १३८ ॥

அதஸ்மிம்ஸ்தத்புத்திः ப்ரபவதி விமூடஸ்ய தமஸா
விவேகாபாவாத்வை ஸ்புரதி புஜகே ரஜ்ஜுதிஷணு |
ததோऽனர்த்தவ்ராதோ நிபததி ஸமாதாது-ரதிகஸ்ததோ
யோऽஸத்க்ராஹः ஸஹி பவதி பந்தः ச்ருணு ஸகே ||
138 ||

138. (அதஸ்மின்) அது அல்லாததில் (தத்-புத்திः) அது என்ற புத்தி (தமஸா) தமோகுணத்தால் (விமூடஸ்ய) கவரப்பட்டவனுக்கு (ப்ரபவதி) ஏற்படுகிறது. (புஜகே) பாம்பில் (ரஜ்ஜுதிஷணு) பழுதை என்ற புத்தி (விவேக-அபாவாத் வை) பகுத்தறிவு இன்மையாலேயே (ஸ்புரதி) தோன்றுகிறது. (ததः) அதனுல் (ஸமாதாதுः) அதைப்பற்றுபவனுக்கு (அதிகः) அதிகமான

(அனர்த்த-வ்ராதஃ) ஆபத்துக்கூட்டம் (நிபததி) விளை கிறது. (ததஃ) ஆகையால் (ஸகே) அன்பனே (ச்ருணு) கேட்பாயாக, (அஸத்க்ராஹஃ) பொய்யை மெய்யென்று பற்றிக்கொள்வது (யஃ) எதுவோ (ஸ ஹி) அதுவே (பந்தஃ) தளையாக (பவதி) ஆகிறது.

अखण्ड-नित्याद्वय-बोधशक्त्या स्फुरन्त-मात्मान-मनन्तवैभवम्
समावृणोत्यावृति-शक्तिरेषा तमोमयी राहुरिवार्क बिम्बम्
॥ १३९ ॥

அகண்ட-நித்யாத்வய-போத-சக்த்யா ஸ்புரந்த-மாத்மான-மனந்தவைபவம் | ஸமாவ்ருணோத்யாவ்ருதி-சக்திரேஷா தமோமயீ ராஹுரிவார்க்கபிம்பம் || 139 ||

139. (அகண்ட-) பிளவுபடாததும் (நித்ய-) என்றுமுள்ளதும் (அத்வய-) இரண்டற்றதுமான போத சக்த்யா) ஞானசக்தியுடன் (ஸ்புரந்தம்) பிரகாசிக்கும் (அனந்தவைபவம்) அளவுகடந்த பெருமை வாய்ந்த (ஆத்மானம்) ஆத்மாவை (தமோமயீ) தமோ மயமான (ஏஷா) இந்த (ஆவ்ருதி-சக்திஃ) ஆவரணசக்தி (அர்க்க பிம்பம்) சூரியமண்டலத்தை (ராஹுஃ இவ) ராகுமறைப்பது போல் (ஸமாவ்ருணோதி) மறைத்து விடுகிறது.

तिरोभूते स्वात्मन्यमलतर-तेजोवति पुमा-
ननात्मानं मोहादहमिति शरीरं कलयति ।
ततः कामक्रोध-प्रभृतिभिरमुं बन्धनगुणैः
परं विक्षेपाख्या रजस उरुशक्तिर्व्यथयति ॥१४०॥

திரோபூதே ஸ்வாத்மன்யமலதர-தேஜோவதி புமா-னனாத்மானம் மோஹாதஹமிதி சரீரம் கலயதி | ததஃ காமக்ரோத-ப்ரப்ருதிபிரமும் பந்தனகுணைஃ பரம் விக்ஷேபாக்யா ரஜஸ உருசக்திர் வ்யதயதி || 140 ||

140. (அமலதர-) பரிசுத்தமானதும் (தேஜோவதி) ஒளிமிக்கதுமான (ஸ்வாத்மனி திரோபூதே) ஆத்மதத்துவம் மறைக்கப்பட்டதும் (புமான்) புருஷன் (அனுத்மானம்) தானல்லாத (சரீரம்) உடலை (மோஹாத்) மதி மயக்கத்தால் (அஹம் இதி) தான் என்று (கலயதி) கருதுகிருன். (ததঃ பரம்) அதன்பின் (காம-க்ரோத-ப்ரப்ருதிபிঃ) ஆசை கோபம் முதலிய (பந்தனகுணைঃ) கட்டுப்படுத்தும் குணங்களால் (விக்ஷேப-ஆக்யா) விக்ஷேபம் எனப்பட்ட (ரஜஸ-உருசக்திঃ) ரஜோகுணத்தின் வலியசக்தி (அமும்) இவனை (வ்யதயதி) துன்புறுத்துகிறது.

**காமக்ரோதப்ரப்ருதிபிঃ**—சரீராபிமானத்தால் பிரியவஸ்துக்களில் ஆசை, அது கிடைக்காவிட்டால் கோபம், கிடைத்தால் அதில் லோபம் என்றிப்படி துன்பம் வளர்கிறது. ஒ. 'ஆத்மாவிற்கு நாசம் விளைக்கும் நரகவாயில் மூவகைத்து; காமம் கோபம் லோபம் என்பன; ஆகையால் இம்மூன்றையும் தள்ள வேண்டும்.—கீ 16.21

**महामोहग्राह-ग्रसनगलितात्मावगमनो**
**धियो नानावस्थां स्वयमभिनयंस्तद्गुणतया ।**
**अपारे संसारे विषयविषपूरे जलनिधौ**
**निमज्ज्योन्मज्ज्यायं भ्रमति कुमतिः कुत्सितगतिः ॥ १४१ ॥**

மஹாமோஹக்ராஹ-க்ரஸனகலிதாத்மாவகமனோ
தியோ நானாவஸ்தாம் ஸ்வயமபிநயம்ஸ்தத்குணதயா |
அபாரே ஸம்ஸாரே விஷயவிஷபூரே ஜலநிதௌ
நிமஜ்ஜ்யோன்மஜ்ஜ்யாயம் ப்ரமதி குமதிঃ குத்ஸிதகதிঃ || 141 ||

141. (மஹா மோஹக்ராஹ-) பெரும் மதிமயக்கமாகிற முதலையால் (க்ரஸன-) கவ்வி (கலித-) விழுங்கப்

பட்டு (ஆத்ம-அவகமன-தியঃ) ஆத்ம ஞான புத்தியை இழந்தவனும் (குமதிঃ) மதிகெட்டவனும் (குத்ஸித-கதிঃ) இழிவான வழியில் செல்லுபவனுமாகிய இவன் (தத் குணதயா) புத்தியின் குணத்துடன்கூடி (நாநு-அவஸ்-தாம்) பல அவஸ்தைகளை (ஸ்வயம் அபிநயன்) தான் நடித்துக்கொண்டு (அபாரே) கரைகாண முடியாததும் (விஷய விஷ பூரே) விஷயமாகிய விஷம் நிறைந்தது மான (ஸம்ஸரரே ஜலநிதௌ) ஸம்ஸாரக்கடலில் (நிமஜ்ஜ்ய) முழுகியும் (உன்மஜ்ஜ்ய) எழுந்தும் (ப்ர மதி) சுழல்கிறுன்.

நாநுவஸ்தா: ஸ்வயம் —பா. பே.

भानुप्रभा-संजनिताभ्रपंक्ति-
भानुं तिरोधाय विजृंभते यथा ।
आत्मोदिताहंकृति-रात्मतत्त्वं
तथा तिरोधाय विजृंभते स्वयम् ॥ १४२ ॥

பானுப்ரபா-ஸஞ்ஜனிதாப்ரபங்க்திர்-பானும் திரோ-தாய விஜ்ரும்பதே யதா | ஆத்மோதிதாஹங்க்ருதி-ராத்ம-தத்வம் ததா திரோதாய விஜ்ரும்பதே ஸ்வயம் || 142 ||

142. (பானுப்ரபா-) சூரிய ஒளியால் (ஸஞ்ஜனித-) உண்டாக்கப்பட்ட (அப்ரபங்க்திঃ) மேகக் கூட்டம் (பானும்) சூரியனை (திரோதாய) மறைத்து (யதா) எங்ஙனம் (விஜ்ரும்பதே) தான் பிரகாசிக்கிறதோ (ததா) அங்ஙனமே (ஆத்ம-உதித-அஹங்க்ருதிঃ) ஆத்மாவினிடம் உதித்த அகங்காரம் (ஆத்ம தத்வம்) ஆத்ம தத்துவத்தை (திரோதாய) மறைத்து (ஸ்வயம் விஜ்ரும்பதே) தான் பிரகாசிக்கிறது.

பானுப்ரபாஸாஜ்ஜனிதாப்ர | திரோதாய யதா விஜ்ரும்பதே | —பா. பே.

**कवलित-दिननाथे दुर्दिने सान्द्रमेघै-**
**र्व्यथयति हिमझंझा-वायुरुग्रो यथैतान् ।**
**अविरत-तमसात्मन्यावृते मूढबुद्धिं**
**क्षपयति बहुदुःखैस्तीव्र-विक्षेपशक्तिः ॥ १४३ ॥**

கவலித-தினநாதே துர்தினே ஸாந்த்ரமேகைர்-
வ்யதயதி ஹிமஜஞ்ஜா-வாயுருக்ரோ யதைதான் |
அவிரத-தமஸாத்மன்யாவ்ருதே மூடபுத்திம் க்ஷபயதி
பஹுதுஃக்கைஸ்-தீவ்ர-விக்ஷேபசக்திஃ || 143 ||

143. (ஸாந்த்ரமேகைஃ) அடர்ந்த மேகங்களால் (கவலித-தினநாதே) பகலவனாகிய சூரியன் விழுங்கப்பட்ட (துர்தினே) இருள் நாளில் (ஹிமஜஞ்ஜா-வாயுஃ-உக்ரஃ) குளிர்ந்ததும் கொடியதுமான காற்று (ஏதான்) இம்மேகங்களை (யதா) எவ்வாறு (வ்யதயதி) அலைக்கழித்துத் துன்புறுத்துமோ அங்ஙனம் (தீவ்ர-விக்ஷேப-சக்திஃ) கொடிய விக்ஷேபசக்தியானது (அவிரத-தமஸா) அடர்ந்த தமோகுணத்தால் (ஆத்மனி ஆவ்ருதே) ஆத்மா மறைக்கப்பட்டபொழுது (மூடபுத்திம்) மதியிழந்த அவனை (பஹுதுஃக்கைஃ) பலதுன்பங்களால் (க்ஷபயதி) அலைக்கழித்துத் துன்புறுத்துகிறது.

**एताभ्यामेव शक्तिभ्यां बन्धः पुंसः समागतः ।**
**याभ्यां विमोहितो देहं मत्वात्मानं भ्रमत्ययम् ॥१४४॥**

ஏதாப்யாமேவ சக்திப்யாம் பந்தஃ பும்ஸஃ ஸமாகதஃ |
யாப்யாம் விமோஹிதோ தேஹம் மத்வாத்மானம்
ப்ரமத்யயம் || 144 ||

144. (ஏதாப்யாம் ஏவ சக்திப்யாம்) இவ்விரண்டு சக்திகளினின்றே (பும்ஸஃ) புருஷனுக்கு (பந்தஃ) தளை

யானது (ஸமாகத꞉) வந்துளது. (யாப்யாம்) இவற்ருல் (விமோஹித꞉) மயக்கமடைந்த (அயம்) இவன் (ஆத்மானம்) தன்னை (தேஹம் மத்வா) உடல் என்று கருதி (ப்ரமதி) சுழல்கிருன்.

இரண்டுசக்திகள்—ஆவரணசக்தியும் விக்ஷேப சக்தியும்.

संसारवृक्षः

बीजं संसृतिभूमिजस्य तु तमो देहात्मधीरंकुरो
रागः पल्लव-मम्बु कर्म तु वपुः स्कन्धोऽसवः शाखिकाः ।
अग्राणीन्द्रिय-संहतिश्च विषयाः पुष्पाणि दुःखं फलं
नानाकर्म-समुद्भवं बहुविधं भोक्तात्र जीवः खगः
॥ १४५ ॥

ஸம்ஸாரவ்ருக்ஷ꞉

பீஜம் ஸம்ஸ்ருதி-பூமிஜஸ்ய து தமோ தேஹாத்மதீரங்குரோ ராக꞉ பல்லவ-மம்பு கர்ம து வபு꞉ ஸ்கந்தோऽஸவ꞉ சாகிகா꞉। அக்ராணீந்த்ரிய-ஸம்ஹதிச்ச விஷயா꞉ புஷ்பாணி து꞉க்கம் பலம் நாநாகர்ம-ஸமுத்பவம் பஹுவிதம் போக்தாऽத்ர ஜீவ꞉ கக꞉ ॥ 145 ॥

ஸம்ஸார விருக்ஷம்

145. (ஸம்ஸ்ருதி-) ஸம்ஸாரமாகிற (பூமிஜஸ்ய) மரத்தினுடைய (பீஜம் து) விதை எதுவெனின் (தம꞉) அஞ்ஞானம்; (தேஹாத்ம-தீ꞉) உடலைத் தான் என்று கொள்ளும் புத்தி (அங்குர꞉) முளை; (ராக꞉) பற்று (பல்லவம்) துளிர்; (கர்ம) செயல் (அம்பு) தண்ணீர்; (வபு꞉ து) உடலோவெனின் (ஸ்கந்த꞉) அடிமரம்; (அஸவ꞉) பிராணன்கள் (சாகிகா꞉) கிளைகள்; (இந்த்ரிய-ஸம்ஹதி꞉) இந்திரியக்கூட்டம்; (அக்ராணி) கிளை நுனிகள்; (விஷயா꞉) விஷயங்கள் (புஷ்பாணி)

புஷ்பங்கள் ; (நாஞ-கர்ம-ஸமுத்பவம்) பலவகைப்பட்ட செயல்களினின்றுதித்த (பஹுவிதம் துஃக்கம்) பல விதமான துக்கம் (பலம்) பழம் ; (போக்தா) இப்பழத்தை உண்பவன் (அத்ர) இங்கு (ஜீவஃ ககஃ) ஜீவனாகிய பறவை.

துக்கம் பழம்—விஷய சுகமும் துக்கமாகவே ஞானிகளால் கொள்ளப்படுகிறது. ஒ. எந்த இன்பங்கள் வெளிப்பரிசத்தால் உண்டானவையோ அவை துன்பத்திற்குப் பிறப்பிடமா யுள்ளவை களே, ஆரம்பமும் முடிவும் உள்ளவையாதலால்; அறிவாளி அவைகளில் களிப்புறமாட்டான். —கீ 5. 22.

துன்பமாகிய பழத்தைத் தரும் விஷவிருக்ஷத்தைப் போன்றது ஸம்ஸாரம். ஒ. அதச்சோர்த்வம் ப்ரஸ்ருதா: —கீ 15.2.

## ॥ बन्धनिरूपणम् ॥

अज्ञानमूलोऽयमनात्मबन्धो नैसर्गिकोऽनादि-रनन्त ईरितः ।
जन्माप्यय-व्याधि-जरादिदुःख-प्रवाहतापं जनयत्यमुष्य
॥ १४६ ॥

### பந்தநிருபணம்

அஜ்ஞானமூலோऽயமநாத்மபந்தோ நைஸர்கிகோ ऽநாதி-ரனந்த ஈரிதஃ | ஜன்மாப்யய-வ்யாதி-ஜராதி-துஃக்க-ப்ரவாஹதாபம் ஜனயத்யமுஷ்ய || 146 ||

### தனியின் விளக்கம்

146. (அயம்) இந்த (அநாத்மபந்தஃ) அநாத்மத்தளை (அஜ்ஞான மூலஃ) அஞ்ஞானத்தை வேராக உடையது (நைஸர்கிகஃ) தானே தோன்றுவது (அநாதிஃ) ஆதி யில்லாதது (அனந்தஃ) முடிவில்லாதது (ஈரிதஃ) என்று கூறப்பட்டுளது. (ஜன்ம-) பிறவி (அப்யய-) அழிவு (வ்யாதி) நோய் (ஜரா-) மூப்பு (ஆதி-) முதலிய (துஃக்க-ப்ரவாஹ-தாபம்) துன்பவெள்ளத்தின் கஷ்டத்தை

(அமுஷ்ய) இந்த ஜீவனுக்கு (ஜனயதி) உண்டாக்கு கிறது.

முடிவில்லாதது— அஞ்ஞானமுள்ளவரை; ஞானோதயமே அதற்கு முடிவு.

ப்ரவாஹ-பாதம்—பா. பே.

॥ आत्मानात्मविवेकः ॥

नास्त्रै-र्न शस्त्रै-रनिलेन वह्निना
छेत्तुं न शक्यो न च कर्मकोटिभिः ।
विवेक-विज्ञान-महासिना विना
धातुः प्रसादेन सितेन मंजुना ॥ १४७ ॥

ஆத்மானாத்ம விவேகः

நாஸ்த்ரைர்-ந சஸ்த்ரை-ரநிலேன வஹ்னினா ச்சேத்தும் ந சக்யோ ந ச கர்மகோடிபிः | விவேக-விஜ்ஞான-மஹாஸினா விநா தாதுः ப்ரஸாதேன ஸிதேன மஞ்ஜுனா || 147 ||

ஆத்மானாத்ம விவேகம்

147. (தாதுः-) பகவானுடைய (ப்ரஸாதேன) அருளால் (ஸிதேன) தீட்டப்பெற்றதும் (மஞ்ஜுனா) அழகியதுமான (விவேக-விஜ்ஞான-மஹா-அஸினா விநா) விவேக விக்ஞான மென்னும் சிறந்த வாளினாலன்றி (அஸ்த்ரைः) பிற அஸ்திரங்களாலோ (சஸ்த்ரைः) சஸ்திரங்களாலோ (அநிலேன) காற்றாலோ (வஹ்னினா) நெருப்பாலோ (ச்சேத்தும்)—இந்தத்தளை களைவதற்கு (ந சக்யः) இயலாதது; (ந ச கர்ம கோடிபிः) கோடிக்கணக்கான கருமங்களாலும் இயலாது.

விவேக-விஜ்ஞான-மஹாஸினா—ஒ. ஆகையால் அஞ்ஞானத்திலிருந்து பிறந்ததும் உள்ளத்தில் உறைவது மாகிய இந்த

ஆத்மாவைப்பற்றிய ஸம்சயத்தை ஞானமெனும் வாளால் வெட்டி யோகத்தில் நிலை பெறுதி. பாரதா ! எழுந்திரு. —கீ. 4.42.

**தாதுঃ ப்ரஸாதேன**—ஒ. 'தமக்ரது: பச்யதி வீதசோகோ தாது: ப்ரஸாதான் மஹிமான - மாத்மன:'—'தாதுঃ ப்ரஸாதாத்' என்பது அந்தக்கரணத்தின் தெளிவால் என்றும் பொருள் படும். —கட. உப. 2.20

**श्रुतिप्रमाणैकमतेः स्वधर्म-निष्ठा तयैवात्म-विशुद्धिरस्य ।**
**विशुद्धबुद्धेः परमात्मवेदनं तेनैव संसार-समूलनाशः ॥ १४८ ॥**

ச்ருதிப்ரமாணைகமதேঃ ஸ்வதர்ம-நிஷ்டா தயை-வாத்ம-விசுத்தி-ரஸ்ய | விசுத்த-புத்தேঃ பரமாத்ம-வேதனம் தேனைவ ஸம்ஸார-ஸமூல-நாசঃ || 148 ||

148. (ச்ருதிப்ரமாண-ஏகமதேঃ) வேதத்தைப் பிரமாணமாக முழுதும் நம்பியவனுக்கு (ஸ்வதர்ம நிஷ்டா) ஸ்வதர்ம அனுஷ்டானத்தில் நிலைத்தலும் (தயா எவ) அதனாலேயே (ஆத்ம-விசுத்திঃ) மனத்தூய்மையும் ஏற்படுகிறது. (அஸ்ய விசுத்த புத்தேঃ) இங்ஙனம் மனத்தூய்மை எய்திய இவனுக்கு (பரமாத்ம-வேதனம்) பரமாத்மஸாக்ஷாத்காரம் கிட்டுகிறது. (தேன ஏவ) அதனாலேயே (ஸம்ஸார-ஸமூல-நாசঃ) வேருடன் ஸம்ஸார விருக்ஷம் நாசமடைகிறது.

**ச்ருதிப்ரமாணம்**—ஒ. தஸ்மாச்சாஸ்த்ரம் ப்ரமாணம் தே கார்யாகார்ய-வ்யவஸ்திதௌ | —கீ 16.24.

**விசுத்த-புத்தேঃ**—ஒ. 'ஜ்ஞானமுத்பத்யதே பும்ஸாம் க்ஷயாத் பாபஸ்ய கர்மண:' பாவச்செயலொழிந்த புருஷனுக்கு ஞானம் தானாகவே உண்டாகிறது.

**कोशै-रन्नमयाद्यैः पंचभिरात्मा न संवृतो भाति ।**
**निजशक्तिसमुत्पन्नैः शैवालपटलै-रिवाम्बु वापीस्थम् ॥ १४९ ॥**

கோசைரன்னமயாத்யைః பஞ்சபிராத்மா ந ஸம்-
வ்ருதோ பாதி | நிஜசக்தி-ஸமுத்பன்னைః சைவால-
படலைரிவாம்பு வாபீஸ்தம் || 149 ||

149. (நிஜசக்தி-ஸமுத்பன்னைః) தன்னுடைய சக்தியாலேயே தோற்றுவிக்கப்பட்ட (பஞ்சபிః) ஐந்து வகையான (அன்னமய-ஆத்யைః) அன்னமயம் முதலான (கோசைః) கோசங்களால் (ஸம்வ்ருதః) சூழப்பெற்ற (ஆத்மா) ஆத்மாவானது (ந பாதி) பிரகாசிப்பதில்லை; (வாபீஸ்தம்) குளத்திலுள்ள (அம்பு) நீரானது (சைவாலபடலைః இவ)—தன்னிட முதித்த—பாசிக்கூட்டத்தால் மறைக்கப்படுவது போல்.

तच्छैवालापनये सम्यक् सलिलं प्रतीयते शुद्धम् ।
तृष्णासन्तापहरं सद्यः सौख्यप्रदं परं पुंसः ॥ १५० ॥

தச்சைவாலாபநயே ஸம்யக் ஸலிலம் ப்ரதீயதே
சுத்தம் | த்ருஷ்ணாஸந்தாபஹரம் ஸத்யః ஸௌக்ய-
ப்ரதம் பரம் பும்ஸः || 150 ||

150. (தத்) அந்த (சைவால-) பாசியானது (அபநயே) நீக்கப்பெற்றதும் (ஸலிலம்) நீர் (ஸம்யக்) நன்றாக (சுத்தம்) சுத்தமாயும் (ஸத்யः) உடனே (பும்ஸः) மனிதனுக்கு (த்ருஷ்ணா-) தாகத்தையும் (ஸந்தாப-) வெப்பத்தையும் (ஹரம்) போக்குவதாயும் (பரம் ஸௌக்யம்) உயர்ந்த இன்பத்தையளிப்பதாயும் (ப்ரதீயதே) காணப்படுகிறது.

பா. பே.
பரம் பும்ஸः—பரம் பும்ஸாம் |

पंचानामपि कोशाना-मपवादे विभात्ययं शुद्धः ।
नित्यानन्दैकरसः प्रत्यग्रूपः परं स्वयंज्योतिः ॥ १५१ ॥

பஞ்சாஞமபி கோசாஞ-மபவாதே விபாத்யயம் சுத்தः | நித்யானந்தைகரஸः ப்ரத்யக்ரூபः பரம் ஸ்வயஞ்ஜ்யோதிः || 151 ||

151. (பஞ்சாஞம் அபி) ஐந்துவகையான (கோசாஞம்) கோசங்களின் (அபவாதே) நீக்கம் ஏற்பட்டதும் (அயம்) இவ்வாத்மா (சுத்தः) பரிசுத்த மாயும் (நித்ய-ஆனந்த-ஏக-ரஸः) அழியாத இன்பச் சுவை ஒன்றேயாகியும் (ஸ்வயம் ஜ்யோதிः) தானே பிரகாசிப்பதாயும் (பரம்) சிறந்ததாயும் (ப்ரத்யக்ரூபः) உள்ளொளிவடிவாயும் (விபாதி) விளங்குகிறது.

**கோசங்களின் நீக்கம்**—அவை அஞத்மா என்ற அறிவு.

**आत्मानात्म-विवेकः कर्तव्यो बन्धमुक्तये विदुषा ।**
**तेनैवानन्दी भवति स्वं विज्ञाय सच्चिदानन्दम् ॥ १५२ ॥**

ஆத்மாஞத்ம-விவேகः கர்த்தவ்யோ பந்தமுக்தயே விதுஷா | தேனைவானந்தீ பவதி ஸ்வம் விஜ்ஞாய ஸச்சிதானந்தம் || 152 ||

152. (விதுஷா) அறிவாளியால் (பந்தமுக்தயே) ஸம்ஸாரத்தளையினின்று விடுதலையடைவதற்காக (ஆத்ம-அஞத்ம-விவேகः) ஆத்மாவிற்கும் அஞத்மா விற்குமுள்ள வேற்றுமையைப் பகுத்து உணர்தல் (கர்த்தவ்யः) செய்யப்படவேண்டும். (ஸ்வம்) தன்னை (ஸச்சிதானந்தம்) ஸச்சிதானந்தவடிவினஞக (விஜ்ஞாய) அறிந்து (தேன ஏவ) அவ்வறிவால் (ஆனந்தீ) ஆனந்தத்தை யனுபவிப்பவஞக (பவதி) ஆகிருன்.

**मुञ्जादिषीकामिव दृश्यवर्गात् प्रत्यंचमात्मान-मसंगमक्रियम् ।**
**विविच्य तत्र प्रविलाप्य सर्वं तदात्मना तिष्ठति यः स मुक्तः ॥ १५३ ॥**

முஞ்ஜாதிஷீகாமிவ த்ருச்யவர்க்காத் ப்ரத்யஞ்ச-
மாத்மான-மஸங்க-மக்ரியம் | விவிச்ய தத்ர ப்ரவிலாப்ய
ஸர்வம் ததாத்மனு திஷ்டதி யঃ ஸ முக்தঃ ‖ 153 ‖

153. (முஞ்ஜாத்) ஊகைப்புல்லினின்று (இஷீகாம் இவ) ஈர்க்கைப் பிரித்தெடுப்பதுபோல் (த்ருச்ய வர்க்காத்) வெளியே காணப்படும் பொருட்கூட்டத்தினின்று (ப்ரத்யஞ்சம்) உள்ளுறைவதும் (அஸங்கம்) பற்றற்றதும் (அக்ரியம்) செயலற்றதுமான (ஆத்மானம்) ஆத்மாவை (விவிச்ய) பிரித்து (தத்ர) அதில் (ஸர்வம்) அனைத்தையும் (ப்ரவிலாப்ய) ஒடுங்கச் செய்து (தத் ஆத்மனு) அதன்வடிவா யதுவேயாகி (யঃ) எவன் (திஷ்டதி) நிலைபெறுகிருனே (ஸঃ) அவன் (முக்தঃ) முக்தி எய்தியவனுகின்ருன்.

முஞ்ஜாதிஷீகாமிவ—ஒ. அங்குஷ்ட்டமாத்ரঃ புருஷோऽந்தராத்மா ஸதா ஜனனும் ஹ்ருதயே ஸந்நிவிஷ்டঃ | தம் ஸ்வாச்சரீராத் ப்ரவ்ருஹேன் முஞ்ஜாதிவேஷீகாம் தைர்யேண ‖ —கட.20.6.17.

ஒ. பாம்பும் அதன் மேற்சட்டையும் வெவ்வேருனவை. அதுபோல் ஆத்மாவும் சரீரமும் வெவ்வேருனவை. —ரா. கி.

## अन्नमयकोशः

देहोऽयमन्नभवनोऽन्नमयस्तु कोश-
श्चान्नेन जीवति विनश्यति तद्विहीनः ।
त्वक्चर्म-मांस-रुधिरास्थि-पुरीषराशि-
र्नायं स्वयं भवितु-मर्हति नित्यशुद्धः ॥ १५४ ॥

அன்னமய கோசঃ

தேஹோऽய மன்னபவனோऽன்னமயஸ்து கோசச்-
சான்னேன ஜீவதி விநச்யதி தத் விஹீனঃ | த்வக்சர்ம-

மாம்ஸ-ருதிராஸ்தி-புரீஷராசிர்-நாயம் ஸ்வயம் பவிது-
மர்ஹதி நித்யசுத்தஃ || 154 ||

### அன்னமய கோசம்

154. (அயம்) இந்த (தேஹஃ) உடல் (அன்ன பவனஃ) உணவினுல் கட்டப்பட்ட வீடு, (அன்னமயஃ து கோசஃ) அன்னமய கோசம் எனப்படுவது, (அன்னேன) உணவால் (ஜீவதி) பிழைத்திருக்கிறது, (தத்-விஹீனஃ) அவ்வுணவில்லாவிட்டால் (விநச்யதி) அழிந்து போகிறது; (த்வக்-) மேல்தோல் (சர்ம-) அடித்தோல் (மாம்ஸ-) மாம்ஸம் (ருதிர-) இரத்தம் (அஸ்தி-) எலும்பு (புரீஷ-) மலம் ஆகியவற்றின் (ராசிஃ) தொகுதியாகிய (அயம்) இது (ஸ்வயம்) தானே (நித்ய சுத்தஃ) என்றும் பரிசுத்தமான ஆத்மாவாக (பவிதும்) ஆவதற்கு (ந அர்ஹதி) உரித்தாகாது.

**पूर्वं जनेरधिमृतेरपि नायमस्ति**
**जातक्षणः क्षणगुणो ऽनियतस्वभावः ।**
**नैको जडश्च घटवत्परिदृश्यमानः**
**स्वात्मा कथं भवति भावविकारवेत्ता ॥ १५५ ॥**

பூர்வம் ஜனேரதிம்ருதேரபி நாயமஸ்தி ஜாதக்ஷணஃ க்ஷணகுணோऽநியதஸ்வபாவஃ | நைகோ ஜடச்ச கடவத் பரித்ருச்யமானஃ ஸ்வாத்மா கதம் பவதி பாவவிகார-
வேத்தா || 155 ||

155. (ஜனேஃ) பிறப்பிற்கு (பூர்வம்) முன்பும் (அதிம்ருதேஃ அபி) இறப்பிற்குப்பின்பும் (அயம்) இது (ந அஸ்தி) இருப்புடையதன்று, (ஜாதக்ஷணஃ) கணப்பொழுது பிறந்திருப்பது (க்ஷணகுணஃ) அல்பநேரமே இருக்கும் குணமுடையது (அநியதஸ்வபாவஃ) ஸ்திரமான ஸ்வபாவமில்லாதது, (ந ஏகஃ) ஒன்ருயில்லாமல்

பல வகைப்பட்டது (ஜடஃ ச) அறிவில்லாதது (கடவத்) குடம் முதலியவற்றைப்போல் (பரித்ருச்யமானஃ) பார்க் கப்படுவது. (பாவ-விகார-வேத்தா) மாறுதல்களை அறி யும் (ஸ்வ-ஆத்மா) தன்னுடைய ஆத்மாவாக (கதம்) எங்ஙனம் (பவதி) ஆகும் ?

பூர்வம் ஜனேரபி ம்ருதேரத | ஜாதஃ க்ஷணம் | —பா. பே.

ஒ. 'ஆதாவந்தே ச யந்நாஸ்தி வர்த்தமானேऽபி தத்ததா'. எது ஆதியிலும் முடிவிலும் இல்லையோ அது இடையிலும் இல்லை தான்.
—கௌடபாதகாரிகை.

கடவத்—குடமே குடத்தைப் பார்க்காது. தேஹம் பார்க்கப் படுவதால் அதைப் பார்ப்பது ஆத்மா.

पाणि-पादादिमान् देहो नात्मा व्यंगेऽपि जीवनात् ।
तत्तच्छक्ते-रनाशाच्च न नियम्यो नियामकः ॥१५६॥

பாணி-பாதாதிமான் தேஹோ நாத்மா வ்யங்கேऽபி ஜீவனத் | தத்தச் சக்தே-ரநாசாச்ச ந நியம்யோ நியாமகஃ || 156 ||

156. (பாணி-பாத-ஆதிமான்) கை கால் முதலிய வற்றை உடைய (தேஹஃ) உடல் (வ்யங்கே அபி) அவ் வுறுப்புக்கள் இல்லாமலும் கூட (ஜீவனத்) உயிருடனி ருப்பதாலும் (தத்தத்) அந்தந்த (சக்தேஃ அநாசாத் ச) உறுப்புகளின் சக்திகள் அழியாமலிருப்பதாலும் (ந ஆத்மா) உடல் ஆத்மாவாகாது. (நியாமகஃ) அனைத் தையும் ஆள்பவன் (ந நியம்யஃ) ஆளப்படுபவனாக மாட் டான்.

ஒ. பிராணனுலோ அபானனுலோ எவனும் ஜீவித்திருக்கவில்லை. எதை இவ்விரண்டும் ஆதாரமாயுடையதோ அதனுல் (ஆத்மாவால்) ஜீவித்திருக்கிருன். —கட. உப. 5.5.

देहतद्धर्म-तत्कर्म-तदवस्थादि-साक्षिणः ।
सत एव स्वतः सिद्धं तद्वैलक्षण्य-मात्मनः ॥ १५७ ॥

தேஹ தத்தர்ம-தத்கர்ம-ததவஸ்தாதி-ஸாக்ஷிணः |
ஸத ஏவ ஸ்வதः ஸித்தம் தத் வைலக்ஷண்ய-மாத்மனः || 157 ||

157. (தேஹ-) உடல் (தத்-தர்ம-) அதன் இயற்கை (தத் கர்ம) அதன் செயல் (தத்-அவஸ்தா-ஆதி) அதன் நிலை ஆகியவற்றிக்கு (ஸாக்ஷிணः) ஸாக்ஷியாயிருக்கும் (ஸதः ஆத்மனः) உண்மைப் பொருளான ஆத்மாவினின்று (தத் வைலக்ஷண்யம்) உடலின் வேறுபாடு (ஸ்வதः ஸித்தம்) வேறு விளக்கம் தேவையின்றி தானாகவே விளங்குகிறது.

शल्यराशि-र्मांसलिप्तो मलपूर्णोऽति-कश्मलः ।
कथं भवेदयं वेत्ता स्वयमेतद्विलक्षणः ॥ १५८ ॥

சல்யராசிர்-மாம்ஸலிப்தோ மலபூர்ணோऽதிகச்மலः|
கதம் பவேதயம் வேத்தா ஸ்வயமேதத்-விலக்ஷணः ||
158 ||

158. (மாம்ஸ-லிப்தः) மாம்ஸத்தால் மறைத்துப் பூசப்பட்டதும் (மலபூர்ணः அதி கச்மலः) மலம் நிறைந்து மிகவும் அசுத்தமாகியதுமான (சல்யராசிः) எலும்புக்கூடாகிய (அயம்) இது (ஏதத்-விலக்ஷணः) இதனின்று முற்றும் வேறாகி (வேத்தா ஸ்வயம்) இதை அறிபவனாய் விளங்கும் ஆத்மாவாக (கதம்) எங்ஙனம் (பவேத்) ஆக இயலும்?

குல்யராசி: பா. பே-

त्वङ्मांस-मेदोऽस्थि-पुरीषराशा-
वहं-मतिं मूढजनः करोति ।
विलक्षणं वेत्ति विचारशीलो
निजस्वरूपं परमार्थभूतम् ॥ १५९॥

த்வங்மாம்ஸ-மேதோऽஸ்தி- புரீஷ ரா சா-வ ஹம் மதிம் மூடஜனః கரோதி | விலக்ஷணம் வேத்தி விசார-ஶீலோ நிஜஸ்வரூபம் பரமார்த்த-பூதம் || 159 ||

159. (த்வக்-) தோல் (மாம்ஸ-) மாம்ஸம் (மேதஸ்-) கொழுப்பு (அஸ்தி-) எலும்பு (புரீஷ-) மலம் ஆகியவற்றின் (ராசௌ) கூட்டத்தில் (மூடஜனः) மதிகெட்டவன் (அஹம் மதிம்) நான் என்ற எண்ணத்தை (கரோதி) செய்கிருன். (விசாரசீலः) ஆராயும் குணமுடையவன் (விலக்ஷணம்) வேருனதும் (பரமார்த்த-பூதம்) உயர்ந்த தத்துவ வடிவானதுமான (நிஜஸ்வரூபம்) தனது ஸ்வரூபத்தை (வேத்தி) அறிகிருன்.

**देहोऽहमित्येव जडस्य बुद्धिर्देहे च जीवे विदुषस्त्वहंधीः ।**
**विवेकविज्ञानवतो महात्मनो ब्रह्माहमित्येव मतिः सदात्मनि**
**॥ १६० ॥**

தேஹோऽஹமித்யேவ ஜடஸ்ய புத்திர்-தேஹே ச ஜீவே விதுஷஸ்த்வஹந்தீः | விவேக-விஜ்ஞானவதோ மஹாத்மனோ ப்ரஹ்மாஹமித்யேவ மதிः ஸதாத்மனி || 160 ||

160. (ஜடஸ்ய) மூடனுக்கு (தேஹः அஹம் இதி ஏவ) உடலே நான் என்ற (புத்திः) புத்தி; (விதுஷः து) சாஸ்திரங்களைப் படித்தவனுக்கு (தேஹே ச ஜீவே) உடலிலுறையும் ஜீவனில் (அஹம் தீः) நான் என்ற புத்தி; (விவேக-விஞ்ஞானவதः) விவேகத்தால் தெளிந்த அறிவுடையவஞகிய (மஹாத்மனः) மஹாத்மாவிற்கு (ஸத்-ஆத்மனி) ஸத்தியமான ஆத்மாவில் (அஹம் ப்ரஹ்ம இதி ஏவ) நான் பிரம்மம் என்றே (மதிः) புத்தி.

தேஹே ச ஜீவே—உலக வியவகாரத்தில் தேகத்திலும் சாஸ்திர வியவகாரத்தில் ஜீவனிலும் என்றும் கொள்ளலாம்.

**अत्रात्मबुद्धिं त्यज मूढबुद्धे त्वङ्-मांसमेदोऽस्थि-पुरीषराशौ ।
सर्वात्मनि ब्रह्मणि निर्विकल्पे कुरुष्व शान्तिं परमां भजस्व
॥ १६१ ॥**

அத்ராத்மபுத்திம் த்யஜ மூடபுத்தே த்வங்மாம்ஸ-மேதோऽஸ்தி-புரீஷராசௌ | ஸர்வாத்மனி ப்ரஹ்மணி நிர்விகல்பே குருஷ்வ சாந்திம் பரமாம் பஜஸ்வ || 161 ||

161. (மூடபுத்தே) மதி கெட்டவனே ! (த்வக்-) தோல் (மாம்ஸ-) மாம்ஸம் (மேதஸ்-) கொழுப்பு (அஸ்தி-) எலும்பு (புரீஷ-) மலம் முதலியவற்றின் (ராசௌ) கூட்டமாகிய (அத்ர) இவ்வுடலில் (ஆத்ம-புத்திம்) நான் என்ற எண்ணத்தை (த்யஜ) விட்டுவிடு. (ஸர்வாத்மனி) அனைத்துயிர்க்கும் ஆத்மாவாயும் (நிர்வி கல்பே) பேதமற்றதாயும் இருக்கும் (ப்ரஹ்மணி) பிரம மத்தினிடத்தில் (குருஷ்வ) ஆத்ம புத்தியைச் செய்வாயாக—அதனுல்—(பரமாம் சாந்திம்) உத்தமமான சாந்தியை (பஜஸ்வ) அடைந்து அனுபவிப்பாயாக.

**देहेन्द्रियादावसति भ्रमोदितां विद्वानहन्तां न जहाति यावत् ।
तावन्न तस्यास्ति विमुक्तिवार्ता-प्यस्त्वेष वेदान्त-नयान्तदर्शी
॥ १६२ ॥**

தேஹேந்த்ரியாதா-வஸதி ப்ரமோதிதாம் வித்வா-னஹந்தாம் ந ஜஹாதி யாவத் | தாவந்ந தஸ்யாஸ்தி விமுக்தி-வார்த்தாப்-யஸ்த்-வேஷ வேதாந்த-நயாந்த தர்சி || 162 ||

162. (அஸதி) பொய்யாகிய (தேஹ-) உடல் (இந்த்ரிய-ஆதௌ) இந்திரியங்கள் முதலியவற்றில் (ப்ரம-உதிதாம்) மதி மயக்கத்தாலேற்பட்ட (அஹந்தாம்) நான் என்ற எண்ணத்தை (யாவத்) எதுவரை (வித்

வான்) அறிவாளி எனப்பட்டவன் (ந ஜஹாதி) விட வில்லேயோ (தாவத்) அதுவரை (தஸ்ய) அவனுக்கு (விமுக்தி வார்த்தா அபி) முக்தி என்ற பேச்சுக்கூட (ந அஸ்தி) இல்லே. (ஏஷஃ) அவன் (வேதாந்த-நயாந்த-தர்சீ) வேதாந்தம் நீதிசாஸ்திரம் ஆகியவற்றை எவ்வளவு நன்ருகக் கற்றுணர்ந்தவனுகயிருந்தாலும் (அஸ்து) இருக்கட்டும்.

ஒ. வேதங்களேக் கற்றதாலோ, நுண்ணறிவிஞலோ, விரிந்த கேள்வியாலோ இந்த ஆத்மா அடையப்படுவதன்று; ஆத்மா ஒன்றையே எவன் பிரார்த்திக்கிருனே அவனுல் அடையப்படும். அவனுக்கு அப்போது இந்த ஆத்மா தன்னுடைய உண்மை ஸ்வரூபத்தைப் பிரகாசப்படுத்துகின்றது. துர்நடத்தையிலிருந்து விலகாதவனும் இந்திரியங்களே அடக்காதவனும் மனதை ஒருமுகப்படுத்தி சாந்தி எய்தாதவனும் பிரக்ஞானத்தால் மட்டும் இந்த ஆத்மாவை அடையமாட்டான். —கட. உப. 2.23-24.

छायाशरीरे प्रतिबिम्बगात्रे यत्स्वप्नदेहे हृदि कल्पिताङ्गे ।
यथात्मबुद्धिस्तव नास्ति काचिज्जीवच्छरीरे च तथैव माऽस्तु
॥ १६३ ॥

ச்சாயா சரீரே ப்ரதிபிம்பகாத்ரே யத்ஸ்வப்ன தேஹே ஹ்ருதி கல்பிதாங்கே | யதாத்ம-புத்திஸ்-தவ நாஸ்தி காசிஜ்-ஜீவச்சரீரே ச ததைவ மாऽஸ்து || 163 ||

163. (ச்சாயா சரீரே) உடலின் நிழலிலும் (ப்ரதிபிம்ப-காத்ரே)—கண்ணுடி முதலியவற்றில் தோன்றும்—பிரதிபிம்ப உடலிலும் (யத் ஸ்வப்னதேஹே) கனவில் காணும் உடலெதுவோ அதிலும் (ஹ்ருதி) உள்ளத்தில் (கல்பித- அங்கே) கற்பனேயில் காணும் உடலிலும் (யதா) எங்ஙனம் (தவ) உனக்கு (ஆத்ம புத்திஃ) நான் என்ற எண்ணம் (காசித்) ஒருவகையிலும் (ந அஸ்தி) இல்லேயோ (ததா ஏவ) அவ்வாறே

(ஜீவச் சரீரே ச) உயிருள்ள உடலிலும் (மா அஸ்து) இல்லாமலிருக்கட்டும்.

**देहात्मधीरेव नृणामसद्धियां जन्मादिदुःखप्रभवस्य बीजम् ।**
**यतस्ततस्त्वं जहि तां प्रयत्नात् त्यक्ते तु चित्ते न पुनर्भवाशा ॥ १६४ ॥**

தேஹாத்மதீரேவ ந்ருணா-மஸத்தியாம் ஜன்மாதி-துஃக்க-ப்ரபவஸ்ய பீஜம் | யதஸ்ததஸ்த்வம் ஜஹி தாம் ப்ரயத்நாத் த்யக்தே து சித்தே ந புனர்ப்பவாசா || 164 ||

164. (அஸத்-தியாம்) பொய்யெண்ணமுடைய (ந்ருணாம்) மனிதர்க்கு (தேஹ-ஆத்ம-தீஃ ஏவ) உடலே ஆத்மா என்ற புத்தியே (ஜன்ம-ஆதி-) பிறப்புமுதலிய (துக்க-ப்ரபவஸ்ய) துன்பம் தோன்றுவதற்கு (பீஜம்) விதையாகின்றது. (யதஃ) ஆகையால் (ததஃ) இனி (த்வம்) நீ (தாம்) அதை (ப்ரயத்நாத்) முயற்சி செய்து (ஜஹி) விட்டொழி. (சித்தே) மனதில் (த்யக்தே து) அவ்வெண்ணம் ஒழிந்தபின் (ந புனர்ப்பவ-ஆசா) மறுபடி பிறப்பு என்ற ஐயம் இல்லை.

ஒ. 'தேஹாத்மஜ்ஞானவத் ஜ்ஞானம் தேஹாத்மஜ்ஞான-பாதகம் | ஆத்மன்யேவ பவேத் யஸ்ய ஸ ஜீவன்னபி முச்யதே || ' உடலை நான் என்று எண்ணுவதுபோல் ஞானம் தன்னுள்ளே எவனுக்கு உதிக்கிறதோ அவன் ஜீவன் முக்தன்.

## प्राणमयकोशः

**कर्मेन्द्रियैः पंचभिरंचितोऽयं प्राणो भवेत्प्राणमयस्तु कोशः ।**
**येनात्मवानन्नमयोऽन्नुपूर्णः प्रवर्त्ततेऽसौ सकलक्रियासु ॥१६५॥**

ப்ராணமய கோசஃ

கர்மேந்த்ரியைஃ பஞ்சபிரஞ்சிதோऽயம் ப்ராணோ பவேத்ப்ராணமயஸ்து கோசஃ | யேனாத்மவானன்ன-

மயோऽனுபூர்ணঃ ப்ரவர்த்ததேऽஸௌ ஸகலக்ரி-
யாஸு || 165 ||

**ப்ராணமய கோசம்**

165. (பஞ்சபிঃ கர்மேந்த்ரியைঃ) ஐந்து கர்மேந்திரியங்களுடன் (அஞ்சிதঃ அயம் ப்ராணঃ) பிணைக்கப்பட்ட இந்தப்பிராணன் (ப்ராணமயঃ து கோசঃ) பிராணமய கோசமாக (பவேத்) ஆகிறது. (யேன) அதனுல் (அனுபூர்ணঃ) பரிபூர்ணமாய் நிரப்பப்பெற்று (ஆத்மவான்) அதையே ஆத்மாவாய்க்கொண்டு (அன்னமயঃ) அன்னமயமாகிய (அஸௌ) இவ்வுடல் (ஸகலக்ரியாஸு) எல்லாச்செயல்களிலும் (ப்ரவர்த்ததே) புகுகின்றது.

**ஐந்துகர்மேந்திரியங்கள்**—வாக்கு பாணி பாதம் பாயு உபஸ்தம்.

**அனுபூர்ண:**—ஒ. 'தேனைஷ பூர்ண: | ஸ வா ஏஷ புருஷவித ஏவ |' அதனுல் இது (அன்னமயசரீரம்) பூர்ணமாயிருக்கிறது. அதுவும் புருஷனைப் போலவே உருவுடையது. —தை. உப. 2.2.

எதில் [பிராணஸம்பந்தம் உண்டோ அது செயல் புரியும். உடலில் எந்த பாகத்தில் பிராண ஸம்பந்தமில்லையோ அது செயல் புரியாது. கர்மேந்திரியங்கள் அன்னமய கோசத்திலிருந்தாலும் பிராணமய கோசத்திலடக்கம்.

**नैवात्मापि प्राणमयो वायुविकारो गन्ताऽऽगन्ता वायुवदन्त-**
**र्बहिरेषः ।**
**यस्मात्किंचित्क्वापि न वेत्तीष्टमनिष्टं स्वं वान्यं वा किंचन**
**नित्यं परतन्त्रः ॥ १६६ ॥**

நைவாத்மாபி ப்ராணமயோ வாயுவிகாரோ கந்தா
ऽऽகந்தா வாயுவதந்தர்-பஹிரேஷঃ | யஸ்மாத் கிஞ்சித்

க்வாபி ந வேத்தீஷ்ட-மநிஷ்டம் ஸ்வம் வான்யம் வா கிஞ்சன நித்யம் பரதந்த்ரஃ || 166 ||

166. (ப்ராணமயஃ அபி) பிராணமய கோசமும் கூட (ந ஏவ ஆத்மா) ஆத்மா வன்று; (ஏஷஃ) இது (வாயு விகாரஃ) வாயுவின் ஒரு உருவம், (கந்தா ஆகந்தா) போவதும் வருவதுமாயிருப்பது, (வாயுவத்) வாயுவைப் போல (அந்தர்-பஹிஃ) உள்ளும் புறமும் இருப்பது. (யஸ்மாத்) எக்காரணத்தால் (ஸ்வம் வா) தன்னுடையதையோ (அன்யம் வா) வேறானதையோ (கிஞ்சன) ஒரு சிறிதும் (இஷ்டம்) பிரியமானதையோ (அநிஷ்டம்) பிரியமில்லாததையோ (கிஞ்சித் க்வாபி) கொஞ்சமும் ஒருபொழுதும் (ந வேத்தி) அறிவதில்லையோ—அக்காரணத்தால் இது (நித்யம்) எப்பொழுதும் (பரதந்த்ரஃ) வேறொன்றினால் ஆட்டி வைக்கப்படுவதாகின்றது.

பரதந்த்ர:—மனதால் பிராணனை அடக்க இயலும் என்பது பிராணாயாமத்தால் விளங்குகிறது.

## मनोमयकोशः

ज्ञानेन्द्रियाणि च मनश्च मनोमयः स्यात्
कोशो ममाहमिति वस्तुविकल्पहेतुः ।
संज्ञादि-भेदकलनाकलितो बलीयां-
स्तत्पूर्वकोश-मभिपूर्य विजृम्भते यः ॥ १६७ ॥

மனோமய கோசஃ

ஜ்ஞானேந்த்ரியாணி ச மனச்ச மனோமயஃ ஸ்யாத் கோசோ மமாஹமிதி வஸ்து விகல்பஹேதுஃ | ஸம்ஜ்ஞாதி-பேத-கலனாகலிதோ பலீயாம்-ஸ்தத்பூர்வகோச-மபிபூர்ய விஜ்ரும்பதே யஃ || 167 ||

## மனோமய கோசம்

167. (ஜ்ஞான-இந்த்ரியாணி ச) ஞான இந்திரியங்களும் (மனஃ ச) மனதும் (மனோ மயஃ கோசஃ) மனோமய கோசமாக (ஸ்யாத்) ஆகின்றன. (மம அஹம் இதி) என்னுடையது, நான் என்ற (வஸ்து-விகல்ப-ஹேதுஃ) பொருள் மாறுபாட்டிற்குக் காரணமாக உளது—அம்மனோமய கோசம். (பலீயான்) வலிமை மிக்கது, (ஸம்ஜ்ஞாதி-பேத-கலனு கலிதஃ) நாமம் முதலிய வேற்றுமைகளைத் தோற்றுவிப்பது; (தத்) அது (யஃ பூர்வகோசம்) எது முந்திய கோசமோ அதை (அபிபூர்ய) பூர்ணமாக நிரப்பிக்கொண்டு (விஜ்ரும்பதே) விரிந்து நிற்கிறது.

ஞான இந்திரியங்கள்—'ச்ரோத்ரம் சக்ஷுஃ ஸ்பர்சனஞ்ச ரஸனம் க்ராணமேவ ச' காது, கண், மெய், நாக்கு, மூக்கு.

எல்லா இந்திரிய வியாபாரங்களும் மனதின் வசப்பட்டவை. இந்திரிய மில்லாமலும் கூட கனவில் இந்திரிய வியாபாரங்கள் மனதால் கற்பிக்கப்படுகின்றன.

ஓ. 'தஸ்மாத்வா ஏதஸ்மாத் ப்ராணமயாத் | அன்யோந்தர ஆத்மா மனோமயஃ' இந்தப்பிராணமயத்தினும் வேறானது இதனுள்ளிருக்கும் மனோமய ஆத்மா. —தை. உப. 2.3.

மனோமயத்தின் காரியம் நான் எனது என்று அபிமானித்தலும் அதன் விளைவான ஸங்கல்ப விகல்பங்களும்.

**पंचेन्द्रियैः पंचभिरेव होतृभिः प्रचीयमानो विषयाज्यधारया ।**
**जाज्वल्यमानो बहुवासनेन्धनैर्मनोमयाग्नि-र्दहति प्रपंचम् ॥ १६८ ॥**

பஞ்சேந்த்ரியைஃ பஞ்சபிரேவ ஹோத்ருபிஃ ப்ரசீயமானோ விஷயாஜ்யதாரயா | ஜாஜ்வல்யமானோ பஹுவாஸனேந்தனைர் - மனோமயாக்னிர் - தஹதி ப்ரபஞ்சம் || 168 ||

168. (பஞ்ச இந்த்ரியைঃ) ஐந்து ஞானேந்திரியங்களாகிற (பஞ்சபிঃ ஹோத்ருபிঃ ஏவ) ஐந்து ஹோதாக்களால் (ப்ரசீயமானঃ) தொடர்ச்சியாக ஹோமம் செய்யப்பட்ட (விஷய-ஆஜ்ய-தாரயா) விஷயமெனும் நெய்யின் தாரையால் (ஜாஜ்வல்யமானঃ) கொழுந்து விட்டெரியும் (பஹுவாஸனா-இந்தனைঃ) பலவகைப் பட்ட வாஸனை எனும் விறகுடன் கூடி (மனோமய-அக்னிঃ) மனோமயம் எனும் அக்கினி (ப்ரபஞ்சம்) பிரபஞ்சத்தை (தஹதி) எரிக்கிறது.

வஹதி ப்ரபஞ்சம்—பிரபஞ்சத்தைத் தாங்குகிறது. —பா.பே.

விஷய-ஆஜ்யதாரயா—விஷயங்கள் சப்தம், ஸ்பர்சம், ரூபம், ரஸம், கந்தம் எனும் ஐந்து.

**न ह्यस्त्यविद्या मनसोऽतिरिक्ता मनो ह्यविद्या भवबन्धहेतुः ।**
**तस्मिन्विनष्टे सकलं विनष्टं विजृम्भितेऽस्मिन्सकलं विजृम्भते ॥ १६९ ॥**

ந ஹ்யஸ்த்யவித்யா மனஸோऽதிரிக்தா மனோ ஹ்யவித்யா பவபந்தஹேதுঃ | தஸ்மின்விநஷ்டே ஸகலம் விநஷ்டம் விஜ்ரும்பிதேऽஸ்மின் ஸகலம் விஜ்ரும்பதே || 169 ||

169. (மனஸঃ) மனதைக்காட்டிலும் (அதிரிக்தா) வேறான (அவித்யா) அவித்தை என்பது (நஹி அஸ்தி) இல்லவே இல்லை; (மனঃ ஹி) மனதே (பவபந்த ஹேதுঃ) பிறவித்தளைக்குக்காரணமான (அவித்யா) அவித்தை; (தஸ்மின் விநஷ்டே) அது அழிவடைந்தால் (ஸகலம் விநஷ்டம்) அனைத்தும் அழிவடையும்; (அஸ்மின் விஜ்ரும்பிதே) அது கிளம்பினால் (ஸகலம் விஜ்ரும்பதே) அனைத்தும் கிளம்பும்.

ஒ. சினமிறக்கக் கற்றாலும் சித்தியெல்லாம் பெற்றாலும் மன மிறக்கக் கல்லார்க்கு வாயேன் பராபரமே. —தாயுமானவர்.

உன்னுமனங் கற்பூர வுண்டை போலே கரைய மின்னுமானந்த விளக்கே பராபரமே.

ஒ. மன ஏவ மனுஷ்யாணும் காரணம் பந்த-மோக்ஷயோஃ।

—அமிருதபிந்து உப. 2.

स्वप्नेऽर्थशून्ये सृजति स्वशक्त्या भोक्त्रादिविश्वं मन एव सर्वम् ।
तथैव जाग्रत्यपि नो विशेषस्तत्सर्वमेतन्मनसो विजृम्भणम्
॥ १७० ॥

ஸ்வப்னேऽர்த்த - சூன்யே ஸ்ருஜதி ஸ்வசக்த்யா போக்த்ராதி விச்வம் மன ஏவ ஸர்வம் | ததைவ ஜாக்ரத்யபி நோ விசேஷஸ்-தத் ஸர்வ-மேதன் மனஸோ விஜ்ரும்பணம் || 170 ||

170. (அர்த்தசூன்யே) ஒரு பொருளுமில்லாத (ஸ்வப்னே) கனவில் (ஸ்வசக்த்யா) தன்னுடைய சக்தியால் (போக்த்ரு-ஆதி-விச்வம் ஸர்வம்) அனுபவிப்பவன் முதலிய உலகனைத்தையும் (மனஃ ஏவ) மனதே (ஸ்ருஜதி) சிருஷ்டிக்கிறது. (ததா ஏவ) அவ்வாறே (ஜாக்ரதி அபி) விழிப்பு நிலையிலும்; (நோ விசேஷஃ) இதில் வித்தியாசமில்லை; (தத் ஸர்வம் ஏதத்) அங்கிலையில் உள்ள இது எல்லாம் (மனஸஃ) மனதின் (விஜ்ரும்பணம்) விளையாட்டே.

ஒ. 'அத்ரைஷ தேவஃ ஸ்வப்னே மஹிமான-மனுபவதி...... த்ருஷ்டஞ்சாத்ருஷ்டஞ்ச, ச்ருதஞ்சாச்ருதஞ்ச, அனுபூதஞ்சானனுபூதஞ்ச ஸச்சாஸச்ச, ஸர்வம் பச்யதி ஸர்வ: பச்யதி' இந்த (மனதாகிற) தேவன் ஸ்வப்னத்தில் தன் பெருமையை அனுபவிக்கிருன்...... கண்டதும் காணுததும், கேட்டதும் கேளாததும், அனுபவித்ததும் அனுபவியாததும், உள்ளதும் இல்லதும் ஆன அனைத்தும் (தானே) ஆகி அனைத்தையும் காண்கிருன். பிரச். உப. 4.5.

ஒ. ஆடல் கண்டவனும் நீ ஆடுகின்றவனும் நீ. 'போக்தா' வையும் மனதே சிருஷ்டிக்கிறது. போக்கியவஸ்து இல்லையேல் போக்தா என்று ஒருவன் இல்லை.

**सुषुप्ति-काले मनसि प्रलीने नैवास्ति किंचित्सकलप्रसिद्धेः ।**
**अतो मनः-कल्पित एव पुंसः संसार एतस्य न वस्तुतोऽस्ति**
**॥ १७१ ॥**

ஸுஷுப்திகாலே மனஸி ப்ரலீனே நைவாஸ்தி கிஞ்சித் ஸகலப்ரஸித்தேঃ | அதோ மனঃ கல்பித ஏவ பும்ஸঃ ஸம்ஸார ஏதஸ்ய ந வஸ்துதோऽஸ்தி || 171 ||

171. (ஸுஷுப்திகாலே) நல்ல தூக்கத்தின் போது(மனஸி ப்ரலீனே)மனது லயமடைந்து இருக்கையில் (கிஞ்சித்) ஒரு சிறிதும் (ந அஸ்தி ஏவ) இல்லவே இல்லை. (ஸகல ப்ரஸித்தேঃ) இது எல்லோருக்கும் நன்கு தெரிந்திருப்பதால். (அதঃ) ஆகையால் (ஏதஸ்ய) இந்த (பும்ஸঃ) புருஷனுக்கு (ஸம்ஸாரঃ) பிறவிச் சுழலானது (மனঃ கல்பிதঃ ஏவ) மனதின் கற்பனையேயாம்; (வஸ்துதঃ) உண்மையில் (ந அஸ்தி) இல்லை.

ஒ. சுலோகம் 121.

**वायुनाऽऽनीयते मेघः पुनस्तेनैव नीयते ।**
**मनसा कल्प्यते बन्धो मोक्षस्तेनैव कल्प्यते ॥ १७२ ॥**

வாயுனாऽऽனீயதே மேகঃ புனஸ்தேனைவ நீயதே |
மனஸா கல்ப்யதே பந்தோ மோக்ஷஸ்தேனைவ கல்ப்யதே || 172 ||

172. (மேகঃ) மேகம் (வாயுனா) காற்றால் (ஆனீயதே) கொண்டுவரப்படுகிறது; (புனঃ) மீண்டும் (தேன ஏவ) அதனாலேயே (நீயதே) கொண்டுபோகப்படுகிறது. (பந்தঃ) பிறவித்தளையானது (மனஸா) மனதினால் (கல்ப்யதே) கற்பிக்கப்படுகிறது; (மோக்ஷঃ) பிறவித்தளை நீக்கமும் (தேன ஏவ) அதனாலேயே (கல்ப்யதே) கற்பிக்கப்படுகிறது.

வாயுனா நீயதே —பா. பே.

देहादि-सर्वविषये परिकल्प्य रागं
बध्नाति तेन पुरुषं पशुवद्गुणेन ।
वैरस्य-मत्र विषवत्सुविधाय पश्चा-
देनं विमोचयति तन्मन एव बन्धात् ॥१७३॥

தேஹாதி-ஸர்வவிஷயே பரிகல்ப்ய ராகம் பத்னாதி தேன புருஷம் பசுவத்குணேன | வைரஸ்ய-மத்ர விஷவத்ஸுவிதாய பச்சா-தேனம் விமோசயதி தன்மன ஏவ பந்தாத் || 173 ||

173. (தேஹாதி-) உடல் முதலிய (ஸர்வ விஷயே) எல்லாவிஷயங்களிலும் (ராகம்) பற்றை (பரிகல்ப்ய) உண்டாக்கி (பசுவத் குணேன) ஒரு பசுவைக் கயிற்றால் கட்டுவது போல் (தேன) அதனால் (புருஷம்) புருஷனை (பத்னாதி) கட்டுகிறது. (பச்சாத்) பிறகு (அத்ர) இவற்றில் (விஷவத்) விஷத்தில் போல் (வைரஸ்யம்) வெறுப்பை (ஸுவிதாய) நன்றாக உண்டாக்கி (தத் மனః ஏவ) அந்த மனதே (பந்தாத்) தளையினின்று (ஏனம்) இவனை (விமோசயதி) விடுவிக்கிறது.

குணம் எனும் சொல் கயிறு என்றும் இயல்பு என்றும் பொருள்படும்.

तस्मान्मनः कारणमस्य जन्तोर्बन्धस्य मोक्षस्य च वा विधाने ।
बन्धस्य हेतुर्मलिनं रजोगुणैर्मोक्षस्य शुद्धं विरजस्तमस्कम्
॥ १७४ ॥

தஸ்மான்மனః காரணமஸ்ய ஜந்தோர்-பந்தஸ்ய மோக்ஷஸ்ய ச வா விதானே | பந்தஸ்ய ஹேதுர் மலினம் ரஜோகுணைர் மோக்ஷஸ்ய சுத்தம் விரஜஸ்-தமஸ்கம் || 174 ||

174. (தஸ்மாத்) ஆகையால் (மனः) மனதே (அஸ்ய ஜந்தோः) இந்த ஜீவனுடைய (பந்தஸ்ய) பந்தத்தையோ (மோக்ஷஸ்ய ச வா) அல்லது மோக்ஷத்தையே (விதானே) விளைப்பதற்கு (காரணம்) காரணமாயுளது. (பந்தஸ்ய) பந்தத்திற்கு (ஹேதுः) காரணம் (ரஜோ குணைः) ரஜோ குணங்களால் (மலினம்) அழுக்கடைவது; (மோக்ஷஸ்ய) மோக்ஷத்திற்கு (விரஜஸ்-தமஸ்கம்) ரஜோ குண தமோகுணங்களில்லாமல் (சுத்தம்) சுத்தமாயிருப்பது.

ஒ. 'பந்தாய விஷயாஸக்தம் முக்த்யை நிர்விஷயம் ஸ்ம்ருதம்'

—அம்ருதபிந்து உப. 2.

**विवेकवैराग्य-गुणातिरेकाच्छुद्धत्व-मासाद्य मनो विमुक्त्यै ।**
**भवत्यतो बुद्धिमतो मुमुक्षोस्ताभ्यां दृढाभ्यां भवितव्यमग्रे**
**॥ १७५ ॥**

விவேக வைராக்ய-குணாதிரேகாத் சுத்தத்வ-மாஸாத்ய மனோ விமுக்த்யை | பவத்யதோ புத்திமதோ முமுக்ஷோஸ் தாப்யாம் த்ருடாப்யாம் பவிதவ்ய-மக்ரே || 175 ||

175. (விவேக-வைராக்ய குண-அதிரேகாத்) விவேகம், வைராக்கியமாகிய குணங்களின் வளர்ச்சியால் (சுத்தத்வம்) பரிசுத்தத்தன்மையை (ஆஸாத்ய) அடைந்து (மனः) மனது (விமுக்த்யை) முக்திக்குரியதாக (பவதி) ஆகிறது (அதः) ஆகையால் (புத்திசாலியான முமுக்ஷுவிற்கு (தாப்யாம்) அவ்விரண்டும் (த்ருடாப்யாம்) திடமானவையாக (அக்ரே) முதலில் (பவிதவ்யம்) ஆகவேண்டும்.

ஒ. யதோ நிர்விஷயஸ்யாஸ்ய மனஸோ முக்தி-ரிஷ்யதே |
தஸ்மாந் நிர்விஷயம் நித்யம் மனः கார்யம் முமுக்ஷுணா ||

—அமிருதபிந்து உப. 3.

அக்ரே-முதலில்—விவேகத்தையும் வைராக்கியத்தையும் முதலில் ஸம்பாதித்துக் கொண்டு உலகில் பிரவேசிக்கவேண்டும். கல்லும் முள்ளும் நிறைந்த காட்டில் பிரவேசிக்குமுன் பாதரக்ஷைகளை அணிந்து கொள்ள வேண்டும். —ரா.கி.

ஒ. அப்யாஸ-வைராக்யாப்யாம் தந்நிரோதஃ | தத்ர ஸ்திதௌ யத்னோ அப்யாஸஃ | த்ருஷ்டானுச்ரவிக-விஷய வித்ருஷ்ணஸ்ய வசீகார-ஸம்ஜ்ஞா வைராக்யம் | —யோ. ஸூ.—1. 12-13.

**मनो नाम महाव्याघ्रो विषयारण्य-भूमिषु ।**
**चरत्यत्र न गच्छन्तु साधवो ये मुमुक्षवः ॥ १७६ ॥**

மனோ நாம மஹாவ்யாக்ரோ விஷயாரண்ய-பூமிஷு | சரத்யத்ர ந கச்சந்து ஸாதவோ யே முமுக்ஷவஃ | 176 ||

176. (மனஃ நாம) மனது எனப் பெயர் பெற்ற (மஹாவ்யாக்ரஃ) கொடிய புலி (விஷய- ஆரண்ய-பூமிஷு) விஷயம் என்ற வன பூமியில் (சரதி) உலவுகிறது. (அத்ர) இங்கு (முமுக்ஷவஃ) முக்தியில் நாட்டமுள்ளவர்களான (ஸாதவஃ) ஸாதுக்கள் (யே) எவர்களோ அவர்கள் (ந கச்சந்து) செல்லக்கூடாது.

**मनः प्रसूते विषयानशेषान् स्थूलात्मना सूक्ष्मतया च भोक्तुः ।**
**शरीरवर्णाश्रम-जातिभेदान् गुणक्रिया-हेतुफलानि नित्यम् ॥ १७७ ॥**

மனஃ ப்ரஸூதே விஷயானசேஷான் ஸ்தூலாத்மனா ஸூக்ஷ்மதயா ச போக்துஃ | சரீரவர்ணாச்ரம-ஜாதி-பேதான் குணக்ரியா-ஹேது பலானி நித்யம் || 177 ||

177. (சரீர-) உடல் (வர்ண-) பிராம்மணன் க்ஷத்ரியன் முதலிய பாகுபாடு (ஆச்ரம-) பிரம்மசாரி, கிருஹஸ்தன் முதலிய ஆசிரம பேதம் (ஜாதிபேதான்)

ஜாதி பேதங்கள் (குண-) குணம் (க்ரியா) தொழில் (ஹேது-) காரணம் (பலானி) பயன் ஆகிய (விஷயான்) விஷயங்களை (அசேஷான்) ஒன்று விடாமல் அனைத்தையும் (ஸ்தூல-ஆத்மனா) ஸ்தூல வடிவாயினும் (ஸூக்ஷ்மதயா ச) ஸூக்ஷ்ம வடிவாயினும் (போக்துஃ) அனுபவிப்பவனாகிய ஜீவனுக்கு (நித்யம்) எப்பொழுதும் (மனஃ) மனதானது (ப்ரஸூதே) உற்பத்தி செய்கிறது.

**असंगचिद्रूप-ममुं विमोह्य देहेन्द्रिय-प्राण-गुणैर्निबद्ध्य ।**
**अहं-ममेति भ्रमयत्यजस्रं मनः स्वकृत्येषु फलोपभुक्तिषु ॥ १७८ ॥**

அஸங்கசித்ரூப-மமும் விமோஹ்ய தேஹேந்த்ரிய-ப்ராண-குணைர் நிபத்ய | அஹம் மமேதி ப்ரமயத்யஜஸ்ரம் மனஃ ஸ்வக்ருத்யேஷு பலோபபுக்திஷு || 178 ||

178. (அஸங்க-) பற்றற்றவனும் (சித்ரூபம்-) அறிவு வடிவினனும் ஆகிய (அமும்) இவ்வாத்மாவை (விமோஹ்ய) மயக்கத்திற்குள்ளாக்கி (தேஹ-இந்த்ரிய-ப்ராண-குணைஃ) உடல், இந்திரியங்கள், பிராணன் முதலிய கயிறுகளால் (நிபத்ய) கட்டி (மனஃ) மனமானது (ஸ்வக்ருத்யேஷு) தனது கருமங்களிலும் (பல-உபபுக்திஷு) அவற்றின் பயனை அனுபவிப்பதிலும் (அஹம் மம இதி) நான் என்னுடையது என்று (அஜஸ்ரம்) இடைவிடாது (ப்ரமயதி) அலைக்கழிக்கிறது.

**अध्यासदोषात्पुरुषस्य संसृति-रध्यास-बन्धस्त्वमुनैव कल्पितः ।**
**रजस्तमो-दोषवतोऽविवेकिनो जन्मादि-दुःखस्य निदानमेतत् ॥ १७९ ॥**

அத்யாஸதோஷாத் - புருஷஸ்ய ஸம்ஸ்ருதி - ரத்யாஸ-பந்தஸ்த்வமுனைவ கல்பிதஃ | ரஜஸ்தமோ-தோஷவதோऽவிவேகினோ ஜன்மாதி - துஃக்கஸ்ய நிதானமேதத் || 179 ||

179. (அத்யாஸ-தோஷாத்) ஆத்மாவல்லாததை ஆத்மா என்று கருதும் தவறுதலினால் (புருஷஸ்ய) மனிதனுக்கு (ஸம்ஸ்ருதிः) பிறவிச்சுழல் ஏற்படுகிறது. (அத்யாஸ-பந்தஃ து) அத்யாஸவடிவான தளையோ எனின் (அமுனா ஏவ) இந்த மனதாலேயே (கல்பிதஃ) கல்பிக்கப்படுகிறது. (ரஜஸ்-தமோ-தோஷவதஃ) ரஜோ குணம் தமோகுணம் ஆகிய இரண்டாலும் கெடுக்கப் பட்ட (அவிவேகினஃ) அவிவேகியின் (ஜன்ம-ஆதி-துஃக்கஸ்ய) பிறவி முதலிய துன்பத்திற்கு (ஏதத்) இதுவே (நிதானம்) முதற்காரணம்.

**अतः प्राहु-र्मनोऽविद्यां पण्डितास्तत्त्वदर्शिनः ।**
**येनैव भ्राम्यते विश्वं वायुनेवाभ्रमण्डलम् ॥ १८० ॥**

அதஃ ப்ராஹுர்-மனோऽவித்யாம் பண்டிதாஸ்-தத்வதர்சினஃ | யேனைவ ப்ராம்யதே விச்வம் வாயுனேவாப்ரமண்டலம் || 180 ||

180. (அதஃ) ஆகையால் (பண்டிதாஃ தத்வதர்சினஃ) உண்மையை உணர்ந்த ஞானிகள் (மனஃ) மனதை (அவித்யாம்) அவித்தை என்று (ப்ராஹுஃ) கூறியுள்ளார்கள். (யேன ஏவ) ஆதனாலேயே (வாயுனா இவ அப்ரமண்டலம்) மேகக்கூட்டம் காற்றினால் போல (விச்வம்) உலகம் (ப்ராம்யதே) அலைக்கழிக்கப் படுகிறது.

**तन्मनः-शोधनं कार्यं प्रयत्नेन मुमुक्षुणा ।**
**विशुद्धे सति चैतस्मिन्मुक्तिः करफलायते ॥ १८१ ॥**

தன்மனः சோதனம் கார்யம் ப்ரயத்னேன முமுக்ஷுணா | விசுத்தே ஸதி சைதஸ்மின் முக்திः கரபலாயதே || 181 ||

181. (தத்மனः-) அந்த மனதின் (சோதனம்) தோஷத்தை நீக்கும் செயல் (முமுக்ஷுணா) முக்தியை நாடுபவனால் (ப்ரயத்னேன) நன்முயற்சியுடன் (கார்யம்) செய்யப்பட வேண்டும். (ஏதஸ்மின் விசுத்தே ஸதி ச) இது பரிசுத்தமடைந்து விட்டால் (முக்திः) முக்தியானது (கரபல-ஆயதே) கைத்தலத்தில் உள்ள பழம் போலாம்.

ஒ. ஜ்ஞான முத்பத்யதே பும்ஸாம் க்ஷயாத் பாபஸ்ய கர்மணः ||

**मोक्षैकसक्त्या विषयेषु रागं निर्मूल्य सन्न्यस्य च सर्वकर्म ।**
**सच्छ्रद्धया यः श्रवणादिनिष्ठो रजः-स्वभावं स धुनोति बुद्धेः**
**॥ १८२ ॥**

மோக்ஷைகஸக்த்யா விஷயேஷு ராகம் நிர்மூல்ய ஸந்ந்யஸ்ய ச ஸர்வகர்ம | ஸச்ச்ரத்தயா யः ச்ரவணாதி நிஷ்டோ ரஜः ஸ்வபாவம் ஸ துனோதி புத்தேः || 182 ||

182. (மோக்ஷ - ஏக-ஸக்த்யா) விடுபடவேண்டும் என்பதொன்றிலேயே ஊக்கத்துடன் (விஷயேஷு) விஷயங்களில் (ராகம்) பற்றுதலை (நிர்மூல்ய) வேருடன் களைந்து (ஸர்வகர்ம) எல்லாக்கர்மங்களையும் (ஸந்ந்யஸ்ய) துறந்து (ஸத்ச்ரத்தயா) பிரம்மத்தில் நன்னம்பிக்கையுடன் (யः) எவன் (ச்ரவண - ஆதி-நிஷ்டः) சிரவணம் முதலியவற்றில் நிலைபெற்றவனோ (ஸः) அவன் (புத்தேः) புத்தியினுடைய (ரஜः ஸ்வபாவம்) ரஜோகுணத்தன்மையை (துனோதி) நீக்கிவிடுகிறான்.

**ச்ரவணாதி நிஷ்ட:—'ச்ரவணாதிபிः அந்தர் நிஷ்டஸ்**

ச்ரத்தாலோ: புத்திவிக்ஷேபஸ்ய நைவாவஸர: ||' சிரவணம் மனன நிதித்தியாஸனத்தால் உள்ளே நிஷ்டை கூடி சிரத்தையுடனிருப்பவனுக்கு புத்திவிக்ஷேபத்திற்கு இடமும் சமயமும் இல்லாமல் போகிறது.

**मनोमयो नापि भवेत्परात्मा ह्याद्यन्तवत्त्वात्परिणामिभावात् ।
दुःखात्मकत्वाद्विषयत्वहेतोर्द्रष्टा हि दृश्यात्मतया न दृष्टः ॥ १८३ ॥**

மனோமயோ நாபி பவேத்பராத்மா ஹ்யாத்யந்தவத்வாத் பரிணாமி-பாவாத் | துஃக்காத்மகத்வாத்-விஷயத்வ-ஹேதோர் த்ரஷ்டா ஹி த்ருச்யாத்மதயா ந த்ருஷ்டஃ || 183 ||

183. (மனோ மயஃ அபி) மனோ மயமும் கூட (பராத்மா) பரமாத்மாவாக (ந பவேத்) இருக்கமுடியாது; (ஹி) ஏனெனில் (ஆதி-அந்தவத்வாத்) ஆரம்பமும் முடிவும் இருப்பதாலும், (பரிணாமி-பாவாத்) மாறுதலடைவதாலும், (துஃக்காத்மகத்வாத்) துன்பவடிவாயிருப்பதாலும் (விஷயத்வ-ஹேதோஃ) பார்க்கப்படும் காரணத்தாலும்; (த்ரஷ்டா ஹி) பார்க்கும் ஆத்மாவோ எனின் (த்ருச்யாத்மதயா) பார்க்கப்படும் பொருளாக (ந த்ருஷ்டஃ) பார்க்கப்படுவதன்று.

**ஆத்யந்தவத்வாத்**—ஸுஷுப்தியில் லயித்து ஜாக்ரத்தில் உதிப்பதால்

**விஷயத்வஹேதோ:**—ஸாக்ஷியாகிய ஆத்மாவிற்குப் பார்க்கப்படும் விஷயமாக மனது ஆகிறது. ஒ. 'அன்யத்ர மனா அபூவம் நாத்ராக்ஷம் அன்யத்ர மனா அபூவம் நாச்ரௌஷம்' மனது வேறிடத்திலிருந்ததால் நான் காணவில்லை, மனது வேறிடத்திலிருந்ததால் நான் கேட்கவில்லை.' —ப்ரு. உப.

## विज्ञानमयकोशः

**बुद्धि-र्बुद्धीन्द्रियैः सार्धं सवृत्तिः कर्तृलक्षणः ।**
**विज्ञानमय-कोशः स्यात्पुंसः संसारकारणम् ॥ १८४ ॥**

**விஜ்ஞானமயகோசஃ**

**புத்திர்-புத்தீந்த்ரியைஃஸார்த்தம் ஸவ்ருத்திஃகர்த்ரு** லக்ஷணஃ | விஜ்ஞான-மய-கோசஃ ஸ்யாத் பும்ஸஃ ஸம்ஸார-காரணம் || 184 ||

**விஜ்ஞானமயகோசம்**

184. (புத்திஃ) புத்தியானது (புத்தி-இந்த்ரியைஃ ஸார்த்தம்) ஞான இந்திரியங்களுடனும் (ஸவ்ருத்திஃ) அவற்றின் நடத்தைகளுடனும் கூடி (கர்த்ருலக்ஷணஃ) கர்த்தா எனும் லக்ஷணமுடையதாய் (விஜ்ஞானமய கோசஃ) விக்ஞான மய கோசம் எனப்படுவதாய் (பும்ஸஃ) மனிதனுடைய (ஸம்ஸாரகாரணம்) பிறவிச் சுழலுக்குக்காரணமாக (ஸ்யாத்) இருக்கிறது.

**अनुव्रजच्चित्प्रतिबिम्ब-शक्तिर्विज्ञानसंज्ञः प्रकृतेर्विकारः ।**
**ज्ञानक्रियावा-नहमित्यजस्रं देहेन्द्रियादि-ष्वभिमन्यते भृशम् ॥**
**॥ १८५ ॥**

அனுவ்ரஜச்சித்-ப்ரதிபிம்ப-சக்திர்-விஜ்ஞானஸம் ஜ்ஞஃ ப்ரக்ருதேர்-விகாரஃ | ஜ்ஞானக்ரியாவா-னஹமித் யஜஸ்ரம் தேஹேந்த்ரியாதிஷ்-வபிமன்யதே ப்ருசம் || 185 ||

185. (சித்ப்ரதிபிம்ப-) ஆத்ம சைதன்யத்தின் பிரதிபிம்பமான ஜீவனை (அனுவ்ரஜத்) தொடர்ந்து நிற்கும் (விஞ்ஞானஸம்ஜ்ஞஃ) விக்ஞானமெனப் பெயர் பெற்ற (சக்திஃ) சக்தியானது (ப்ரக்ருதேஃ) பிரகிருதி

யினுடைய (விகாரः) மாறுபாடேயாம். (ஜ்ஞான க்ரியா வான்)அறிபவனும் செயல் புரிபவனும் (அஹம் இதி) நான் என்று (அஜஸ்ரம்) எப்பொழுதும் (ப்ருசம்) மிகுதியாக (தேஹ-இந்த்ரியாதிஷு) உடலிலும் இந்திரியங்களிலும் (அபிமன்யதே) அது அபிமானம் கொள்ளுகிறது.

**अनादिकालोऽयमहं स्वभावो जीवः समस्त-व्यवहारवोढा ।**
**करोति कर्माण्यपि पूर्ववासनः पुण्यान्यपुण्यानि च तत्फलानि**
**॥ १८६ ॥**

**भुंक्ते विचित्रास्वपि योनिषु व्रजन्नायाति निर्यात्यध ऊर्ध्वमेषः ।**
**अस्यैव विज्ञानमयस्य जाग्रत्-स्वप्नाद्यवस्थाः सुखदुःख-भोगः**
**॥ १८७ ॥**

அநாதிகாலோऽயமஹம் ஸ்வபாவோ ஜீவः ஸமஸ்த-வ்யவஹார-வோடா | கரோதி கர்மாண்யபி பூர்வ வாஸனः புண்யான்யபுண்யானி ச தத்பலானி || 186 ||

புங்க்தே விசித்ராஸ்வபி யோனிஷு வ்ரஜன்-னயாதி நிர்யாத்யத ஊர்த்வ-மேஷः | அஸ்யைவ விஜ்ஞானமயஸ்ய ஜாக்ரத்-ஸ்வப்நாத்யவஸ்தாः ஸுக-துःக்கபோகः || 187 ||

186-7. (அயம் ஜீவः) ஜீவன் எனப்படும் இது (அநாதிகாலः) காலத்தில் ஆதியற்றது, (அஹம் ஸ்வபாவः) அஹங்காரத்தை இயற்கையாக உடையது, (ஸமஸ்தவ்யவஹார வோடா) எல்லா விவகாரங்களையும் நிர்வகிப்பது, (பூர்வ வாஸனः) முன்வினையின் வாஸனையால் உந்தப்பட்டதாய் (புண்யானி அபுண்யானி கர்மாணி நற்செயல்களையும் தீச் செயல்களையும் (கரோதி) செய்கிறது; (தத் பலானி) அவற்றின்

பயன்களை (புங்க்தே) அனுபவிக்கிறது; (விசித்ராஸு) பலவகைப்பட்ட (யோனிஷு அபி) பிறப்பிடங்களிலும் (வ்ரஜன்) செல்வதாய் (ஏஷ:) இது (அத: ஊர்த்வம்) கீழும் மேலும் (ஆயாதி நிர்யாதி) வருவதும் போவது மாயிருக்கிறது; (அஸ்ய) இந்த (விஜ்ஞான மயஸ்ய ஏவ) விக்ஞானமய ஜீவனுக்குத்தான் (ஜாக்ரத்-ஸ்வப்ன-ஆதி-) விழிப்பு, கனவு முதலிய (அவஸ்தா:) அவஸ்தை களும் (ஸுகது:க்க போகா:) சுகதுக்க அனுபவங்களும்.

**देहादिनिष्ठाश्रमधर्म कर्मगुणाभिमानं सततं ममेति ।**
**विज्ञानकोशोऽयमति प्रकाशः प्रकृष्टसान्निध्यवशात्परात्मनः ॥**
**अतो भवत्येष उपाधिरस्य यदात्मधीः संसरति भ्रमेण**
**॥ १८८ ॥**

தேஹாதி நிஷ்டாச்ரமதர்ம கர்ம குணாபிமானம் ஸததம் மமேதி | விஜ்ஞான கோசோ ऽயமதி ப்ரகாச: ப்ரக்ருஷ்டஸாந்நித்யவசாத் ப்ராத்மன: || அதோ பவத்யேஷ உபாதி - ரஸ்ய யதாத்ம தீ: ஸம்ஸரதி ப்ரமேண || 188 ||

188. (தேஹாதிநிஷ்ட-) உடல் முதலியவற்றில் நிலை பெற்ற (ஆச்ரம-தர்ம-கர்ம-குண-) ஆசிரமம், தர்மம், கர்மம், குணம் ஆகியவற்றில் (அபிமானம்) நான் என்ற அபிமானமும் (மம இதி) என்னுடையது என்ற எண்ணமும் (ஸததம்) இடைவிடாது உளது. (அயம்) இந்த (விஜ்ஞான கோச:) விக்ஞானமய கோசம் (பராத்மன:) பரமாத்மாவிற்கு (ப்ரக்ருஷ்ட ஸாந்நித்ய வசாத்) மிக நெருங்கிய முன்னிலையில் இருக்கும் கார ணத்தால் (அதி-ப்ரகாச:) அதிகப் பிரகாசமுடையதா யிருக்கிறது. (அத:) ஆகையால் (ஏஷ:) இந்தக் கோசமும் (அஸ்ய) ஆத்மாவிற்கு (உபாதி:) ஒரு தொடர்பாகிறது. (யத் ஆத்மதீ:) இதுவே ஆத்மா

என்ற புத்தியுடையவன் (ப்ரமேன) மதிமயக்கத்தால் (ஸம்ஸரதி) பிறவியில் சுழல்கிருன்.

## आत्म-असंगता

**योऽयं विज्ञानमयः प्राणेषु हृदि स्फुरत्ययं ज्योतिः ।**
**कूटस्थः सन्नात्मा कर्ता भोक्ता भवत्युपाधिस्थः ॥ १८९ ॥**

ஆத்ம-அஸங்கதா

யோऽயம் விஜ்ஞானமய: ப்ராணேஷு ஹ்ருதி ஸ்புரத்யயம் ஜ்யோதி: | கூடஸ்த: ஸந்நாத்மா கர்த்தா போக்தா பவத்யுபாதிஸ்த: || 189 ||

### ஆத்மாவின் பற்றின்மை

189. (ப்ராணேஷு) பிராணன்களிடை (ய:) எவன் (அயம் விக்ஞான மய:) இந்த விக்ஞானமயஞ யிருக்கிருனே (அயம்) இவனே (ஹ்ருதி) புத்திஸ்தான மாகிய இருதயத்தில் (ஜ்யோதி:) ஜோதிஸ்வரூபமாக (ஸ்புரதி) ஒளிர்கிருன். (கூடஸ்த:) கூடஸ்தனுகிய (ஆத்மாஸன்) ஆத்மாவாயிருந்தும் (உபாதிஸ்த:) உபாதியில் நிலைபெற்றதால் (கர்த்தா) செயல்புரிபவனுகவும் (போக்தா) அனுபவிப்பனுகவும் (பவதி) ஆகிருன்.

ஒ. யோऽயம் விஜ்ஞானமயம்: ப்ராணேஷு ஹ்ருத்யந்தர் ஜ்யோதி: | —ப்ரு. உப. 4.3.7.

**स्वयं परिच्छेद-मुपेत्य बुद्धेस्तादात्म्यदोषेण परं मृषात्मनः ।**
**सर्वात्मकः सन्नपि वीक्षते स्वयं स्वतः पृथक्त्वेन मृदो घटानिव ॥ १९० ॥**

ஸ்வயம் பரிச்சேத-முபேத்ய புத்தேஸ்-தாதாத்ம்ய தோஷேண பரம் ம்ருஷாத் மன: | ஸர்வாத்மக: ஸந்-

ஙபி வீக்ஷதே ஸ்வயம் ஸ்வதః ப்ருதக்த்வேன ம்ருதோ கடானிவ || 190 ||

190. (ம்ருஷாத்மனः) பொய்யாத்ம வடிவான (புத்தேः) புத்தியுடன் (தாதாத்ம்ய தோஷேண பரம்) ஒன்றுபட்டுப்போன தோஷத்தினுலேயே (ஸ்வயம்) தான் (பரிச்சேதம்) அளவுக்குட்பட்ட அற்பத் தன்மையை (உபேத்ய) அடைந்து (ஸர்வாத்மகः ஸன் அபி) அனைத்திற்கும் ஆத்மாவாயிருந்தபோதிலும் (ஸ்வயம்) தன்னை (ஸ்வதः ப்ருதக்த்வேன) தன்னிலும் வேருனதாக(வீக்ஷதே)காண்கிருன்—(ம்ருதः) மண்ணினின்றும் (கடானி இவ) மண்குடங்களை வேருனதாய்ப் பார்ப்பது போல்.

**புத்திः**—இங்கு விக்ஞானமய கோசத்தைக் குறிக்கும்.

**उपाधिसम्बन्ध-वशात्परात्मा ह्युपाधि-धर्मा-ननुभाति तद्गुणः। अयोविकारा-नविकारि-ब्रह्मवित् सदैकरूपोऽपि परः स्वभावात् ॥ १९१ ॥**

உபாதிஸம்பந்த-வசாத் பராத்மா ஹ்யுபாதி-தர்மா-னனுபாதி தத்குணः | அயோவிகாரா-னவிகாரி-வஹ்னிவத் ஸதைகரூபோऽபி பரः ஸ்வபாவாத் || 191 ||

191. (பராத்மா) பரமாத்மா (ஸதா) எப்பொழுதும் (ஏகரூபः அபி) ஒரே வடிவுடையதாயினும் (ஸ்வபாவாத்) இயற்கையாகவே (பரः) உயர்ந்ததாயினும் (உபாதி தர்மான் அனுபாதி தத்குணः) உபாதியின் குணங்களை மேற்கொண்டு அதைப்பின்பற்றிப் பிரகாசிப்பதுபோல் காண்கிறது—(அயः விகாரான் அவிகாரி-வஹ்னிவத்) மாறுபாடற்ற அக்கினி தான் பற்றிக்கொண்ட இரும்பினுடைய வடிவங்களை ஏற்குமாப்போல்.

## मोक्षोपायः

शिष्य उवाच—

श्रमेणाप्यन्यथा वाऽस्तु जीवभावः परात्मनः ।
तदुपाधे-रनादित्वा-न्नानादे-र्नाश इष्यते ॥१९२॥

### மோக்ஷோபாய:

சிஷ்ய உவாச—

ப்ரமேணப்யன்யதா வாऽஸ்து ஜீவபாவ: பராத்மன: । ததுபாதே-ரநாதித்வாந்-நாநாதேர்-நாச இஷ்யதே ॥ 192 ॥

### முக்திக்கு வழி

சிஷ்யன் கூறியது—

192. (பராத்மன:) பரமாத்மாவிற்கு (ஜீவபாவ:) ஜீவபாவனை (ப்ரமேண அபி) உபாதியைத் தான் என்ற மதிமயக்கத்தாலோ (அன்யதா வா) அல்லது வேறு எதனாலோ (அஸ்து) இருக்கட்டும். (தத்) அந்த (உபாதே: அநாதித்வாத்) உபாதிக்கு ஆதியில்லாததால் (அநாதே:) அப்படி ஆதியற்ற அதற்கு (நாச:) அழிவானது (ந இஷ்யதே) ஒரு பொழுதும் ஏற்படாது.

अतोऽस्य जीवभावोऽपि नित्या भवति संसृतिः ।
न निवर्तेत तन्मोक्षः कथं मे श्रीगुरो वद ॥ १९३ ॥

அதோऽஸ்ய ஜீவபாவோऽபி நித்யா பவதி ஸம்ஸ்ருதி: । ந நிவர்த்தேத தன்மோக்ஷ: கதம் மே ஸ்ரீகுரோ வத ॥ 193 ॥

193. (அத:) ஆகையால் (அஸ்ய) இவனுக்கு (ஜீவபாவ: அபி) ஜீவனாயிருக்கும் நிலையோ எனின்

(நித்யா) என்றும் இருப்பதாக (பவதி) ஆகிறது. (ஸம்ஸ்ருதிः) பிறவிச்சுழல் (ந நிவர்த்தேத) இவனை விட்டு நீங்காது. (தத்) அது அப்படியிருக்கையில் (மோக்ஷः) முக்தியானது (கதம்) எங்ஙனம் கிட்டும்? (ஸ்ரீகுரோ) குருநாதரே (மே) எனக்கு (வத) இதைக் கூறியருளும்.

श्रीगुरुरुवाच—

सम्यक्पृष्टं त्वया विद्वन् सावधानेन तच्छृणु ।
प्रामाणिकी न भवति भ्रान्त्या मोहितकल्पना ॥ १९४ ॥

ஸ்ரீ குருருவாச—

ஸம்யக் ப்ருஷ்டம் த்வயா வித்வன் ஸாவதானேன தச்ச்ருணு | ப்ராமாணிகீ ந பவதி ப்ராந்த்யா மோஹித-கல்பனா ||
194 ||

ஸ்ரீ குரு கூறியது—

194. (வித்வன்) படிப்பிற் சிறந்தவனே! (த்வயா) உன்னால் (ஸம்யக்) நன்றாக (ப்ருஷ்டம்) கேள்வி கேட்கப்பட்டது. (ஸாவதானேன) கவனத்துடன் (தத்) அதைப்பற்றி (ச்ருணு) கேட்பாயாக. (ப்ராந்த்யா) மதிமயக்கத்தால் (மோஹித-கல்பனா) ஒன்றை மற்றொன்றாகக் கொள்ளும் எண்ணமானது (ப்ராமாணிகீ) உண்மையென்று ஒப்புக்கொள்ளக்கூடியதாக (ந பவதி) ஆகாது.

भ्रान्तिं विना त्वसंगस्य निष्क्रियस्य निराकृतेः ।
न घटेतार्थ-सम्बन्धो नभसो नीलतादिवत् ॥ १९५ ॥

ப்ராந்திம் வினா த்வஸங்கஸ்ய நிஷ்க்ரியஸ்ய நிரா-க்ருதேः | ந கடேதார்த்தஸம்பந்தோ நபஸோ நீல-தாதிவத் ||
195 ||

195. (அஸங்கஸ்ய) பற்றற்றவனும் (நிஷ்க்ரியஸ்ய) செயலற்றவனும் (நிராக்ருதேః) உருவமற்றவனும் ஆகியவனுக்கு (ப்ராந்திம் விநா) மதிமயக்கம் இல்லாவிட்டால் (அர்த்தஸம்பந்தః) காணப்படும் பொருளுடன் ஸம்பந்தம் (ந கடேத) பொருந்தாது— (நபஸః) ஆகாயத்திற்கு (நீலதாதிவத்) நீலநிறம் முதலியவை போல்.

स्वस्य द्रष्टु-र्निर्गुणस्याक्रियस्य
प्रत्यग्बोधानन्दरूपस्य बुद्धेः ।
भ्रान्त्या प्राप्तो जीवभावो न सत्यो
मोहापाये नास्त्यवस्तु-स्वभावात् ॥ १९६ ॥

ஸ்வஸ்ய த்ரஷ்டுர்-நிர்குணஸ்யாக்ரியஸ்ய ப்ரத்யக்-போதானந்த-ரூபஸ்ய புத்தேః | ப்ராந்த்யா ப்ராப்தோ ஜீவபாவோ ந ஸத்யோ மோஹாபாயே நாஸ்த்யவஸ்து ஸ்வபாவாத் || 196 ||

196. (நிர்க்குணஸ்ய) குணங்களைக்கடந்தவனும் (அக்ரியஸ்ய) செயலற்றவனும் (ப்ரத்யக்-போத-ஆனந்த ரூபஸ்ய) உள்ளே ஞானனந்தவடிவினனாய் விளங்குபவனும் (த்ரஷ்டுః) ஸாக்ஷியாயிருப்பவனும் ஆகிய (ஸ்வஸ்ய) தனக்கு (புத்தேః ப்ராந்த்யா) புத்தியின் மயக்கத்தால் (ப்ராப்தః) அடையப்பட்ட (ஜீவபாவః) ஜீவத்தன்மை (ந ஸத்யః) உண்மையானதன்று; (அவஸ்து-ஸ்வபாவாத்) ஜீவத்தன்மைக்கு உண்மையான இருப்பின்மையால் (மோஹ- அபாயே) மதிமயக்கம் நீங்கியதும் (நாஸ்தி) அது இல்லாமல் போகிறது.

यावद्भ्रान्ति-स्तावदेवास्य सत्ता
मिथ्याज्ञानोज्जृम्भितस्य प्रमादात् ।
रज्ज्वां सर्पो भ्रान्तिकालीन एव
भ्रान्तेर्नाशे नैव सर्पोऽपि तद्वत् ॥ १९७ ॥

யாவத்ப்ராந்திஸ்தாவதேவாஸ்ய ஸத்தா மித்யா ஜ்ஞானேஜ்ஜ்ரும்பிதஸ்ய ப்ரமாதாத் | ரஜ்ஜ்வாம் ஸர்ப்போ ப்ராந்திகாலீன ஏவ ப்ராந்தேர் நாசே நைவ ஸர்ப்போऽபி தத்வத் || 197 ||

197. (யாவத்) எது வரை (ப்ராந்திঃ) மதிமயக்கமோ (தாவத் ஏவ) அது வரைக்கும் தான் (ஸத்தா) இருப்பு—(ப்ரமாதாத்) உண்மையின் மறதியால் (மித்யாஜ்ஞான-உஜ்ஜ்ரும்பிதஸ்ய) பொய்யறிவில் முளைத்த (அஸ்ய) இதற்கு—(ரஜ்ஜ்வாம் ஸர்ப்பঃ) பழுதையில் பாம்பு (ப்ராந்திகாலீன ஏவ) மதிமயக்கம் உள்ள காலத்தின ளவேயாம்; (ப்ராந்தேர் நாசே) மதிமயக்கம் ஒழிந்ததும் (ஸர்ப்பঃ அபி) பாம்பும் (ந ஏவ) இல்லவே இல்லை; (தத்வத்) அது போன்றது தான் இதுவும்.

ஒ. 'அதிஷ்ட்டானுவசேஷோஹி நாசঃ கல்பித வஸ்துனঃ' கல்பிக்கப்பட்ட ஒருவஸ்துவுக்கு நாசம் என்பது அடிப்படையான பொருளாக அது எஞ்சி நிற்பதேயாம். குடத்திற்கு நாசம் மண்ணாகி விடுவது போலும், பாம்பிற்கு நாசம் பழுதையாகிவிடுவதுபோலும்.

अनादित्व-मविद्यायाः कार्यस्यापि तथेष्यते ।
उत्पन्नायां तु विद्यायामाविद्यक-मनाद्यपि ॥ १९८ ॥
प्रबोधे स्वप्नवत्सर्वं सहमूलं विनश्यति ।
अनाद्यपीतं नो नित्यं प्रागभाव इव स्फुटम् ॥ १९९ ॥

அனுதித்வ-மவித்யாயாः கார்யஸ்யாபி ததேஷ்-யதே | உத்பன்னுயாந்து வித்யாயா-மாவித்யக-மனுத்யபி || 198 ||

ப்ரபோதே ஸ்வப்னவத் ஸர்வம் ஸஹமூலம் விநச்-யதி | அனுத்யபீதம் நோ நித்யம் ப்ராகபாவ இவ ஸ்புடம் || 199 ||

198-99. (அவித்யாயாः) அவித்தைக்கும் (கார்யஸ்ய அபி) அதன் விளைவிற்கும் (அனுதித்வம்) ஆரம்பமின்மை என்றது (ததா) அப்படிப்பட்டதே என்று (இஷ்யதே) கூறப்படுகிறது. (வித்யாயாம்) அறிவின் விளக்கம் (உத்பன்னுயாம்) உதித்தவுடன் (ஆவித்யகம்) அவித்தையின் விளைவும் (அனுதி அபி) ஆதியற்றதாயினும், (ப்ரபோதே) விழிப்பேற்பட்டபின் (ஸ்வப்னவத்) கனவுபோல், (ஸர்வம்) அனைத்தும் (ஸஹமூலம்) வேருடன் (விநச்யதி) அழிந்து போகிறது. (அனுதி அபி) ஆதியற்றதாயினும் (இதம்) இது (நோ நித்யம்) என்றும் இருப்புடையதன்று—(ப்ராக் அபாவः இவ) முன்பு இல்லாதது ஒன்று புதிதாய்த் தோற்றத்தை அடையும் பொழுது, 'இல்லாதிருந்தது' என்பது இல்லாமற்போவது போல் அவித்தையும் இல்லாமற் போகிறது என்பது (ஸ்புடம்) தெளிவு.

**வேருடன்**—அவித்தையாகிய வேருடன்.

**ப்ராக் அபாவ:**—இது நியாய சாஸ்திரத்தில் வழங்கும் சொல். ஒரு பொருள் ஒரு குறிப்பிட்ட சமயத்தில் தோன்றியது என்றல் அதற்குமுன் அது இல்லாமலிருந்தது. இல்லாமலிருந்த தன்மை 'ப்ராக் அபாவம்' எனப்படுவது. அது அனுதி, ஆனல் பொருள் தோன்றியவுடன் இல்லாமலிருந்த தன்மை முடிவடைகிறது. அவ்வாறே 'அவித்தை' அனுதியாயினும் ஞானம் உதித்தவுடன் முடிவடைகிறது.

अनादेरपि विध्वंसः प्रागभावस्य वीक्षितः ।
यद्बुद्ध्युपाधि-सम्बन्धात्परिकल्पित-मात्मनि ॥२००॥
जीवत्वं न ततोऽन्यस्तु स्वरूपेण विलक्षणः ।
सम्बन्धस्त्वात्मनो बुद्ध्या मिथ्याज्ञानपुरःसरः ॥२०१॥

அநாதேரபி வித்வம்ஸஃ ப்ராகபாவஸ்ய வீக்ஷிதஃ | யத்புத்த்யுபாதி-ஸம்பந்தாத் பரிகல்பித-மாத்மனி || 200 ||

ஜீவத்வம் ந ததோऽன்யஸ்து ஸ்வரூபேண விலக்ஷணஃ | ஸம்பந்தஸ்-த்வாத்மனோ புத்த்யா மித்யா-ஜ்ஞானபுரஃஸரஃ || 201 ||

200-201. (அநாதேஃ அபி) ஆதியில்லாததற்கும் (வித்வம்ஸஃ) அழிவு (ப்ராகபாவஸ்ய) முன்பு இல்லாதிருந்ததின் விஷயத்தில் (வீக்ஷிதஃ) காணப்படுகிறது. (புத்தி-உபாதி-ஸம்பந்தாத்) புத்தியாகிற உபாதியின் தொடர்பால் (ஆத்மனி) தன்னிடம் (பரிகல்பிதம்) ஏற்றிவைக்கப்பட்ட (ஜீவத்வம்) ஜீவத்தன்மையும் (ததஃ) ஆகையால் (ந) இல்லைதான். (அன்யஃ து) மற்றொன்றாகிய ஆத்மாவோ (ஸ்வரூபேண) இயற்கையாகவே (விலக்ஷணஃ) வேறானது. (ஆத்மனஃ) ஆத்மாவிற்கு (புத்த்யா) புத்தியுடன் (ஸம்பந்தஃ து) தொடர்போ எனின் (மிதயாஜ்ஞான-புரஃஸரஃ) பொய்யறிவை முன்னிட்டு வந்ததாகும்.

ததோऽன்யத்து । விலக்ஷணம் । ஸம்பந்தஃ ஸ்வாமத்மனோ ! பாடபேதம்.

विनिवृत्तिर्भवेत्तस्य सम्यग्ज्ञानेन नान्यथा ।
ब्रह्मात्मैकत्व-विज्ञानं सम्यग्ज्ञानं श्रुते-र्मतम् ॥ २०२ ॥

விநிவ்ருத்திர் பவேத்தஸ்ய ஸம்யக்ஜ்ஞானேன நான்யதா | ப்ரஹ்மாத்மைகத்வ-விஜ்ஞானம் ஸம்யக்-ஜ்ஞானம் ச்ருதேர்-மதம் || 202 ||

202. (தஸ்ய) அதற்கு (விநிவ்ருத்திః) முடிவானது (ஸம்யக் ஞானேன) தெளிந்த அறிவால் (பவேத்) ஏற்படும்; (ந அன்யதா) வேறு வழியில் ஏற்படாது, (ப்ரஹ்ம-ஆத்ம- ஏகத்வ-விஜ்ஞானம்) பிரம்மமும் ஆத்மாவும் ஒன்றே என்ற தெளிவான ஞானம் (ஸம்யக் ஞானம்) நல்ல ஞானம் என்பது (ச்ருதேః) சுருதியின் (மதம்) கொள்கை.

तदात्मानात्मनोः सम्यग्विवेकेनैव सिध्यति ।
ततो विवेकः कर्तव्यः प्रत्यगात्मसदात्मनोः ॥ २०३ ॥

ததாத்மாநாத்மனோः ஸம்யக் விவேகேனைவ ஸித்யதி | ததோ விவேகः கர்த்தவ்யः ப்ரத்யகாத்மா-ஸதாத்மனோः || 203 ||

203. (தத்) அது (ஆத்ம-அநாத்மனோः) ஆத்மாவையும் அநாத்மாவையும் பற்றிய (ஸம்யக் விவேகேன ஏவ) சிறந்த பகுத்தறிவினாலேயே (ஸித்த்யதி) ஸித்திக்கும். (ததः) ஆகையால் (ப்ரத்யகாத்ம-அஸதாத்மனோः) ஆத்மா பரமாத்மாவையும் பொய்யாகக் கற்பிக்கப்பட்ட ஆத்மாவையும் பற்றி (விவேகः) தெளிந்த சிந்தனை வடிவான ஆராய்ச்சி (கர்த்தவ்யः) செய்யப்படவேண்டும்.

जलं पंकवदत्यन्तं पंकापाये जलं स्फुटम् ।
यथा भाति तथात्मापि दोषाभावे स्फुटप्रभः ॥२०४॥

ஜலம் பங்கவதத்யந்தம் பங்காபாயே ஜலம் ஸ்புடம் | யதா பாதி ததாத்மாபி தோஷாபாவே ஸ்புட-ப்ரபः || 204

204. (பங்கவத்-அத்யந்தம்) மிகவும் சேருன (ஜலம்) நீர் (பங்காபாயே) கலக்கம் நீங்கியபின் (ஸ்புடம்) தெளிவான (ஜலம்) நீராக (யதா) எங்ஙனம் (பாதி) விளங்குகிறதோ (ததா) அங்ஙனம் (ஆத்மா அபி) ஆத்மாவும் (தோஷ-அபாவே) தோஷம் நீங்கிய பின் (ஸ்புடப்ரப:) தெளிவான பிரகாசமுடையதாகிறது.

**असन्निवृत्तौ तु सदात्मनः स्फुटं प्रतीतिरेतस्य भवेत्प्रतीचः ।**
**ततो निरासः करणीय एवासदात्मनः साध्वहमादि-वस्तुनः ॥ २०५ ॥**

அஸந்நிவ்ருத்தௌ து ஸதாத்மன: ஸ்புடம் ப்ரதீதி-ரேதஸ்ய பவேத்ப்ரதீச: | ததோ நிராஸ: கரணீய ஏவா-ஸதாத்மன: ஸாத்வஹமாதி-வஸ்துன: || 205 ||

205. (அஸத்-நிவ்ருத்தௌ து) அஸத்தாகிற அன்னமயம் முதலியவை விலகிய பின் (ப்ரதீச:) அனைவர்க்குள்ளும் உறையும் (ஏதஸ்ய) இந்த (ஸத்-ஆத்மன:) உண்மையான ஆத்மாவின் (ஸ்புடம்) தெளிவான (ப்ரதீதி:) விளக்கம் (பவேத்) ஏற்படும். (தத:) ஆகையால் (அஸதாத்மன:) அஸத்தான ஆத்மாவிடம் தோன்றும் (அஹம் ஆதி வஸ்துன:) அஹங்காரம் முதலிய பொருள்களின் (நிராஸ:) நீக்கம் (கரணீய: ஏவ) செய்தாக வேண்டும்.

ஸ்புட-ப்ரதீதி:—பா.பே.

ஒ. 'பஞ்சானமபிகோசானம்......' வி.சூ. 210.

**अतो नायं परात्मा स्याद्विज्ञानमय-शब्दभाक् ।**
**विकारित्वाज्जडत्वाच्च परिच्छिन्नत्व-हेतुतः ॥**
**दृश्यत्वाद्व्यभिचारित्वान्नानित्यो नित्य इष्यते ॥२०६॥**

அதோ நாயம் பராத்மா ஸ்யாத்விஜ்ஞானமய-**சப்தபாக்** | விகாரித்வாஜ்ஜடத்வாச்ச பரிச்சின்னத்வ-ஹேதுத: || த்ருச்யத்வாத்-வ்யபிசாரித்வாந்நாநித்யோ நித்ய இஷ்யதே || 206 ||

206. (அத:) ஆகையால் (அயம் விஜ்ஞானமய-**சப்தபாக்**) விஜ்ஞானமயம் என்று கூறப்படும் இது (விகாரித்வாத்) மாறுபடுவதாலும் (ஜடத்வாத் ச) ஜடமாயிருப்பதாலும் (பரிச்சின்னத்வ-ஹேதுத:) அளவுக்குட்பட்டகாரணத்தாலும், (த்ருச்யத்வாத்) காணப்படுவதாயிருப்பதாலும் (வ்யபிசாரித்வாத்) நிலைபிறழ்வதாலும் (ந பரமாத்மா) பரமாத்மா அன்று. (அநித்ய:) நிலையில்லாத ஒன்று (நித்ய:) நிலையுள்ளதாக (ந இஷ்யதே) ஒருபொழுதும் ஆக இயலாது.

## आनन्दमयकोशः

आनन्दप्रतिबिम्ब-चुम्बित-तनु-र्वृत्तिस्तमो-जृम्भिता
स्यादानन्दमयः प्रियादिगुणकः स्वेष्टार्थलाभोदयः ।
पुण्यस्यानुभवे विभाति कृतिना-मानन्दरूपः स्वयं
भूत्वा नन्दति यत्र साधु तनुभृन्मात्रः प्रयत्नं विना
॥ २०७ ॥

### ஆனந்தமயகோச:

ஆனந்தப்ரதிபிம்ப-சும்பித-தனுர்-வ்ருத்திஸ்தமோ-ஜ்ரும்பிதா ஸ்யாதானந்தமய: ப்ரியாதிகுணக: ஸ்வேஷ்டார்த்த-லாபோதய: | புண்யஸ்யானுபவே விபாதி க்ருதினா-மானந்தரூப: ஸ்வயம் பூத்வா நந்ததி யத்ர ஸாது தனுப்ருன்-மாத்ர: ப்ரயத்னம் விநா || 207 ||

## ஆனந்தமயகோசம்

207. (ஆனந்த-ப்ரதிபிம்ப-) பரமாத்மஸ்வரூப ஆனந்தத்தின் பிரதிபிம்பத்தால் (சும்பித-) வியாபிக்கப் பெற்ற (தனுః) வடிவுடையதாயும் (தமோ ஜ்ரும்பிதா) அவித்தையினின்று தோன்றிய (வ்ருத்திః) பரிணமம் உடையதாயும் (ஸ்வ-இஷ்ட-அர்த்தலாப-உதயః) தனக்கிஷ்டமான பொருள் கிட்டியபொழுது உதிக்கும் (ப்ரிய-ஆதி-குணகః) பிரியம், மகிழ்ச்சி முதலிய குணங்களுடன் கூடியதாயும் (ஸ்யாத்) உளது (ஆனந்த மயః) ஆனந்த மயகோசம். (புண்யஸ்ய) புண்ணியத்தின் பயனை (அனுபவே) அனுபவிக்கும் பொழுது (க்ருதிநும்) நற்செயல் புரிந்த பாக்கியசாலிகளுக்கு (ஸ்வயம்) தானுகவே (விபாதி) இவ்வானந்தமயகோசம் பிரகாசிக்கிறது. (ஆனந்தரூபః) ஆனந்தத்தின் வடிவாகவே (ஸ்வயம்) தான் (பூத்வா) ஆகி (யத்ர) அந்நிலையில் (தனுப்ருத்மாத்ரః) சரீரத்தைத் தரிக்கும் காரணத்தாலேயே (ப்ரயத்னம் விநா) வேறு முயற்சியில்லாமல் (ஸாது) நன்ருக (நந்ததி) ஆனந்தத்தை அனுபவிக்கிருன்.

ஸர்வோ நந்ததி யத்ர—பாடபேதம்.

**ப்ரிய ஆதிகுணக:**—ஒ. மோதோ தக்ஷிணః பக்ஷః । ப்ரமோத உத்தரః பக்ஷః । ஆனந்த ஆத்மா ॥ —தை. உப. 2.5.

**आनन्दमयकोशस्य सुषुप्तौ स्फूर्ति-रुत्कटा ।**
**स्वप्नजागरयो-रीष दिष्ट-सन्दर्शनादिना ॥ २०८ ॥**

ஆனந்தமய-கோசஸ்ய ஸுஷுப்தௌ ஸ்பூர்த்தி-ருத்கடா ॥ ஸ்வப்ன-ஜாகரயோ-ரீஷ-திஷ்ட-ஸந்தர்சநாதினு ॥ 208 ॥

208. (ஆனந்தமய கோசஸ்ய) ஆனந்தமய கோசத்திற்கு (ஸுஷுப்தௌ) உறக்கநிலையில்

(ஸ்பூர்த்திः) மலர்ச்சியானது (உத்கடா) பரிபூர்ணமாயுளது. (ஸ்வப்ன-ஜாகரயோः) கனவிலும் விழிப்பிலும் (இஷ்ட-ஸந்தர்சனதினு) இஷ்டமான பொருள்களின் காட்சி முதலியவற்ருல் (ஈஷத்) சிறிதளவு ஏற்படுகிறது.

नैवाय-मानन्दमयः परात्मा सोपाधिकत्वात्प्रकृते-र्विकारात् ।
कार्यत्वहेतोः सुकृतक्रियाया विकारसंघात-समाहितत्वात्
॥ २०९ ॥

நைவாய-மானந்தமயः பராத்மா ஸோபாதிகத்வாத் ப்ரக்ருதேர்-விகாராத் | கார்யத்வஹேதோः ஸுக்ருதக்ரியாயா விகாரஸங்காத-ஸமாஹிதத்வாத் || 209 ||

209. (ஸ-உபாதிகத்வாத்) உபாதியுடன் தொடர்புடைமையாலும், (ப்ரக்ருதேः விகாராத்) பிரகிருதியின் ஒரு மாறுபாடாயிருப்பதாலும் (ஸுக்ருதக்ரியாயாः) புண்ணியச் செயலால் (கார்யத்வ ஹேதோः) விளக்கப்பெறும் காரணத்தாலும் (விகார-ஸங்காத-) மாறுபாடுடைய அன்னமயம் முதலிய கூட்டத்துடன் (ஸமாஹிதத்வாத்) கூடியிருப்பதாலும் (அயம்) இந்த (ஆனந்தமய கோசமும் (பராத்மா ந ஏவ) பரமாத்மாவாக இருக்க இயலாது.

पंचानामपि कोशानां निषेधे युक्तितः श्रुतेः ।
तन्निषेधावधिः साक्षी बोधरूपोऽवशिष्यते ॥ २१०॥

பஞ்சானுமபி கோசானும் நிஷேதே யுக்திதः ச்ருதேः | தந்நிஷேதாவதிः ஸாக்ஷீ போதரூபோऽவசிஷ்யதே || 210 ||

210. (பஞ்சானும் அபி கோசானும்) ஐந்து கோசங்களும் (யுக்திதः) விசாரத்தாலும் (ச்ருதேः)

சுருதியாலும் (நிஷேதே) விலக்கப்பட்டபின் (தத் நிஷேத-அவதிஃ) அந்த விலக்கத்தின் எல்லையாக (போத ரூபஃ) ஞானமே வடிவானதும் (ஸாக்ஷீ) ஸாக்ஷி வடிவானதுமான ஆத்மா (அவசிஷ்யதே) எஞ்சி நிற்கின்றது.

சுருதியாலும்—ஒ. 'ஸ ஏஷ நேதி நேதி ஆத்மா'—அவ் வாத்துமா 'இது இல்லை இது இல்லை' என்று விளக்கப்படும்.

—ப்ரு. உப. 4.4.22.

**योऽयमात्मा स्वयंज्योतिः पंचकोशविलक्षणः ।**
**अवस्थात्रयसाक्षी सन्निर्विकारो निरंजनः ॥**
**सदानन्दः स विज्ञेयः स्वात्मत्वेन विपश्चिता ॥२११॥**

யோऽயமாத்மா ஸ்வயஞ்ஜ்யோதிஃ பஞ்சகோச-விலக்ஷணஃ | அவஸ்தாத்ரய-ஸாக்ஷீ ஸந்நிர்விகாரோ நிரஞ்ஜனஃ | ஸதானந்தஃ ஸ விஜ்ஞேயஃ ஸ்வாத்மத்வேன விபச்சிதா || 211 ||

211. (ஸ்வயம் ஜ்யோதிஃ) தானே பிரகாசிப்பதாயும் (பஞ்சகோச-விலக்ஷணஃ) ஐந்து கோசங்களின்றும் வேருயும் (யஃ அயம் ஆத்மா) எந்த இந்த ஆத்மா உளதோ (ஸஃ) அது (அவஸ்தாத்ரய-ஸாக்ஷீ)-விழிப்பு, கனவு, உறக்கம் என்ற—மூன்று நிலைகளுக்கும் ஸாக்ஷியாகவும் (ஸத்) என்றும் உளதாகவும் (நிர்விகாரஃ) மாறுபாடற்றதாகவும் (நிரஞ்ஜனஃ) மாசற்றதாகவும் (ஸதா) எப்பொழுதும் (ஆனந்தஃ) ஆனந்த வடிவினதாகவும் (விபச்சிதா) உண்மையைக்காணும் திறன் படைத்த—ஞானியால் (ஸ்வாத்மத்வேன) தன்னுடைய ஆத்மாவாகவும் (விஜ்ஞேயஃ) உணரப்படவேண்டும்.

ஒ. 'ப்ரஹ்மபுச்சம் ப்ரதிஷ்ட்டா' —தை.உப. 2.5.

பஞ்சகோசங்களும் ஆத்மாவல்ல என்று விலக்கப்பட்ட பொழுது

அனைத்துக்கும் பிரதிஷ்ட்டையாய் அடிப்படையாய் எஞ்சி நிற்பதே ஆத்மா. அதுவே பிரம்மம்.

ஒ. அன்னப்ராண மனஃ ப்ரபோத-பரமானந்தைஃ சிரஃ பக்ஷயுக்புச்சாத்ம-ப்ரகடைர்-மஹோபநிஷதாம் வாக்யைஃ ப்ரஸித்தீ க்ருதஃ। கோசைஃ பஞ்சபி-ரேபி-ரேவ பவதீ-மேதத் ப்ரலீனமிதி ஜ்யோதிஃ ப்ரஜ்வல-துஜ்வலாத்ம-சபலாம் யோ வேத ஸப்ரஹ்மவித்॥ —க்ரோதபட்டாரகர்—லலிதாஸஹஸ்ரநாமபாஷ்யத்தில் பாஸ்கர ராயர் குறிப்பிடும் மேற்கோள்.

## आत्मस्वरूपः

शिष्य उवाच—

मिथ्यात्वेन निषिद्धेषु कोशेष्वेतेषु पंचसु ।
सर्वाभावं विना किंचिन्न पश्याम्यत्र हे गुरो ।
विज्ञेयं किमु वस्त्वस्ति स्वात्मनाऽत्र विपश्चिता
॥ २१२ ॥

### ஆத்மஸ்வரூபஃ

சிஷ்ய உவாச—

மித்யாத்வேன நிஷித்தேஷு கோசேஷ்வேதேஷு பஞ்சஸு | ஸர்வாபாவம் வினா கிஞ்சின்ந பச்யாம்யத்ர ஹே குரோ | விஜ்ஞேயம் கிமு வஸ்த்வஸ்தி ஸ்வாத்மனாऽऽத்ர விபச்சிதா || 212 ||

### ஆத்மஸ்வரூபம்

சிஷ்யன் கூறியது—

212. (ஹே குரோ) குருநாதரே! (ஏதேஷு) இந்த (பஞ்சஸு) ஐந்து (கோசேஷு) கோசங்களும் (மித்யாத்வேன) பொய்யென்று (நிஷித்தேஷு) விலக்கப் பட்டபின் (ஸர்வ-அபாவம் வினா) முற்றிலும் ஏதுமில்லை

என்பதன்றி (கிஞ்சித்) உளதாக ஒரு சிறிதையும் (அத்ர) இங்கு (ந பச்யாமி) நான் காணவில்லை. (விபச்சிதா) ஞானியால் (ஸ்வாத்மனு) தனதாத்மாவாக (விஜ்ஞேயம்) அறிதற்குரிய (கிமு வஸ்து) என்ன பொருள் (அத்ர) இங்கு (அஸ்தி) இருக்கிறது ?

முற்றிலும் ஏதும் இல்லை—இது பௌத்தர்களுடைய சூன்ய வாதம். இதற்கு மறுப்பு அடுத்து வரும் சுலோகங்களில் கூறப்படுகிறது.

**श्रीगुरुरुवाच—**

**सत्यमुक्तं त्वया विद्वन्निपुणोऽसि विचारणे ।**
**अहमादिविकारास्ते तदभावोऽयमप्यनु ॥ २१३ ॥**
**सर्वे येनानुभूयन्ते यः स्वयं नानुभूयते ।**
**तमात्मानं वेदितारं विद्धि बुद्ध्या सुसूक्ष्मया ॥२१४॥**

ஸ்ரீகுருருவாச—

ஸத்யமுக்தம் த்வயா வித்வந்நிபுணோऽஸி விசாரணே | அஹமாதிவிகாராஸ்தே ததபாவோऽயமப்யனு || 213 ||

ஸர்வே யேனுனுபூயந்தே யஃ ஸ்வயம் நானுபூயதே | தமாத்மானம் வேதிதாரம் வித்தி புத்த்யா ஸுஸூக்ஷ்மயா || 214 ||

ஸ்ரீ குரு கூறியது—

213-14. (வித்வன்) அறிவாளியே! (விசாரணே) ஆராய்ந்தறிவதில் (நிபுணஃ அஸி) நீ திறமையுள்ளவனுயிருக்கிருய். (த்வயா) உன்னுல் (உக்தம்) கூறப்பட்டது (ஸத்யம்) உண்மை. (அஹம் ஆதி விகாராஃ) நான் என்ற எண்ணம் முதலிய எல்லாத் தோற்றங்களும் (தே) உன்னிடத்தில்—நிகழ்கின்றன; (தத்

அபாவஃ) ஏதும் இல்லை என்ற (அயம் அபி) இதுவும் கூட (அனு) அதை அனுசரித்ததேயாம். (ஸர்வே) எல்லாம் (யேன) எவனுல் (அனுபூயந்தே) அனுபவிக்கப்படுகின்றனவோ, (யஃ) எவன் (ஸ்வயம்) தான் மட்டும் (ந அனுபூயதே) அனுபவிக்கப்படுவதில்லையோ (தம்) அவனை (ஸூஸூக்ஷ்மயா) மிக நுண்ணிய (புத்த்யா) புத்தியால் (வேதிதாரம் ஆத்மானம்) அறியும் ஆத்மாவாக (வித்தி) உணர்வாயாக.

ஒ. எதை ஒருவன் மனதால் உணர்வதில்லையோ ஆனுல் மனது எதனுல் உணரப்பெறும் என்று கூறுகிருர்களோ அதுவே பிரம்மம் என்று நீ அறி. எதை இது (பிரம்மம்) என்று உபாசிக்கிருர்களோ அது (பிரம்மம்) அன்று கேன. உப. 1.5.

புத்த்யா ஸூஸூக்ஷ்மயா—ஒ. த்ருச்யதே த்வக்ர்யயா புத்த்யா ஸூக்ஷ்மயா ஸூக்ஷ்மதர்சிபிஃ ॥ —கட. உப. 3.12.

**तत्साक्षिकं भवेत्तत्तद्यद्येनानुभूयते ।**
**कस्याप्यननुभूतार्थे साक्षित्वं नोपयुज्यते ॥ २१५ ॥**

தத்ஸாக்ஷிகம் பவேத்தத்தத்-யத்யத்யேனுனுபூயதே | கஸ்யாப்-யனனுபூதார்த்தே ஸாக்ஷித்வம் நோபயுஜ்யதே || 215 ||

215. (யத்யத்) எதெது (யேன) எதனுல் (அனுபூயதே) அனுபவிக்கப்படுகிறதோ (தத்தத்) அது அது (தத் ஸாக்ஷிகம்) அதை ஸாக்ஷியாகக்கொண்டதாக (பவேத்) ஆகும். (கஸ்ய அபி) எவனுக்கும் (அனனுபூத-அர்த்தே) தான் அனுபவிக்காத பொருள் விஷயத்தில் (ஸாக்ஷித்வம்) ஸாக்ஷியாயிருக்குந்தன்மை (ந உபயுஜ்யதே) பொருந்தாது.

**असौ स्वसाक्षिकोऽभावो यतः स्वेनानुभूयते ।**
**अतः परं स्वयं साक्षात्प्रत्यगात्मा न चेतरः ॥ २१६ ॥**

அஸௌ ஸ்வஸாக்ஷிகோऽபாவோ யதঃ ஸ்வேனு
னுபூயதே | அதঃ பரம் ஸ்வயம் ஸாக்ஷாத் ப்ரத்ய-
காத்மா ந சேதரঃ || 216 ||

216. (அஸௌ) இந்த (அபாவঃ) வேருென்றும் இல்லையென்பது (ஸ்வ-ஸாக்ஷிகঃ) ஆத்மாவையே ஸாக்ஷியாகக்கொண்டது; (யதঃ) ஏனெனில் (ஸ்வேன) தன்னுலேயே (அனுபூயதே) அனுபவிக்கப்படுகிறது; (அதঃ) ஆகையால் (ப்ரத்யக் ஆத்மா ஸ்வயம்) ஜீவாத்மாவாகிய தானே (பரம் ஸாக்ஷாத்) நேரில் அனுபவிக்கப்படும் பரமாத்மா (ந ச இதரঃ) இதைத்தவிர வேறு ஆத்மா இல்லை.

'யத்ஸாக்ஷாத் அபரோக்ஷாத் ப்ரஹ்ம ய ஆத்மா ஸர்வாந்தர:'
—ப்ரு. உப. 3.4.1.

जाग्रत्स्वप्न-सुषुप्तिषु स्फुटतरं योऽसौ समुज्जृम्भते
प्रत्यग्रूपतया सदाहमहमित्यन्तः-स्फुरन्नेकधा ।
नानाकारविकार-भाजिन इमान् पश्यन्नहंधीमुखा-
न्नित्यानन्द-चिदात्मना स्फुरति तं विद्धि स्वमेतं हृदि
॥ २१७ ॥

ஜாக்ரத்-ஸ்வப்ன-ஸுஷுப்திஷு ஸ்புடதரம் யோ-
ऽஸௌ ஸமுஜ்ஜ்ரும்பதே ப்ரத்யக்ரூபதயா ஸதாஹ-
மஹமித்யந்தঃ ஸ்புரன்னேகதா | நானுகார-விகார-
பாஜின இமான் பச்யன்னஹம்தீமுகாந்-நித்யானந்த-
சிதாத்மனு ஸ்புரதி தம் வித்தி ஸ்வமேதம் ஹ்ருதி ||
217 ||

217. (ஜாக்ரத்-ஸ்வப்ன-ஸுஷுப்திஷு) விழிப்பு, கனவு, உறக்கம் ஆகிய நிலைகளில் (ஸ்புடதரம்) மிகத்

தெளிவாக (ஏகதா) ஒரு தன்மையிலேயே இருந்து கொண்டு (நாநாகார - விகார - பாஜின:) பலவடிவான மாறுதல்களை யனுசரிப்பவையான (இமான்) இந்த (அஹம்-தீமுகான்) அஹங்காரம் புத்தி முதல் உள்ள கோசங்களை (பச்யன்) பார்த்துக்கொண்டு (ப்ரத்யக்ரூப தயா) அந்தராத்மவடிவாக (ஸதா) எப்பொழுதும் (அஹம் இதி) நான் என்று (அந்த: ஸ்புரன்) உள்ளே பிரகாசித்துக்கொண்டு (ய: அஸௌ) எந்த இவ் வொன்று (ஸமுஜ்ஜ்ரும்பதே) வெளிக்கிளம்புகிறதோ (நித்ய-ஆனந்த-சிதாத்மனா) அழியாத ஆனந்தமும் அறிவுமே வடிவாகவும் (ஸ்புரதி) பிரகாசிக்கின்றதோ (தம் ஏதம்) அந்த இதை (ஹ்ருதி) உனது இருதயத்தில் உறையும் (ஸ்வம்) ஆத்மாவாக (வித்தி) உணர் வாயாக.

அந்த: ஸ்புரன்னேகதா | நாநாகார-விகார-பாகின: |

—பாடபேதம்.

ஒ. பால்யாதிஷ்வபி ஜாக்ரதாதிஷு ததா ஸர்வாஸ்வவஸ் தாஸ்வபி வ்யாவ்ருத்தாஸ்வனுவர்த்தமான-மஹமித்யந்த: ஸ்புரந்தம் ஸதா | ஸ்வாத்மானம் ப்ரகடீ கரோதி பஜதாம் யோ முத்ரயா பத் ரயா தஸ்மை ஸ்ரீகுருமூர்த்தயே நம இதம் ஸ்ரீதக்ஷிணாமூர்த்தயே ||

சங்—தக்ஷிணாமூர்த்திஸ்தோத்ரம்.

**घटोदके बिम्बित-मर्कबिम्बमालोक्य मूढो रविमेव मन्यते ।**
**तथा चिदाभास-मुपाधिसंस्थं भ्रान्त्याहमित्येव जडोऽभिमन्यते**
**॥ २१८ ॥**

கடோதகே பிம்பித-மர்க்கபிம்ப - மாலோக்ய மூடோ ரவிமேவ மன்யதே | ததா சிதாபாஸ-முபாதி- ஸம்ஸ்தம் ப்ராந்த்யாஹ-மித்யேவ ஜடோऽபி மன்யதே || 218 ||

218. (கடோதகே) குடத்து நீரில் (பிம்பிதம்) பிரதி பலித்த (அர்க்கபிம்பம்) சூரியபிம்பத்தை (ஆலோக்ய) பார்த்து (மூட:) புத்தியில்லாதவன் (ரவிம் ஏவ) சூரியன் என்றே (மன்யதே) நினைக்கிருன். (ததா) அவ்வாறே (உபாதி ஸம்ஸ்தம்) புத்தியாகிய உபாதியில் தோன்றும் (சிதாபாஸம்) சித்தின் பிரதிபிம்பத்தை (ப்ராந்த்யா) மதிமயக்கத்தால் (அஹம் இதி ஏவ) நான் என்றே (ஜட:) புத்தியில்லாதவன் (அபி மன்யதே) நினைக்கிருன்.

**घटं जलं तद्गत-मर्कबिम्बं विहाय सर्वं विनिरीक्ष्यतेऽर्कः ।**
**तटस्थ एतत्त्रितयावभासकः स्वयं प्रकाशो विदुषा यथा तथा ॥ २१९ ॥**

கடம் ஜலம் தத்கத-மர்க்கபிம்பம் விஹாய ஸர்வம் விநிரீக்ஷ்யதேऽர்க்க: | தடஸ்த ஏதத்-த்ரிதயாவ பாஸக: ஸ்வயம் ப்ரகாசோ விதுஷா யதா ததா || 219 ||

219. (கடம்) குடம் (ஜலம்) நீர் (தத்கதம்) அதில் தோன்றும் (அர்க்க பிம்பம்) சூரியபிம்பம் (ஸர்வம்) இவையனைத்தையும் (விஹாய) விட்டுவிட்டு (தடஸ்த:) சமநிலையிலுள்ளவன் (ஏதத்–த்ரிதய-அவபாஸக:) இம் மூன்றையும் பிரகாசிப்பிப்பவன் (அர்க்க:) சூரியன் என்று (யதா) எங்ஙனம் (விநிரீக்ஷ்யதே) நன்ருய்க் காணப்படுகிருனே (ததா) அங்ஙனமே (விதுஷா) அறி வாளியால் (ஸ்வயம் ப்ரகாச:) ஸ்வயம் பிரகாசமான ஆத்மா காணப்படுகிறது.

திவி வீக்ஷ்யதே அர்க்க: || பா.பே.

**देहं धियं चित्प्रतिबिम्बमेवं विसृज्य बुद्धौ निहितं गुहायाम् ।**
**द्रष्टार-मात्मान-मखण्डबोधं सर्वप्रकाशं सदसद्विलक्षणम् ॥ २२० ॥**

नित्यं विभुं सर्वगतं सुसूक्ष्म-मन्तर्बहिः शून्य-मनन्यमात्मनः ।
विज्ञाय सम्यङ् निजरूपमेतत् पुमान् विपाप्मा विरजो विमृत्युः
॥ २२१ ॥

தேஹம் தியம் சித்ப்ரதிபிம்பமேவம் விஸ்ருஜ்ய புத்தௌ நிஹிதம் குஹாயாம் | த்ரஷ்டார-மாத்மான-மகண்டபோதம் ஸர்வப்ரகாசம் ஸதஸத்-விலக்ஷணம் ||
220 ||

நித்யம் விபும் ஸர்வகதம் ஸுஸூக்ஷ்ம-மந்தர்பஹிঃ சூன்ய-மனன்ய-மாத்மனঃ | விஜ்ஞாய ஸம்யங் நிஜ-ரூப-மேதத் புமான் விபாப்மா விரஜோ விம்ருத்யுঃ ||221||

220-21. (தேஹம்) உடலையும் (தியம்) புத்தியையும் (ஏவம்) அவ்வாறே (சித்ப்ரதிபிம்பம்) சித்பிரதிபிம்பத்தையும் (விஸ்ருஜ்ய) விடுத்து (புத்தௌ குஹாயாம்) புத்தியாகிற குகையில் (நிஹிதம்) மறைந்திருக்கும் (அகண்டபோதம்) பிளவுபடாத ஞானவடிவினதும் (ஸர்வப்ரகாசம்) அனைத்தையும் பிரகாசிப்பதும் (ஸத்-(அஸத்-விலக்ஷணம்) காரியத்தையும் காரணத்தையும் விட வேறானதும் (நித்தியம்) என்றுமுளதும் (விபும்) எங்கும் நிறைந்ததும் (ஸர்வகதம்) அனைத்துள்ளும் ஊடுருவியிருப்பதும் (ஸுஸூக்ஷமம்) மிகநுட்பமானதும் (அந்தர்-பஹிঃ சூன்யம்) உள்ளென்றும் வெளியென்றும் இலாததும் (ஆத்மனঃ அனன்யம்) தன்னை விட்டு வேறல்லாததும் (த்ரஷ்டாரம் ஆத்மானம்) ஸாக்ஷியும் ஆத்மாவுமாகிய (ஏதத்) இந்த (நிஜ ரூபம்) தனது உண்மை வடிவை (ஸம்யக்) நன்ருக (விஜ்ஞாய) அறிந்து (புமான்) புருஷன் (விபாப்மா) பாவமற்றவனுகவும் (விரஜঃ) மாசற்றவனுகவும் (விம்ருத்யுঃ) சாவற்றவனுகவும் ஆகிருன்.

ஒ. 'ததக்ஷரம் கார்க்கி ப்ராஹ்மணு அபிவதந்தி...அஸ்தூலமனணு அஹ்ரஸ்வம் அதீர்க்கம் அலோஹிதம் அஸ்நேஹம் அச்சாயம் அமாத்ரம் அனந்தரம் அபாஹ்யம்' —ப்ரு.உப. 3.8.8.

विशोक आनन्दघनो विपश्चित् स्वयं कुतश्चिन्न बिभेति कश्चित् ।
नान्योऽस्ति पन्था भवबन्धमुक्तेर्विना स्वतत्त्वावगमं मुमुक्षोः
॥ २२२ ॥

விசோக ஆனந்தகனே விபச்சித் ஸ்வயம் குதச்சிந்ந பிபேதி கச்சித் | நான்யோऽஸ்தி பந்தா பவபந்தமுக்தேர்-விநா ஸ்வதத்வாவகமம் முமுக்ஷோः || 222 ||

222. (விசோகः) துன்பமற்றவனுகவும் (ஆனந்தகனः) ஆனந்தமே உருக்கொண்டவனுகவும் (ஸ்வயம் விபச்சித்) தானே அனைத்தையும் காண்பவனுகவும் உள்ள (கச்சித்) எவனும் (குதச்சித்) எங்கிருந்தும் (ந பிபேதி) அஞ்சமாட்டான். (முமுக்ஷோः) முக்தியை நாடுபவனுக்கு (பவபந்தமுக்தேः) பிறவித்தளையினின்று விடுபடுவதற்கு (ஸ்வதத்வாகமம் விநா) தனது உண்மை நிலையை உணர்வதல்லாமல் (அன்யः பந்தாः) வேறு வழி (ந அஸ்தி) இல்லை.

ஒ. 'யதோ வாசோ நிவர்த்தந்தே | அப்ராப்ய மனஸா ஸஹ | ஆனந்தம் ப்ரஹ்மணே வித்வான் ந பிபேதி கதாசனேதி | எதினின்று எட்டிப்பிடிக்க முடியாமல் வாய்ச் சொற்கள் திரும்பிவிடுகின்றனவோ, மனத்துடன் கூட, அந்த பிரம்மானந்த நிலையை அறிந்தவன் ஒருபோதும் பயப்படமாட்டான். —தை.உப. 2.4

'நாமார்க்குங் குடியல்லோம் நமனையஞ்சோம்' —அப்பர்.

ब्रह्माभिन्नत्व-विज्ञानं भवमोक्षस्य कारणम् ।
येनाद्वितीय-मानन्दं ब्रह्म सम्पद्यते बुधैः ॥ २२३ ॥

ப்ரஹ்மாபின்னத்வ-விஜ்ஞானம் பவமோக்ஷஸ்ய காரணம் | யேனத்விதீய-மானந்தம் ப்ரஹ்ம ஸம்பத்யதே புதை: || 223 ||

223. (ப்ரஹ்ம-அபின்னத்வ-விஜ்ஞானம்) தான் பிரம்மத்தைவிட வேறன்று என்ற தெளிந்த அறிவு (பவ மோக்ஷஸ்ய) பிறவித்தளையினின்று விடுபடுதற்கு (காரணம்) காரணமாகும்; (யேன) எதனால் (புதை:) புத்திமான்களால் (அத்விதீயம்) இரண்டற்றதும் (ஆனந்தம்) ஆனந்தமே உருக்கொண்டதுமான (ப்ரஹ்ம) பிரம்மம் (ஸம்பத்யதே) அடையப்படுகிறதோ— அந்த அறிவு.

ஒ. 'யதா ஹ்யேவைஷ ஏதஸ்மின்னுதர-மந்தரம் குருதே அத தஸ்ய பயம் பவதி |' இப்பரம் பொருளில் எப்பொழுது இவன் ஒரு சிறிதேனும் பேதத்தைச் செய்கிருனே அப்பொழுதே இவனுக்கு (ஜனன மரண ஸம்ஸார) பயம் ஏற்படுகிறது. —தை.உப. 2.7.

ब्रह्मभूतस्तु संसृत्यै विद्वान्नावर्तते पुनः ।
विज्ञातव्य-मतः सम्यग्ब्रह्माभिन्नत्व-मात्मनः ॥ २२४ ॥

ப்ரஹ்மபூதஸ்து ஸம்ஸ்ருத்யை வித்வாங்நாவர்த்தே புன: | விஜ்ஞாதவ்ய-மத: ஸம்யக் ப்ரஹ்மாபின்னத்வ-மாத்மன: || 224 ||

224. (ப்ரஹ்மபூத: து) பிரம்மமேயாகிவிட்ட (வித்வான்) ஞானி (ஸம்ஸ்ருத்யை) பிறவிச்சுழலுக்கு (புன:) மீண்டும் (ந ஆவர்த்ததே) வரமாட்டான். (அத:) ஆகையால் (ஆத்மன:) ஆத்மாவிற்கு (ப்ரஹ்ம-அபின்னத்வம்) பிரம்மத்திடமிருந்து வேறுபடாத தன்மை (ஸம்யக்) நன்ருக (விஜ்ஞாதவ்யம்) அறியப்படவேண்டும்.

ஒ. 'ப்ரஹ்மபூதஃ ப்ரஸன்னுத்மா ந சோசதி ந காங்க்ஷதி' பிரம்மத்தில் நிஷ்டைகூடிய தெளிந்த மனமுடையவன் துக்கிப்பதில்லை, ஆசைப்படுவதில்லை. —கீ. 18.57.

सत्यं ज्ञान-मनन्तं ब्रह्म विशुद्धं परं स्वतः सिद्धम् ।
नित्यानन्दैकरसं प्रत्यगभिन्नं निरन्तरं जयति ॥२२५॥

ஸத்யம் ஜ்ஞான-மனந்தம் ப்ரஹ்ம விசுத்தம் பரம் ஸ்வதஃ ஸித்தம் | நித்யானந்தைகரஸம் ப்ரத்யகபின்னம் நிரந்தரம் ஜயதி || 225 ||

225. (ஸத்யம்) என்றுமுளதும் (ஜ்ஞானம்) அறிவே வடிவாகியதும் (அனந்தம்) அளவுகடந்ததும் (விசுத்தம்) பரிசுத்தமானதும் (பரம்) மாயைக்கப்பாற்பட்டதும் (ஸ்வதஃ ஸித்தம்) தானே விளங்குவதும் (நித்ய-ஆனந்த-ஏக-ரஸம்) என்றும் இன்பமே உருக்கொண்டதும் (ப்ரத்யக்-அபின்னம்) ஜீவாத்மாவினின்று வேறல்லாததும் ஆகிய (ப்ரஹ்ம) பிரம்மம் (நிரந்தரம்) இடைவிடாது (ஜயதி) வெற்றியுடன் விளங்குகிறது.

ஒ. 'ஸத்யம் ஜ்ஞான-மனந்தம் ப்ரஹ்ம | யோ வேத நிஹிதம் குஹாயாம் பரமே வ்யோமன் | ஸோऽச்னுதே ஸர்வான் காமான் ஸஹ |' பிரம்மம் ஸத்யம்-ஞானம்-அனந்தம். இருதய குகையில் பரமாகாசத்தில் இருக்கும் இதை எவன் அறிகிருனே அவன் எல்லா ஆசைகளையும் அனுபவிக்கிருன். (விஷயானந்த மெல்லாம் அதில் ஒரு திவலை). —தை.உப. 2.1.

## सर्वं ब्रह्मैव

सदिदं परमाद्वैतं स्वस्मादन्यस्य वस्तुनोऽभावात् ।
न ह्यन्यदस्ति किंचित् सम्यक् परमार्थतत्त्व-बोधदशायाम्
॥ २२६ ॥

**ஸர்வம் ப்ரஹ்மைவ**

ஸதிதம் பரமாத்வைதம் ஸ்வ ஸ் மா-த ன் ய ஸ் ய
வஸ்துனோऽபாவாத் | ந ஹ்யன்யதஸ்தி கி ஞ் சி த்
ஸம்யக் பரமார்த்த-தத்வ-போததசாயாம் || 226 ||

**எல்லாம் பிரம்மமே**

226. (ஸ்வஸ்மாத் அன்யஸ்ய) தனக்கு வேறான (வஸ்துனః) பொருளுக்கு (அபாவாத்) இருப்பின்மையால் (பரம அத்வைதம்) உயர்ந்த அத்வைதமாகிய (இதம்) இதுவே (ஸத்) உண்மை. (ஸம்யக்) தெளிவான (பரமார்த்த-தத்வ) உயர்ந்த தத்துவத்தின் (போத தசாயாம்) அனுபவ நிலையில் (அன்யத் கி ஞ் சி த்) பிரிதாக ஒரு சிறிதும் (நஹி அஸ்தி) இல்லவே இல்லை.

ஸம்யக்-பரமார்த்த-தத்வ-போதேஹி —பாடபேதம்.

ஒ. 'யத்ர நான்யத் பச்யதி நான்யச் ச்ருணோதி நான்யத் விஜாநாதி ஸ பூமா' —சா.உப. 7.24.1.

**यदिदं सकलं विश्वं नानारूपं प्रतीत-मज्ञानात् ।**
**तत्सर्वं ब्रह्मैव प्रत्यस्ताशेष-भावनादोषम् ॥ २२७ ॥**

யதிதம் ஸகலம் விச்வம் நானாரூபம் ப்ரதீத-மஜ்ஞானாத் | தத்ஸர்வம் ப்ரஹ்மைவ ப்ரத்யஸ்தாசேஷபாவனாதோஷம் || 227 ||

227. (அஜ்ஞானாத்) அறியாமையால் (நானா ரூபம் ப்ரதீதம்) பலவடிவாய்க் காணப்படும் (இதம்) இந்த (ஸகலம் வி ச் வ ம்) உலகனைத்துமாகிய (யத்) எது உண்டோ (தத் ஸர்வம்) அது எல்லாம் (ப்ரத்யஸ்த-அசேஷ-பாவனா-தோஷம்) கற்பனையால் ஏற்பட்ட தோஷமனைத்தும் அறவே நீங்கிய (ப் ர ஹ் ம ஏ வ) பிரம்மமே.

ஒ. 'ஸர்வம் கல்விதம் ப்ரஹ்ம!'

'ஸர்வகர்மா ஸர்வகாமঃ ஸர்வகந்தঃ ஸர்வமித-மப்யாத்தோ ऽவாக்யனாதரঃ ஏஷ ம ஆத்மா'

இது எல்லாம் பிரம்மமே. எல்லாக்கர்மங்களும் எல்லா ஆசைகளும் எல்லா வாஸனைகளும் எல்லா ருசிகளும் தானேயாகி இவ்வுலகனைத்தையும் வியாபித்து நிற்பதாயும் வாக்கு முதலிய இந்திரியங்கள் இல்லாததாயும் அடையாத ஒன்றை அடைந்ததாலுண்டாகும் பூரிப்பு இல்லாததாயும் உள்ள அந்த பிரம்மமே எனது ஆத்மா.

—சா.உப. 7.14.3-4.

**मृत्कार्य-भूतोऽपि मृदो न भिन्नः**
**कुम्भोऽस्ति सर्वत्र तु मृत्स्वरूपात् ।**
**न कुम्भरूपं पृथगस्ति कुम्भः**
**कुतो मृषा कल्पित-नाम-मात्रः ॥ २२८ ॥**

ம்ருத்கார்யபூதோऽபி ம்ருதோ ந பின்னঃ கும்-போऽஸ்தி ஸர்வத்ர து ம்ருத்ஸ்வரூபாத் | ந கும்பரூபம் ப்ருதகஸ்தி கும்பঃ குதோ ம்ருஷா கல்பித-நாம-மாத்ரঃ || 228 ||

228. (ம்ருத்-கார்ய பூதঃ அபி) மண்ணினால் செய்யப்பட்டதாயினும் (கும்பঃ) குடம் (ம்ருதঃ) மண்ணினின்று (பின்னঃ) வேறுபட்டதாக (ந அஸ்தி) இருக்கவில்லை; (து) ஏனெனில் (ஸர்வத்ர) முழுதும் (ம்ருத் ஸ்வரூபாத்) மண்ணின் வடிவாகமே இருப்பதால்; (கும்ப ரூபம்) குடத்தின் ரூபம் (ப்ருதக்) மண்ணினின்றுவேறாக (ந அஸ்தி) இல்லை; (கும்பঃ குதঃ) குடம் எங்குளது? (ம்ருஷா) பொய்யாக (கல்பித) கற்பனை செய்யப்பட்ட (நாம மாத்ரঃ) பெயரளவில்தான் உளது.

**केनापि मृद्भिन्नतया स्वरूपं घटस्य सन्दर्शयितुं न शक्यते ।**
**अतो घटः कल्पित एव मोहान्मृदेव सत्यं परमार्थ-भूतम् ॥**
**॥ २२९ ॥**

கேனுபி ம்ருத்பின்னதயா ஸ்வரூபம் கடஸ்ய ஸந்தர்சயிதும் ந சக்யதே | அதோ கட: கல்பித ஏவ மோஹான் ம்ருதேவ ஸத்யம் பரமார்த்த-பூதம் || 229 ||

229. (கேன அபி) எவராலும் (ம்ருத்பின்னதயா) மண்ணினின்றும் பிரித்து (கடஸ்ய) குடத்தின் (ஸ்வரூபம்) ரூபத்தை மட்டும் (ஸந்தர்சயிதும்) காட்டுவதற்கு (ந சக்யதே) இயலாது. (அத:) ஆகையால் (கட:) குடமானது (மோஹாத்) மதிமயக்கத்தால் (கல்பித: ஏவ) கற்பனை செய்யப்பட்டதேயாம். (ம்ருத் ஏவ) மண் ஒன்றே (பரமார்த்த பூதம்) உயர்ந்த நிலையிலுள்ள (ஸத்யம்) உண்மை.

ஓ. யதா ஸோம்யைகேன ம்ருத்பிண்டேன ஸர்வம் ம்ருன்மயம் விஜ்ஞாதஃ ஸ்யாத் வாசாரம்பணம் விகாரோ நாமதேயம் ம்ருத்திகேத்யேவ ஸத்யம். —சா. உப. 6.1.4.

**सद्ब्रह्मकार्यं सकलं सदैव तन्मात्र-मेतन्न ततोऽन्यदस्ति ।**
**अस्तीति यो वक्ति न तस्य मोहो विनिर्गतो निद्रितवत्प्रजल्पः**
**॥ २३० ॥**

ஸத்ப்ரஹ்மகார்யம் ஸகலம் ஸதைவ தன்மாத்ர-மேதந்ந ததோऽன்யதஸ்தி | அஸ்தீதி யோ வக்தி ந தஸ்ய மோஹோ விநிர்கதோ நித்ரிதவத் ப்ரஜல்ப: || 230 ||

230. (ஸகலம்) அனைத்தும் (ஸதா) எக்காலத்தும் (ஸத்-ப்ரஹ்ம-கார்யம் ஏவ) ஸத்தாகிய பிரம்மத்

தினின்று தோன்றியதே ; (ஏதத்) இது (தத்-மாத்ரம்) அதுவாகவே உளது ; (ததः) அதினின்று (அன்யத்) பிரிதாக (ந அஸ்தி) இல்லை. (யः) எவன் (அஸ்தி இதி) அப்படி இருக்கிறதென்று (வக்தி) கூறுகிறனே (தஸ்ய) அவனுடைய (மோஹः) மதிமயக்கம் (ந விநிர்க்கதः) விலகவில்லை ; (நித்ரிதவத்-) உறங்குபவனுடையது போன்ற (ப்ரஜல்பः) உளறலைப் போன்றது அது.

ब्रह्मैवेदं विश्वमित्येव वाणी श्रौती ब्रूतेऽथर्वनिष्ठा वरिष्ठा ।
तस्मादेतद् ब्रह्ममात्रं हि विश्वं नाधिष्ठानाद्भिन्नताऽरोपितस्य
॥ २३१ ॥

ப்ரஹ்மைவேதம் விச்வமித்யேவ வாணீ ச்ரௌதீ ப்ரூதேऽதர்வநிஷ்ட்டா வரிஷ்ட்டா | தஸ்மாதேதத் ப்ரஹ்மமாத்ரம் ஹி விச்வம் நாதிஷ்ட்டானாத்-பின்னதா-ऽரோபிதஸ்ய || 231 ||

231. (அதர்வ-நிஷ்டா) அதர்வத்தில் நிலைபெற்றதும் (வரிஷ்டா) சிறந்ததுமான (ச்ரௌதீ-வாணீ) வேத வாக்கு (ப்ரஹ்ம ஏவ) பிரம்மமே (இதம் விச்வம்) இவ்வுலகு (இதி ஏவ) என்றே (ப்ரூதே) கூறுகிறது. (தஸ்மாத்) ஆகையால் (ஏதத் விச்வம்) இவ்வுலகு (ப்ரஹ்ம மாத்ரம் ஹி) நிச்சயமாக பிரம்மம் அன்றி வேறன்று. (ஆரோபிதஸ்ய) கற்பனை செய்யப்பட்ட ஒன்றுக்கு (அதிஷ்டானாத்) அதற்கடிப்படையான பொருளினின்று (பின்னதா) வேற்றுமை (ந) இல்லை.

ஒ. ப்ரஹ்மைவேத-மம்ருதம் புரஸ்தாத் ப்ரஹ்ம பச்சாத் ப்ரஹ்ம தக்ஷிண தச்சோத்தரேண | அதச்சோர்த்வஞ்ச ப்ரஸ்ருதம் ப்ரஹ்மைவேதம் விச்வமிதம் வரிஷ்டம் || —மு.உப. 2.2.11

सत्यं यदि स्याज्जगदेत-दात्मनोऽनन्तत्वहानि-र्निगमाप्रमाणता ।
असत्यवादित्व-मपीशितुः स्यान्नैतत्त्रयं साधु हितं महात्मनाम्
॥ २३२ ॥

ஸத்யம் யதி ஸ்யாஜ்-ஜகதேத-தாத்மனோऽனந்தத்வ-ஹானிர்-நிகமாப்ரமாணதா | அஸத்யவாதித்வ-மபீசிதுঃ ஸ்யாந் நைதத்-த்ரயம் ஸாது ஹிதம் மஹாத்மனும் || 232 ||

232. (ஏதத்) இந்த (ஜகத்) உலகு (ஸத்யம்) உண்மையாக (ஸ்யாத் யதி) இருக்குமேயாஞல் (ஆத்மனঃ) ஆத்மாவின் (அனந்தத்வஹானிঃ) அளவற்ற தன்மைக்கு அழிவு ஏற்படும்; (நிகம-அப்ரமாணதா) வேதமும் பிரமாணமில்லாமல் போகும்; (ஈசிதுঃ) ஈசுவரனுக்கு (அஸத்யவாதித்வம்) பொய் பேசிய குற்றம் (ஸ்யாத்) ஏற்படும்; (மஹாத்மனும்) மஹாத்மாக்களுக்கு (ஏதத் த்ரயம்) இம்மூன்றும் (ந ஸாது ஹிதம்) நல்லதெனச் சம்மதிக்கக் கூடியவையாகா.

ईश्वरो वस्तुतत्त्वज्ञो न चाहं तेष्ववस्थितः ।
न च मत्स्थानि भूतानीत्येवमेव व्यचीक्लृपत ॥ २३३ ॥

ஈச்வரோ வஸ்துதத்வஜ்ஞோ ந சாஹம் தேஷ்வ-வஸ்திதঃ | ந ச மத்ஸ்தானி பூதானீத்யேவமேவ வ்ய-சீக்லுபத் || 233 ||

233. (வஸ்துதத்வஜ்ஞঃ) பொருள்களின் உண்மை உணர்ந்தவரான (ஈச்வரঃ) பகவான் '(அஹம்) நான் (தேஷு) அவற்றினிடம் (ந ச அவஸ்திதঃ) இருப்புடையவனும் அல்லன்; (ச) மேலும் (பூதானி) பொருள்கள் (ந மத்ஸ்தானி) என்னிடம் இருப்புடையனவும் அல்ல'

(இதி) என்று (ஏவமேவ) இங்ஙனமே (வ்யசீக்லுபத்) கூறியுள்ளார்.

ஒ. 'மயா ததமிதம் ஸர்வம் ஜகதவ்யக்தமூர்த்தினு | மத்ஸ்தானி ஸர்வபூதானி ந சாஹம் தேஷ்வவஸ்தித꞉ | ந ச மத்ஸ்தானி பூதானி பச்ய மே யோகமைச்வரம் || —கீ. 9. 4-5.

**यदि सत्यं भवेद्विश्वं सुषुप्तावुपलभ्यताम् ।**
**यन्नोपलभ्यते किंचिदतोऽसत्स्वप्नवन्मृषा ॥ २३४ ॥**

யதி ஸத்யம் பவேத்விச்வம் ஸுஷுப்தாவுபலப்யதாம் | யங்நோபலப்யதே கிஞ்சிததோ஽ஸத் ஸ்வப்னவன் ம்ருஷா || 234 ||

234. (விச்வம்) உலகம் (ஸத்யம்) உண்மையாக (பவேத் யதி) இருக்குமேயானுல் (ஸுஷுப்தௌ) உறக்க நிலையிலும் (உபலப்யதாம்) காணப்படுவதாயிருக்கட்டும். (யத் ந உபலப்யதே கிஞ்சித்) கொஞ்சங்கூடக் காணவில்லையே (அத꞉) அக்காரணம் பற்றி (அஸத்) அது இல்லாததேயாகும்; (ஸ்வப்னவத்) கனவைப் போல் (ம்ருஷா) பொய்யே.

**अतः पृथङ् नास्ति जगत्परात्मनः**
**पृथक् प्रतीतिस्तु मृषा गुणादिवत् ।**
**आरोपितस्यास्ति किमर्थवत्ता-**
**धिष्ठान-माभाति तथा भ्रमेण ॥ २३५ ॥**

அத꞉ ப்ருதங் நாஸ்தி ஜகத் பராத்மன꞉ ப்ருதக் ப்ரதீதிஸ்து ம்ருஷா குணுதிவத் | ஆரோபிதஸ்யாஸ்தி கிமர்த்தவத்தா-திஷ்டான-மாபாதி ததா ப்ரமேண ||235||

235. (அத꞉) ஆகையால் (பராத்மன꞉) பரமாத்மாவினின்று (ப்ருதக்) தனியாக (ஜகத்) உலகம் (நாஸ்தி)

இல்லை. (ப்ருதக் ப்ரதீதிః து) தனியாகக் காணப்படு கிறதே எனின் (குண-ஆதிவத்) அது குணம் முதலிய வற்றைப்போல்—அதாவது ஆகாயம் நீல நிறமாய்த் தோன்றுவதுபோல்—ஆரோபிதஸ்ய) கற்பனை செய் யப்பட்டதற்கு (அர்த்தவத்தா) உண்மையான இருப்பு (அஸ்தி கிம்) இருக்கின்றதா என்ன? (அதிஷ்டானம்) அடிப்படையாயுள்ள உண்மைப் பொருளே (ப்ரமேண) மதிமயக்கத்தால் (ததா) அவ்வாறு (ஆபாதி) தோற்ற மளிக்கிறது.

**भ्रान्तस्य यद्यद्भ्रमतः प्रतीतं ब्रह्मैव तत्तद्रजतं हि शुक्तिः ।**
**इदन्तया ब्रह्म सदैव रूप्यते त्वारोपितं ब्रह्मणि नाममात्रम्**
**॥ २३६ ॥**

ப்ராந்தஸ்ய யத்யத் ப்ரமதః ப்ரதீதம் ப்ரஹ்மைவ தத்தத் ரஜதம் ஹி சுக்திః | இதந்தயா ப்ரஹ்ம ஸதைவ ரூப்யதே த்வாரோபிதம் ப்ரஹ்மணி நாமமாத்ரம் || 236||

236. (ப்ராந்தஸ்ய) மதிமயங்கியவனுக்கு (யத் யத்) எது எது (ப்ரமதః) மயக்கத்தினால்-வேறுபட்டு (ப்ரதீ-தம்) தோன்றிற்றோ (தத் தத்) அது எல்லாம் (ப்ரஹ்ம ஏவ) பிரம்மமே. (ரஜதம்) வெள்ளியாகத் தோற்றமளித் தது (சுக்திః ஹி) உண்மையில் சிப்பி தானே. (இதந் தயா) இது இது எனக்காணப்படும் உலக வடிவில் (ப்ரஹ்ம) பிரம்மமே (ஸதா ஏவ) எக்காலத்தும் (ரூப்யதே) விளக்கப்படுகிறது. (ப்ரஹ்மணி) பிரம்மத்தி டம் (ஆரோபிதம் து) கல்பிக்கப்பட்ட உலகமோ எனின் (நாமமாத்ரம்) பெயரளவில் தான்.

நாமமாத்ரம் ஒ. 'வாசாரம்பணம் விகாரோ நாமதேயம் ம்ருத்திகேத்யேவஸத்யம்' (பானைசட்டி என்ற) வேறுபாடெல்லாம் பேசுமிடத்துப் பெயரளவிலேயே; மண் ஒன்றே உண்மை. —சா. உப. 6.1.4.

## ब्रह्मनिरूपणम्

अतः परं ब्रह्म सदद्वितीयं विशुद्ध-विज्ञानघनं निरंजनम् ।
प्रशान्त-माद्यन्त-विहीन-मक्रियं निरन्तरानन्दरस-स्वरूपम्
॥ २३७ ॥

निरस्त-मायाकृत-सर्वभेदं नित्यं सुखं निष्कल-मप्रमेयं ।
अरूप-मव्यक्त-मनाख्य-मव्ययं ज्योतिःस्वयं किंचिदिदंचकास्ति
॥ २३८ ॥

### ப்ரஹ்மநிரூபணம்

அதஃ பரம் ப்ரஹ்ம ஸதத்விதீயம் விசுத்த-விஜ்ஞானகனம் நிரஞ்ஜனம் | ப்ரசாந்த-மாத்யந்த-விஹீன-மக்ரியம் நிரந்தரானந்தரஸ-ஸ்வரூபம் || 237 ||

நிரஸ்த-மாயாக்ருத-ஸர்வபேதம் நித்யம் ஸுகம் நிஷ்கல-மப்ரமேயம் | அரூப-மவ்யக்த-மனுக்ய-மவ்யயம் ஜ்யோதிஃ ஸ்வயம் கிஞ்சிதிதம் சகாஸ்தி || 238 ||

### பிரம்மநிரூபணம்

237-238. (அதஃ) ஆகையால் (கிஞ்சித்) சிறிதளவேனும் (இதம்) இவ்வுலகாக எது (சகாஸ்தி) பிரகாசிக்கிறதோ—அது—(ஸத்) என்று முளதாயும் (அத்விதீயம்) இரண்டற்றதாயும் (விசுத்தவிஜ்ஞான-கனம்) பரிசுத்தமான ஞானமே உருக்கொண்டதாயும் (நிரஞ்ஜனம்) மாசற்றதாயும் (ப்ரசாந்தம்) அமைதி வடிவினதாயும் (ஆத்யந்த-விஹீனம்) அடிமுடியற்றதாயும் (அக்ரியம்) செயலற்றதாயும் (நிரந்தர-ஆனந்த ரஸ-ஸ்வரூபம்) எல்லையிலாத ஆனந்தரஸவடிவினதாயும் (நிரஸ்த-மாயாக்ருத-ஸர்வபேதம்) மாயையாலேற்பட்ட வேற்றுமைகள் முற்றும் நீங்கியதாயும் (நித்யம்) அழி

வற்றதாயும் (ஸுகம்) இன்பவடிவினதாயும் (நிஷ்கலம்) பிளவுபடாததாயும் (அப்ரமேயம்) அளவு கடந்ததாயும் (அரூபம்) உருவற்றதாயும் (அவ்யக்தம்) வெளிப்படையாய்த்தோன்ருததாயும் (அனுக்யம்) சொல்லிற் கெட்டாததாயும் (அவ்யயம்) மாறுபடாததாயும் (ஜ்யோதிః ஸ்வயம்) தானே பிரகாசிப்பதாயும் உள்ள (பரம் ப்ரஹ்ம) பரப்பிரம்மமே.

**ज्ञातृ-ज्ञेय-ज्ञान-शून्य-मनन्तं निर्विकल्पकम् ।**
**केवलाखण्ड-चिन्मात्रं परं तत्त्वं विदुर्बुधाः ॥ २३९ ॥**

ஜ்ஞாத்ரு-ஜ்ஞேய-ஜ்ஞான-சூன்ய-மனந்தம் நிர்-விகல்பகம் | கேவலாகண்ட-சின்மாத்ரம் பரம் தத்வம் விதுர்-புதாః || 239 ||

239. (ஜ்ஞாத்ரு-ஜ்ஞேய-ஜ்ஞான-சூன்யம்) அறிபவன், அறியப்படுவது, அறிவது என்ற வேற்றுமை இலாததாயும் (அனந்தம்) அளவு கடந்ததாயும் (நிர்விகல்பகம்) கற்பனைக்கப்பாற்பட்டதாயும் (கேவல-அகண்ட-சின்மாத்ரம்) பிளவுபடாத தனியறிவின் வடிவுமாத்திரமாகவும் உள்ள (பரம் தத்வம்) அந்தப் பரதத்துவத்தை (புதாః) ஞானிகள் (விதுః) உணர்கிருர்கள்.

ஒ. நித்தியமாய் நிர்மலமாய் நிட்களமாய் நிராமயமாய் நிறைவாய் நீங்காச் சுத்தமுமாய்த் தூரமுமாய்ச் சமீபமுமாய்த் துரிய நிறை சுடராய் எல்லாம் வைத்திருந்த தாரகமாயானந்த மயமாகி மனவாக் கெட்டாச் சித்துருவாய் நின்றவொன்றைச் சுகாரம்பப் பெருவெளியைச் சிந்தை செய்வாம். —தாயுமானவர்.

**अहेय-मनुपादेयं मनोवाचामगोचरम् ।**
**अप्रमेय-मनाद्यन्तं ब्रह्म पूर्णं महन्महः ॥ २४० ॥**

அஹேய - மனுபாதேயம் மனோவாசாமகோசரம் |
அப்ரமேய - மனுத்யந்தம் ப்ரஹ்ம பூர்ணம் மஹன் மஹ: || 240 ||

240. (ப்ரஹ்ம) அந்த பிரம்மம் (அஹேயம்) தள்ளக்கூடியதன்று, (அனுபாதேயம்) கொள்ளக் கூடியதன்று, (மனோ-வாசாம் அகோசரம்) மனதிற்கும் வாக்கிற்கும் எட்டாதது, (அப்ரமேயம்) அளவிட முடியாதது, (அனுத்யந்தம்) தொடக்கமும் முடிவு மில்லாதது (பூர்ணம்) எங்கும் நிறைந்தது (மஹத்) பெரியது (மஹ:) ஒளிவடிவானது.

**பூர்ணம் அஹம் மஹ:**—நானெனப் பிரகாசிக்கும் பரிபூர்ணப் பேரொளி —பாடபேதம்.

ஓ. பூர்ண-மத: பூர்ணமிதம் பூர்ணாத் பூர்ணமுதச்யதே |
பூர்ணஸ்ய பூர்ணமாதாய பூர்ணமேவாவசிஷ்யதே ||

சுக்லயஜுஸ் —சாந்திபாடம்.

## महावाक्यविचारः

तत्त्वं-पदाभ्या-मभिधीयमानयो-
ब्रह्मात्मनोः शोधितयो-र्यदीत्थम् ।
श्रुत्या तयोस्तत्त्वमसीति सम्य-
गेकत्वमेव प्रतिपाद्यते मुहुः ॥ २४१ ॥

ऐक्यं तयो-र्लक्षितयो-र्न वाच्ययो-
र्निगद्यतेऽन्योन्य-विरुद्ध-धर्मिणोः ।
खद्योत-भान्वोरिव राजभृत्ययोः
कूपाम्बुराश्योः परमाणुमेर्वोः ॥ २४२ ॥

**மஹாவாக்ய விசாரः**

தத்-த்வம்-பதாப்யா-மபிதீயமானயோர் - ப்ரஹ்மாத்மனோः சோதிதயோர்-யதீத்தம் | ச்ருத்யா தயோஸ்-தத்-த்வமஸீதி ஸம்ய-கேகத்வ-மேவ ப்ரதிபாத்யதே முஹுः || 241 ||

ஐக்யம் தயோர் - லக்ஷிதயோர் - ந வாச்யயோர்-நிகத்யதேऽன்யோன்ய-விருத்த-தர்மிணோः | கத்யோத-பான்வோரிவ ராஜப்ருத்யயோः கூபாம்புராச்யோः பரமாணுமேர்வோः || 242 ||

**மஹா வாக்ய ஆராய்ச்சி**

241-42. (சோதிதயோः) உபாதிகள் நீங்கப்பெற்ற (தத்-த்வம்-பதாப்யாம்) 'தத்' 'த்வம்'—அது நீ—என்ற சொற்களால் (அபிதீயமானயோः) சுட்டிக்காட்டப் பட்ட (ப்ரஹ்ம-ஆத்மனோः) பிரம்மமும் ஜீவனுமாகிய (தயோः) இவ்விரண்டிற்கும் (ஏகத்வம் ஏவ) ஒற்றுமை யே (ச்ருத்யா) வேதத்தால் (தத்வமஸி இதி) தத்-த்வமஸி எனும் வாக்கியத்தால் (ஸம்யக்) சிறப்பாக (யத் இத்தம்) எது இங்ஙனம் (முஹுः) அடிக்கடி பல தடவை (ப்ரதி பாத்யதே) விளக்கப்படுகிறதோ—(ஐக்யம்) அந்த ஒற்றுமையானது (தயோः) அவற்றின் (லக்ஷிதயோः) அகப்பொருளான லக்ஷ்யார்த்தத்தைப் பற்றியவை; (அன்யோன்ய விருத்த தர்மிணோः) ஒன்றுக்கொன்று பொருந்தாத இயல்புடைய (வாச்யோः) வார்த்தைக ளின் புறக்கருத்தைப்பற்றி (நிகத்யதே) சொல்லப்பட வில்லை—அப்புறக்கருத்து (கத்யோதபான்வோः) மின் மினிக்கும் சூரியனுக்கும் (ராஜப்ருத்யயோः) அரசனுக் கும் வேலைக்காரனுக்கும் (கூப அம்புராசயோः) கிணற் றுக்கும் கடலுக்கும் (பரமாணுமேர்வோः) அணுவுக்கும் மேருமலைக்கும் (இவ) போல்—வேறுபட்டதாகும்.

**तयो-र्विरोधोऽय-मुपाधिकल्पितो**
**न वास्तवः कश्चिदुपाधिरेषः ।**
**ईशस्य माया महदादिकारणं**
**जीवस्य कार्यं शृणु पंचकोशम् ॥ २४३ ॥**

தயோர் - விரோதோऽய - முபாதி - கல்பிதோ ந வாஸ்தவஃ கச்சிதுபாதிரேஷஃ | ஈசஸ்ய மாயா மஹதாதி காரணம் ஜீவஸ்ய கார்யம் ச்ருணு பஞ்சகோசம் || 243 ||

243. (தயோஃ) அவற்றினிடை (அயம்) இந்த (விரோதஃ) முரண்பாடு (உபாதிகல்பிதஃ) உபாதியால் தோற்றுவிக்கப்பட்டது; (ந வாஸ்த்வஃ கச்சித்) உண்மையான ஒன்றன்று. (ஏஷஃ) இந்த (உபாதிஃ) உபாதியானது (ஈசஸ்ய) ஈசுவரனைக்கருதுமிடத்து (மாயா) மாயை எனப்படுவதும் (மஹத் ஆதி காரணம்) மஹத் முதலியவற்றிற்குக் காரணமும் ஆகும். (ஜீவஸ்ய) ஜீவனைக்கருதுமிடத்து (ச்ருணு) கேட்பாயாக; (கார்யம்) கார்ய ரூபமான (பஞ்ச கோசம்) ஐந்து கோசமாகும்.

**एतावुपाधी परजीवयोस्तयोः**
**सम्यङ्ग निरासे न परो न जीवः ।**
**राज्यं नरेन्द्रस्य भटस्य खेटक-**
**स्तयोरपोहे न भटो न राजा ॥ २४४ ॥**

ஏதாவுபாதீ பரஜீவயோஸ்தயோஃ ஸம்யங் நிராஸே ந பரோ ந ஜீவஃ | ராஜ்யம் நரேந்த்ரஸ்ய படஸ்ய கேடகஸ்-தயோரபோஹே ந படோ ந ராஜா || 244 ||

244. (ஏதௌ) இவ்விரண்டு (உபாதீ) உபாதிகளும் (தயோஃ பரஜீவயோஃ) அப்படிப்பட்ட பரமாத்ம

ஜீவாத்மாக்களிடை (ஸம்யக்) அறவே (நிராஸே) நீக்கப்பட்டபொழுது (ந பரஃ) பரமாத்மாவுமில்லை (ந ஜீவஃ) ஜீவாத்மாவுமில்லை. (நரேந்த்ரஸ்ய) அரசனுடைய (ராஜ்யம்) அரசும் (படஸ்ய) படையாளின் (கேடகஃ) கேடயமும் (தயோஃ) அவர்களிடமிருந்து (அபோஹே) நீங்கியபின் (ந படஃ) படையாளும் இல்லை (ந ராஜா) அரசனுமில்லை.

ஒ. 'நேஹ நானாஸ்தி கிஞ்சன' இங்கு சிறிதும் வேற்றுமை இல்லை. கட. உப. 4.11

अथात आदेश इति श्रुतिः स्वयं
निषेधति ब्रह्मणि कल्पितं द्वयम् ।
श्रुतिप्रमाणानुगृहीत-बोधा-
त्तयो-र्निरासः करणीय एव ॥ २४५ ॥

அதாத ஆதேச இதி ச்ருதிஃ ஸ்வயம் நிஷேததி ப்ரஹ்மணி கல்பிதம் த்வயம் | ச்ருதிப்ரமாணானுக்ருஹீத-போதாத் தயோர்-நிராஸஃ கரணீய ஏவ || 245 ||

245. (அதாத ஆதேசஃ இதி) இனி இங்ஙனம் உபதேசம் என்று (ச்ருதிஃ) வேதம் (ஸ்வயம்) தானே (ப்ரஹ்மணி) ப்ரம்மத்தினிடம் (கல்பிதம்) கற்பனை செய்யப்பட்ட (த்வயம்) துவைதத்தை (நிஷேததி) தள்ளுகிறது. (ச்ருதி-ப்ரமாண-அனுக்ருஹீத) சுருதிப்பிரமாணத்தை ஒட்டிய (போதாத்) அறிவால் (தயோஃ) மேலே கூறிய உபாதிகளின் (நிராஸஃ) நீக்கம் (கரணீயஃ ஏவ) செய்தே ஆகவேண்டும்.

ச்ருதிப்ரமாணானுக்ருஹீத - யுக்த்யா | கரணீய இத்தம் |

—பா. பே.

ஒ. அதாத ஆதேசோ நேதி நேதி நஹ்யேதஸ்மாதிதி நேத்யன்யத்பரமஸ்த்யத நாமதேயஂ ஸத்யஸ்ய ஸத்ய-மிதி ||

ப்ரு. உப. 2.3.6

नेदं नेदं कल्पितत्वान्न सत्यं
रज्जुदृष्ट-व्यालवत्स्वप्नवच्च ।
इत्थं दृश्यं साधु-युक्त्या व्यपोह्य
ज्ञेयः पश्चादेक-भावस्तयोर्यः ॥ २४६ ॥

நேதம் நேதம் கல்பிதத்வாந் ந ஸத்யம் ரஜ்ஜு-த்ருஷ்ட-வ்யாலவத்-ஸ்வப்னவச்ச | இத்தம் த்ருச்யம் ஸாது-யுக்த்யா வ்யபோஹ்ய ஜ்ஞேயः பச்சாதேக-பாவஸ்-தயோர்-யः || 246 ||

246. (ந இதம்) இந்த ஸ்தூல பிரபஞ்சம் உண்மையன்று; (ந இதம்) இந்த ஸூக்ஷ்மப்பிர பஞ்சமும் உண்மையன்று; (ரஜ்ஜுத்ருஷ்ட-வ்யால-வத்) பழுதையில் காணப்பட்ட பாம்பு போலும் (ஸ்வப்னவச்ச) கனவில் கண்ட காட்சிபோலும் (கல்பிதத்வாத்) கற்பனை செய்யப்பட்ட காரணத்தால் (ந ஸத்யம்) அவை உண்மையாகா. (இத்தம்) இங்ஙனம் (ஸாது யுக்த்யா) சிறந்த யுக்தியால் (த்ருச்யம்) காணப்படும் உபாதியை (வ்யபோஹ்ய) நீக்கிவிட்டு (பச்சாத்) அதன் பிறகு (தயோः) ஜீவாத்ம பரமாத்மாவினிடை (யः) எந்த (ஏக பாவः) ஒற்றுமை உளதோ (ஜ்ஞேயः)—அது—அறியப்படவேண்டும்.

ரஜ்ஜௌ த்ருஷ்ட —பா. பே.

ततस्तु तौ लक्षणया सुलक्ष्यौ तयोरखण्डैक-रसत्वसिद्धये ।
नालं जहत्या न तथाऽजहत्या किन्तूभयार्थात्मिकयैव भाव्यम्
॥ २४७ ॥

ததஸ்து தௌ லக்ஷணயா ஸுலக்ஷ்யௌ தயோ-ரகண்டைக - ரஸத்வஸித்தயே | நாலம் ஜஹத்யா ந

ததாऽஜஹத்யா கிந்தூபயார்த்தாத்மிகயைவ பாவ்யம் || 247 ||

247. (ததः து) ஆகையால் (தௌ) ஜீவ ஈசுவரர்களாகிய இருவரும் (லக்ஷணயா) அகப்பொருளின் ஆராய்ச்சியால் (ஸுலக்ஷ்யௌ) நன்கு அறியப்பட வேண்டியவர்கள்; (தயோः) அவர்களிடை உள்ள (அகண்ட-) பிளவுபடாததும் (ஏக) ஒன்றேயானதும் (ரஸத்வ-) ஸாரமானதுமான தன்மை (ஸித்தயே) ஸித்திக்கும் பொருட்டு (ஜஹத்யா) முழுதும் தள்ளிவிடுதல் எனும் 'ஜஹதீலக்ஷணே'யாலும் (ந அலம்) கூடிவராது; (ததா) அங்ஙனமே (அஜஹத்யா) 'அஜஹதீக்ஷணேயாலும்' (ந) கூடிவராது; (கிம் து) ஆனல் (உபய-அர்த்த-ஆத்மிகயா ஏவ) இரண்டு அர்த்தங்களின் ஒற்றுமையாலேயே (பாவ்யம்) உணர்தல் வேண்டும்.

கிந்தூபயார்த்தைகதயைவ.—பா. பே.

ஜஹதீலக்ஷணே—'கங்கையில் கிராமம்' என்ற சொற்றொடரில் கங்கையோடு தொடர்புடைய கங்கைக் கரையில் என்று அர்த்தம். கங்கையை விட்டுக் கரையை ஏற்பதால் இது ஜஹதீ லக்ஷணே (விட்ட லக்ஷணே).

அஜஹதீ லக்ஷணே—'சிவப்பு ஓடுகிறது' என்ற சொற்றொடரில் சிவப்புக் குதிரை என்று அர்த்தம். சிவப்பை விடாமல் அந்த வர்ணமுடைய குதிரையைக் கொள்வதால் இது அஜஹதீ லக்ஷணே (விடாத லக்ஷணே)

स देवदत्तोऽयमितीह चैकता विरुद्धधर्मांशमपास्य कथ्यते ।
यथा तथा तत्त्वमसीति वाक्ये विरुद्ध-धर्मानुभयत्र हित्वा ॥ २४८ ॥

ஸ தேவதத்தோऽயமிதீஹ வைகதா விருத்த-தர்மாம்ச-மபாஸ்ய கத்யதே | யதா ததா தத்வமஸீதி வாக்யே விருத்ததர்மானுபயத்ர ஹித்வா || 248 ||

248. '(ஸ தேவதத்தঃ) அந்த தேவதத்தனே (அயம்) இவன்' (இதி) என்ற (இஹ வா) இங்கு (ஏகதா) ஒருமைப்பாடு (விருத்ததர்ம-அம்சம்) பொருந்தாத இயல்புடைய பகுதியை (அபாஸ்ய) விலக்கிவிடடு (யதா) எங்ஙனம் (கத்யதே) கூறப்படுகிறதோ (ததா) அங்ஙனமே (தத்-த்வம்-அஸி) நீ அதுவே ஆகிருய் (இதி) என்ற (வாக்யே) வாக்கியத்தில் (விருத்ததர்மான்) பொருந்தாத இயல்புகளை (உபயத்ர) இரண்டிடத்திலும் (ஹித்வா) விலக்கிவிட்டு ஒருமைப்பாட்டைக்காணவேண்டும்.

சென்ற காலத்தில் பார்த்த தேவதத்தனுக்கும் இப்பொழுது பார்ப்பவனுக்கும் உள்ள வேறுபாட்டை நீக்கி அவனே இவன் என்பது போல். —(பாகலக்ஷணே)

संलक्ष्य चिन्मात्रतया सदात्मनो-रखण्डभावः परिचीयते बुधैः ।
एवं महावाक्यशतेन कथ्यते ब्रह्मात्मनोरैक्य-मखण्डभावः
॥ २४९ ॥

ஸம்லக்ஷ்ய சின்மாத்ரதயா ஸதாத்மனோ-ரகண்டபாவঃ பரிசீயதே புதைঃ । ஏவம் மஹாவாக்ய-சதேன கத்யதே ப்ரஹ்மாத்மனோ-ரைக்ய-மகண்டபாவঃ ॥ 249 ॥

249. (சின்மாத்ரதயா) உபாதிகளை விலக்கி—கேவலம் சித்ருபமாகவே—இரண்டும் உளதென்று (ஸம்லக்ஷ்ய) லக்ஷணைகளின் ஆராய்ச்சியால் கண்டு கொண்டு (ஸத்-ஆத்மனோঃ) பரமாத்ம ஜீவாத்மாக்களிடை (அகண்டபாவঃ) பிளவுபடாத தன்மை (புதைঃ) அறிவாளிகளால் (பரிசீயதே) பரிசீலித்துணரப்படுகிறது. (ஏவம்) இவ்வாறு (மஹாவாக்ய-சதேன) நூற்றுக்கணக்கான மஹாவாக்கியங்களால் (ப்ரஹ்ம-ஆத்மனோঃ) பிரம்மத்திற்கும் ஜீவனுக்கும் (ஐக்யம்)

ஒற்றுமையும் (அகண்ட பாவः) வேற்றுமையின்மையும் (கத்யதே) கூறப்படுகிறது.

நூற்றுக்கணக்கான மஹா வாக்கியங்கள்—

ஒ. ப்ரஜ்ஞானம் ப்ரஹ்மேதி வா, அஹம் ப்ரஹ்மாஸ்மீதி வா பாஷ்யதே | தத்-த்வமஸீத்யேவ ஸம்பாஷ்யதே | அயமாத்மா ப்ரஹ்மேதி வா ப்ரஹ்மைவாஹ-மஸ்மீதி வா || யோऽஹ-மஸ்மீதி வா ஸோऽஹமஸ்மீதி வா யோऽஸௌ ஸோऽஹ-மஸ்மீதி வா ||

—பஹ்வ்ருசோபநிஷத்-7.

ஸர்வம் கல்விதம் ப்ரஹ்ம | ப்ரஹ்மைவேதம் விச்வமிதம் வரிஷ்ட்டம் | ஏகமேவாத்விதீயம் ப்ரஹ்ம |

## ब्रह्मभावना

**अस्थूलमित्येत-दसन्निरस्य सिद्धं स्वतो व्योमवदप्रतर्क्यम् ।
अतो मृषामात्रमिदं प्रतीतं जहीहि यत्स्वात्मतया गृहीतम् ।
ब्रह्माहमित्येव विशुद्धबुद्ध्या विद्धि स्वमात्मान-मखण्डबोधम्
॥ २५० ॥**

### ப்ரஹ்ம-பாவனா

அஸ்தூல-மித்யேத-தஸந்நிரஸ்ய ஸித்தம் ஸ்வதோ வ்யோமவ-தப்ரதர்க்யம் | அதோ ம்ருஷாமாத்ரமிதம் ப்ரதீதம் ஜஹீஹி யத் ஸ்வாத்மதயா க்ருஹீதம் | ப்ரஹ்மாஹமித்யேவ விசுத்தபுத்த்யா வித்தி ஸ்வமாத்மான-மகண்ட-போதம் || 250 ||

### பிரம்மத்தியானம்

250. (அஸ்தூலம் இதி) 'அஸ்தூலம்—இது ஸ்தூலமன்று' என்பதுபோன்ற உபநிஷத் வாக்கியங்களால்—(ஏதத்) இந்த (அஸத்) அனாத்மப்பிரபஞ்

சத்தை (நிரஸ்ய) விலக்கினுல் (ஸ்வதః) தானுகவே (வ்யோமவத்) எங்கும் நிறைந்த ஆகாசத்தைப்போல் (அப்ரதர்க்யம்) தர்க்கம் செய்யவேண்டிய அவசியமில்லாமல் (ஸித்தம்) உண்மை சித்திக்கின்றது. (அதః) ஆகையால் (யத்) எது (ஸ்வாத்மதயா க்ருஹீதம்) தனது ஆத்மா எனக் கருதப்பட்டதோ (ம்ருஷாமாத்ரம்) அந்தப் பொய்யான (இதம் ப்ரதீதம்) இந்தத் தோற்றத்தை (ஜஹீஹி) தள்ளுவாயாக. (விசுத்த புத்த்யா) தெளிவான புத்தியால் (ஸ்வம் ஆத்மானம்) உனது ஆத்மாவை (அகண்டபோதம்) அளவு கடந்த அறிவுமய மென்றும் (ப்ரஹ்ம அஹம் இதி ஏவ) 'பிரம்மமே நான்' என்றும் (வித்தி) உணர்வாயாக.

அஸ்தூல-மனண்-வஹ்ரஸ்வ-மதீர்க்க-மலோஹித-மஸ்நேஹ-மச்சாயம்......அமாத்ர-மபாஹ்யம் | —ப்ரு. உப. 3.8.6.

मृत्कार्यं सकलं घटादि सततं मृन्मात्रमेवाभित-
स्तद्वत्सज्जनितं सदात्मकमिदं सन्मात्रमेवाखिलम् ।
यस्मान्नास्ति सतः परं किमपि तत्सत्यं स आत्मा स्वयं
तस्मात्तत्त्वमसि प्रशान्तममलं ब्रह्माद्वयं यत्परम्
॥ २५१ ॥

ம்ருத்கார்யம் ஸகலம் கடாதி ஸததம் ம்ருன்மாத்ர-மேவாபிதஸ்-தத்வத் ஸஜ்ஜனிதம் ஸதாத்மக-மிதம் ஸன்மாத்ர-மேவாகிலம் | யஸ்மாங் நாஸ்தி ஸதః பரம் கிமபி தத் ஸத்யம் ஸ ஆத்மா ஸ்வயம் தஸ்மாத் தத்-த்வ-மஸி ப்ரசாந்த-மமலம் ப்ரஹ்மாத்வயம் யத்பரம் || 251 ||

251. (ம்ருத்கார்யம்) மண்ணுலான (கட-ஆதி) குடம் முதலிய (ஸகலம்) அனைத்தும் (ஸததம்) எப்பொழுதும் (அபிதః) எல்லாப் பக்கத்திலும் (ம்ருத் மாத்ரம்

ஏவ) மண் மாத்திரமே. (தத்வத்) அதே மாதிரி (ஸத் ஜனிதம்) ஸத்தாகிய பிரம்மத்திலிருந்து தோன்றியது (ஸத் ஆத்மகம்) பிரம்மமயமே; (அகிலம்) முழுதும் (இதம்) இப்பிரபஞ்சம் (ஸத் மாத்ரம் ஏவ) ஸத் மாத்திர மே—அது அல்லால் வேறன்று. (ஸதஃ பரம்) ஸத் திற்குப் புறம்பாக (கிமபி) எது ஒன்றும் (யஸ்மாத் நாஸ்தி) இல்லாத காரணத்தால் (தத் ஸத்யம்) அது தான் உண்மைப்பொருள். (ஸ ஆத்மா ஸ்வயம்) அது தான் ஆத்மா. (தஸ்மாத்) ஆகையால் (ப்ரசாந்தம்) அமைதி நிறைந்ததும் (அமலம்) மாசற்றதும் (அத் வயம்) இரண்டற்றதுமான (யத்) எந்த (பரம்) பரம் பொருளுண்டோ (தத்) அதுவாக (த்வம்) நீ (அஸி) உளாய்.

ம்ருன்மாத்ரமேவாஹிதம்—பாடபேதம்

ஒ. ஸ ய ஏஷோऽணிமைத-தாத்ம்ய-மிதஂ ஸர்வம் தத் ஸத்யஂ ஸ ஆத்மா தத்-த்வமஸி ச்வேதகேதோ இதி | —சா. உப. 6.9.

निद्राकल्पित-देशकाल-विषय-ज्ञात्रादि-सर्वं यथा
मिथ्या तद्वदिहापि जाग्रति जगत्स्वाज्ञानकार्यत्वतः ।
यस्मादेवमिदं शरीरकरण-प्राणाह-माद्यप्यसत्
तस्मात्तत्त्वमसि प्रशान्तममलं ब्रह्माद्वयं यत्परम्
॥ २५२ ॥

நித்ராகல்பித-தேசகால-விஷய-ஜ்ஞாத்ராதி-ஸர்வம் யதா மித்யா தத்வதிஹாபி ஜாக்ரதி ஜகத்ஸ்வாஜ்ஞான-கார்யத்வதஃ | யஸ்மாதேவமிதம் சரீரகரண-ப்ராணாஹ-மாத்யப்யஸத் தஸ்மாத் தத்-த்வ-மஸி ப்ரசாந்த-மமலம் ப்ரஹ்மாத்வயம் யத்பரம் || 252 ||

252. (நித்ரா-கல்பித) உறக்கத்தில் கற்பிக்கப் பட்ட (தேச-கால-விஷய-ஜ்ஞாத்ரு-ஆதி) இடம்

காலம் பொருள் அறிபவன் முதலிய (ஸர்வம்) எல்லாம் (யதா) எங்ஙனம் (மித்யா) பொய்யோ (தத்வத்) அங்ஙனமே (இஹ அபி) இங்கும் (ஜாக்ரதி) விழிப்பு நிலையில் (ஜகத்) உலகு (ஸ்வ-அஜ்ஞான-) உனது அஞ்ஞானத்தால் (கார்யத்வதঃ) ஆக்கப்பட்டிருப்பதால்— பொய்யே. (யஸ்மாத் ஏவ) எக்காரணத்தால் (இதம்) இந்த (சரீர-கரண-ப்ராண-அஹம் ஆதி அபி) உடல், இந்திரியங்கள், பிராணன், அஹங்காரம் முதலியவையும் (அஸத்) பொய்யோ (தஸ்மாத்) அக்காரணத்தால் (ப்ரசாந்தம்) அமைதி நிறைந்ததும் (அமலம்) மாசற்றதும் (அத்வயம்) இரண்டற்றதுமான (யத்) எந்த (பரம்) பொருளுண்டோ (தத்) அதுவாக (த்வம்) நீ (அஸி) உளாய்.

ஒ. 'யத்ர வா அஸ்ய ஸர்வ-மாத்மைவாபூத் தத் கேன கம் பச்யேத்' எந்தநிலையில் எல்லாம் ஆத்மாவாய் விளங்குமோ அந்நிலையில் எதனுல் எதைப் பார்ப்பான்? —ப்ரு.உப. 2.4.14.

यत्र भ्रान्त्या कल्पितं तद्विवेके तत्तन्मात्रं नैव तस्माद्विभिन्नम् ।
स्वप्ने नष्टं स्वप्नविश्वं विचित्रं स्वस्माद्भिन्नं किन्नु दृष्टं प्रबोधे
॥ २५३ ॥

யத்ர ப்ராந்த்யா கல்பிதம் தத்விவேகே தத்தன்மாத்ரம் நைவ தஸ்மாத்விபின்னம் | ஸ்வப்னே நஷ்டம் ஸ்வப்னவிச்வம் விசித்ரம் ஸ்வஸ்மாத்பின்னம் கிந்நு த்ருஷ்டம் ப்ரபோதே || 253 ||

253. (யத்ர) எங்கு (ப்ராந்த்யா) மதிமயக்கத்தால் (கல்பிதம்) கற்பிக்கப்பட்ட ஒன்று தோன்றுகிறதோ (தத்-விவேகே) அதனுடைய உண்மை நிலை அறியப்பட்டபொழுது (தத்) அது (தன்மாத்ரம்) அவ்வுண்மை நிலையாகவே உளது; (தஸ்மாத்விபின்னம்) அதினின்று பிரிதாகத்தோன்றியது (ந ஏவ) இல்லவே

இல்லை. (விசித்ரம்) பலவகைப்பட்ட (ஸ்வப்ன-விச்வம்) கனவுலகு (ஸ்வப்னே) கனவிலேயே (நஷ்டம்) அழிந்து போகிறது, (ப்ரபோதே) விழித்துக்கொண்டபின் (ஸ்வஸ்மாத் பின்னம்) தன்னைவிடவேருக (கிந்நு த்ருஷ்டம்) காணப்படுகிறதா என்ன?

சில பாடங்களில் இந்த சுலோகம் இல்லை.

**जाति-नीति-कुल-गोत्र-दूरगं नाम-रूप-गुण-दोष-वर्जितम् ।**
**देशकालविषयातिवर्ति यद् ब्रह्म तत्त्वमसि भावयात्मनि**
**॥ २५४ ॥**

ஜாதி - நீதி - குல - கோத்ர-தூரகம் நாம-ரூப-குண-தோஷ-வர்ஜிதம் | தேசகால-விஷயாதிவர்த்தி யத் ப்ரஹ்ம தத்-த்வ-மஸி பாவயாத்மனி || 254 ||

254. (ஜாதி-) ஜாதி (நீதி-) சேர்க்கை (குல-) குலம் (கோத்ர-) கோத்ரம் ஆகியவற்றிற்கு(தூரகம்) அப்பாற்பட்டதும், (நாம-) பெயர் (ரூப-) வடிவம் (குண-) குணம் (தோஷ-) குற்றம் ஆகியவை (வர்ஜிதம்) அற்றதும், (தேச-) இடம் (கால-) காலம் (விஷய-) பொருள் முதலியவற்றை (அதிவர்த்தி) கடந்து உளதும் (யத்) எதுவோ (தத்) அந்த (ப்ரஹ்ம) பிரம்மமாக (த்வம்) நீ (அஸி) உளாய்—என்பதை—(ஆத்மனி) புத்தியில் (பாவய) அனுஸந்தானம் செய்வாயாக.

ஒ. ஜன்ம-ம்ருத்யு-ஸுகது:க்க-வர்ஜிதம் ஜாதி-நீதி-குல-கோத்ர-தூரகம் | சித்-விவர்த்த-ஜகதோऽஸ்ய காரணம் தத் ஸதாऽஹமதி மௌன-மாச்ரய || —வராஹ உப. 3.7.

**यत्परं सकलवागगोचरं गोचरं विमलबोध-चक्षुषः ।**
**शुद्धचिद्घन-मनादि-वस्तु यद् ब्रह्म तत्त्वमसि भावयात्मनि**
**॥ २५५ ॥**

யத்பரம் ஸகலவாககோசரம் கோசரம் விமலபோத-சக்ஷுஷ꞉ | சுத்தசித்கன - மனுதி-வஸ்து யத் - ப்ரஹ்ம தத்-த்வ-மஸி பாவயாத்மனி || 255 ||

255. (யத்) எந்த (பரம்) பரம் பொருள் (ஸகல-வாக்-) சொல்லனைத்திற்கும் (அகோசரம்) எட்டாததோ, (விமலபோத-) மாசற்ற ஞானவடிவான (சக்ஷுஷ꞉) கண்ணிற்கு (கோசரம்) எட்டுவதோ, (யத்) எது (சுத்த-) பரிசுத்தமான (சித்-கனம்) அறிவு வடிவோ (அனுதி-வஸ்து) அனுதிப்பொருளோ (தத்) அந்த (ப்ரஹ்ம) பிரம்மமாக (த்வம்) நீ (அஸி) உளாய்—என்பதை—(ஆத்மனி) புத்தியில் (பாவய) அனுஸந்தானம் செய்வாயாக.

ஸகலவாககோசரம்—ஒ. யதோ வாசோ நிவர்த்தந்தே | அப்ராப்ய மனஸா ஸஹ | —தை.உப. 2.4.

விமலபோதசக்ஷுஷ:—ஒ. 'ஜ்ஞானப்ரஸாதேன விசுத்த ஸத்வஸ்-ததஸ்து தம் பச்யதே நிஷ்கலம் த்யாயமான:' ஞானத் தெளிவால் பரிசுத்தமான புத்தியுடையவன் அந்த நிஷ்கலமான பரிபூர்ணத்தை தியானத்தால் அறிகிருன். —மு.உப. 1.8.

'புத்திக்ராஹ்ய-மதீந்த்ரியம்' கீ. 6. 21.

**षड्भिरूर्मिभिरयोगि योगिहृद्-भावितं न करणै र्विभावितम् ।**
**बुद्ध्यवेद्य-मनवद्यमस्ति यद् ब्रह्म तत्त्वमसि भावयात्मनि**
**॥ २५६ ॥**

ஷட்பிரூர்மிபி-ரயோகி யோகி-ஹ்ருத்-பாவிதம் ந கரணைர்-விபாவிதம் | புத்த்யவேத்ய-மனவத்ய-மஸ்தி யத் ப்ரஹ்ம தத்-த்வ-மஸி பாவயாத்மனி || 256 ||

256. (ஷட்பி꞉)—பசி தாகம் சோக மோஹம் மூப்பு சாவு என்ற—ஆறுவகையான (ஊர்மிபி꞉)—பிறவிக்கடலின்—அலைகளால் (அயோகி) தொடப்படாததும் (யோகிஹ்ருத்-) யோகிகளின் உள்ளத்

தில் (பாவிதம்) தியானிக்கப்பட்டதும் (கரணை:) இந்திரியங்களால் (ந விபாவிதம்) உணரப்படாததும் (புத்தி-அவேத்யம்) புத்தியாலும் அறியப்படாததும் (அனவத்யம்) குற்றமற்றதுமான (யத்) எந்த ஒன்று (அஸ்தி) உளதோ (தத்) அந்த (ப்ரஹ்ம) பிரம்மமாக (த்வம்) நீ உளாய் என்பதை (ஆத்மனி) புத்தியில் (பாவய) அனுஸந்தானம் செய்வாயாக.

பா. பே.

புத்த்யவேத்ய-மனவத்ய-பூதி யத் ।

भ्रान्ति-कल्पित-जगत्कलाश्रयं स्वाश्रयं च सदसद्विलक्षणम् ।
निष्कलं निरुपमानवद्धि यद् ब्रह्म तत्त्वमसि भावयात्मनि
॥ २५७ ॥

ப்ராந்தி-கல்பித-ஜகத்கலாச்ரயம் ஸ்வாச்ரயஞ் ச ஸதஸத்-விலக்ஷணம் | நிஷ்கலம் நிருபமானவத்தி யத் ப்ரஹ்ம தத்-த்வ-மஸி பாவயாத்மனி || 257 ||

257. (ப்ராந்தி-கல்பித-) மதிமயக்கத்தால் கற்பிக்கப்பட்ட (ஜகத்-கலா-) உலகின் பல பகுதிகளுக்கும் (ஆச்ரயம்) அடிப்படையாயிருப்பதும் (ஸ்வ-ஆச்ரயஞ்ச) ஜீவனுகிய தனக்கும் ஆசிரயமாயிருப்பதும் (ஸத்-அஸத்-விலக்ஷணம்) காரணத்திற்கும் காரியத்திற்கும் புறம்பானதும் (நிஷ்கலம்) பிளவுபடாததும் (நிருபமானவத்) ஒப்பற்றதுமான (யத் ஹி) எது உளதோ (தத்) அந்த (ப்ரஹ்ம) பிரம்மமாக (த்வம்) நீ (அஸி) உளாய் என்பதை (ஆத்மனி) புத்தியில் (பாவய) அனுஸந்தானம் செய்வாயாக.

—பா. பே.

நிருபமானம்ருத்திமத்

जन्मवृद्धि-परिणत्यपक्षय-व्याधि-नाशन-विहीनमव्ययम् ।
विश्वसृष्ट्यवनघातकारणं ब्रह्म तत्त्वमसि भावयात्मनि
॥ २५८ ॥

ஜன்மவ்ருத்தி-பரிணத்-யபக்ஷய - வ்யாதி - நாசன-விஹீன-மவ்யயம் | விச்வஸ்ருஷ்ட்யவனகாத-காரணம் ப்ரஹ்ம தத்-த்வ-மஸி பாவயாத்மனி || 258 ||

258. (ஜன்ம-பிறவி (வ்ருத்தி-) வளர்ச்சி (பரிணதி-) மாறுபாடு (அபக்ஷய-) தேய்வு (வ்யாதி) நோய் (நாசன-) சாவு முதலியவை (விஹீனம்) இல்லாததும் (அவ்யயம்) அழிவற்றதும் (விச்வ-) உலகின் (ஸ்ருஷ்டி) ஆக்கம் (அவன-) காப்பு (காத-) அழிவு ஆகியவற்றிற்கு (காரணம்) காரணமாயிருப்பதுமான (தத்) அந்த (ப்ரஹ்ம) பிரம்மமாக (த்வம்) நீ (அஸி) உளாய் என்பதை (ஆத்மனி) புத்தியில் (பாவய) அனுஸந்தானம் செய்வாயாக.

விச்வ-ஸ்ருஷ்ட்யவ-விகாத காரணம் —பாட பேதம்.

ஒ. யதோ வா இமானி பூதானி ஜாயந்தே | யேன ஜாதானி ஜீவந்தி | யத்-ப்ரயந்த்யபிஸம்விசந்தி | தத் விஜிஜ்ஞாஸஸ்வ | தத் ப்ரஹ்மேதி || —தை.உ ப. 3.1.

अस्तभेद-मनपास्तलक्षणं निस्तरंग-जलराशि-निश्चलम् ।
नित्यमुक्तमविभक्त-मूर्ति यद् ब्रह्म तत्त्वमसि भावयात्मनि ॥ २५९ ॥

அஸ்த - பேத-மனபாஸ்த-லக்ஷணம் நிஸ்தரங்க-ஜலராசி-நிச்சலம் | நித்யமுக்த-மவிபக்த-மூர்த்தி யத் ப்ரஹ்ம தத்-த்வ-மஸி பாவயாத்மனி || 259 ||

259. (அஸ்த-பேதம்) பேதமற்றதும் (அனபாஸ்த-லக்ஷணம்)—'ஸத்யம் ஞானம் அனந்தம்' எனும்—லக்ஷணத்தினின்று விலகாததும் (நிஸ்தரங்க-) அலையில்லாத (ஜலராசி) நீர்ப்பரப்பைப்போல் (நிச்சலம்) அசை வற்றதும் (நித்ய முக்தம்) என்றும் கட்டுக்கடங்காததும் (அவிபக்த-மூர்த்தி) பாகுபாடற்ற வடிவுடையதுமான (யத்) எது உளதோ (தத்) அந்த (ப்ரஹ்ம)

பிரம்மமாக (த்வம்) நீ (அஸி) உள்ளாய் என்பதை (ஆத்மனி) புத்தியில் (பாவய) அனுஸந்தானம் செய்வாயாக.

அஸ்தபேதம்—ஒ. 'அவிபக்தம் விபக்தேஷு தத் ஜ்ஞானம்' —கீ. 18.20.

**एकमेव सदनेक-कारणं कारणान्तर-निरास-कारणम् ।**
**कार्यकारणविलक्षणं स्वयं ब्रह्म तत्त्वमसि भावयात्मनि**
**॥ २६० ॥**

ஏகமேவ ஸதனேக-காரணம் காரணாந்தர-நிராஸ-காரணம் | கார்யகாரண-விலக்ஷணம் ஸ்வயம் ப்ரஹ்ம தத்-த்வ-மஸி பாவயாத்மனி || 260 ||

260. (ஏகம் ஏவ ஸத்) ஸத்தாகவும் ஒன்றேயாகவும் இருந்து கொண்டு (அநேக-காரணம்) பலவாருய்ப்பிரிந்த உலகிற்குக் காரணமாவதும் (காரண-அந்தர-) வேறு காரணத்தை (நிராஸ-) நிராகரிக்கும் (காரணம்) மூல காரணமாயும் (கார்ய-காரண-விலக்ஷணம்) காரியமான உலகத்தையும் காரணமாகிய மாயையும் விட வேருன தும் (ஸ்வயம்) தான் தாஞகவே விளங்குவதுமான (தத்) அந்த (ப்ரஹ்ம) பிரம்மமாக (த்வம்) நீ (அஸி) உளாய் என்பதை (ஆத்மனி) புத்தியில் (பாவய) அனுஸந்தானம் செய்வாயாக.

**निर्विकल्पक-मनल्प-मक्षरं यत्क्षराक्षर-विलक्षणं परम् ।**
**नित्य-मव्ययसुखं निरंजनं ब्रह्म तत्त्वमसि भावयात्मनि**
**॥ २६१ ॥**

நிர்விகல்பக-மனல்ப-மக்ஷரம் யத்-க்ஷராக்ஷர-விலக்ஷணம் பரம் | நித்ய-மவ்யயஸுகம் நிரஞ்ஜனம் ப்ரஹ்ம தத்-த்வ-மஸி பாவயாத்மனி || 261 ||

261. (நிர்விகல்பகம்) மாயையாகிய கற்பனையைக் கடந்ததாயும் (அனல்பம்) சிறுமையற்றதாயும் (அக்ஷ-ரம்) அழிவற்றதாயும் (க்ஷர - அக்ஷர - விலக்ஷணம்) அழியும் உலகையும் அழிவற்ற பிரகிருதியையும் விட வேறானதாயும் (பரம்) உயர்ந்ததாயும் (நித்யம்) என்று முளதாயும் (அவ்யய ஸுகம்) அழியாத இன்பவடிவின தாயும் (நிரஞ்ஜனம்) மாசற்றதாயும் (யத்) எது உளதோ (தத்) அந்த (ப்ரஹ்ம) பிரம்மமாக (த்வம்) நீ (அஸி) உளாய் என்பதை (ஆத்மனி) புத்தியில் (பாவய) அனுஸந்தானம் செய்வாயாக.

**यद्विभाति सदनेकधा भ्रमान्नामरूप-गुणविक्रियात्मना ।**
**हेमवत्स्वय-मविक्रियं सदा ब्रह्म तत्त्वमसि भावयात्मनि**
**॥ २६२ ॥**

யத்விபாதி ஸதனேகதா ப்ரமாந்-நாமரூப-குண-விக்ரியாத்மனு | ஹேமவத்ஸ்வய-மவிக்ரியம் ஸதா ப்ரஹ்ம தத்-த்வ-மஸி பாவயாத்மனி || 262 ||

262. (ஸத்) ஸத்தேயாகிய (யத்) எந்த ஒன்று (ப்ரமாத்) மதிமயக்கத்தால் (நாம-ரூப-குண-விக்ரிய-ஆத்மனு) பெயர் வடிவம் குணம் மாறுபாடு முதலிய (அனேகதா) பலவகையில் (விபாதி) தோன்றுகிறதோ, (ஹேமவத்)—ஆனுல்—பொன்னைப்போல்—பலவடிவங்களை ஏற்ருலும்—(ஸதா) எப்பொழுதும் (அவிக்ரியம்) மாறுபாடற்றதாய் உளதோ (தத்) அந்த (ப்ரஹ்ம) பிரம்மமாக (த்வம்) நீ (அஸி) உளாய் என்பதை (ஆத்மனி) புத்தியில் (பாவய) அனுஸந்தானம் செய்வாயாக.

**यच्चकास्त्यनपरं परात्परं प्रत्यगेकरस-मात्मलक्षणम् ।**
**सत्यचित्सुख-मनन्त-मव्ययं ब्रह्म तत्त्वमसि भावयात्मनि**
**॥ २६३ ॥**

யச்சகாஸ்த்யனபரம் பராத்பரம் ப்ரத்யகேகரஸ-மாத்மலக்ஷணம் | ஸத்யசித்ஸுக - மனந்த - மவ்யயம் ப்ரஹ்ம தத்-த்வ-மஸி பாவயாத்மனி || 263 ||

263. (அனபரம்) மேம்பட்ட வேறென்றில்லாமல் (யத்) எது (சகாஸ்தி) பிரகாசிக்கிறதோ, (பராத்பரம்) அவ்யக்தமாகிய பராப்ரகிருதிக்கும் அப்பாற்பட்டதோ, (ப்ரத்யக்-ஏகரஸம்-ஆத்ம-லக்ஷணம்) உடல் தோறும் ஒரே இன்பமயமான அந்தராத்மவடிவில் உளதோ (ஸத்ய-சித்-ஸுக) ஸச்சிதானந்தப்பொருளாயும் (அனந்தம்) அளவற்றதாயும் (அவ்யயம்) அழிவற்றதாயுமுளதோ (தத்) அந்த (ப்ரஹ்ம) பிரம்மமாக (த்வம்) நீ (அஸி) உளாய் என்பதை (ஆத்மனி) புத்தியில் (பாவய) அனுஸந்தானம் செய்வாயாக.

उक्तमर्थ-मिम-मात्मनि स्वयं भावयेत्प्रथित-युक्तिभिर्धिया ।
संशयादिरहितं कराम्बुवत् तेन तत्त्वनिगमो भविष्यति
॥ २६४ ॥

உக்தமர்த்த - மிம - மாத்மனி ஸ்வயம் பாவயேத் ப்ரதித-யுக்திபிர்-தியா | ஸம்சயாதிரஹிதம் கராம்புவத் தேன தத்வநிகமோ பவிஷ்யதி || 264 ||

264. (உக்தம்) கூறப்பட்ட (இமம்) இந்த (அர்த்தம்) பொருளை (ஆத்மனி) மனதில் (ஸ்வயம்) தானுகவே (தியா) புத்தி சக்தியால் (ப்ரதித-யுக்திபிः) சுருதியில் பிரசித்தமான யுக்திகளின் மூலம் (பாவயேத்) அனுஸந்தானம் செய்யவேண்டும். (தேன) அதனுல் (ஸம்சய-ஆதி-ரஹிதம்) ஐயம் திரிபு முதலியவை இல்லாமல் (கர-அம்புவத்) கையில் ஜலம்போல் தெளிவாக (தத்வநிகமः) தத்துவ விளக்கமானது (பவிஷ்யதி) உண்டாகும்.

स्वं बोधमात्रं परिशुद्धतत्त्वं
विज्ञाय सङ्घे नृपवच्च सैन्ये ।
तदाश्रयः स्वात्मनि सर्वदा स्थितो
विलापय ब्रह्मणि विश्वजातम् ॥ २६५ ॥

ஸ்வம் போதமாத்ரம் பரிசுத்ததத்வம் விஜ்ஞாய ஸங்கே ந்ருபவச்ச ஸைன்யே | ததாச்ரயஃ ஸ்வாத்மனி ஸர்வதா ஸ்த்திதோ விலாபய ப்ரஹ்மணி விச்வஜாதம் || 265 ||

265. (ஸைன்யே) படைகளினிடை (ந்ருபவத்) ஒரு அரசனைப்போல் (ஸங்க்கே) உடல் முதலிய கூட்டத்தினிடை (ஸ்வம்) உன்னை (போதமாத்ரம்) அறிவு வடிவான (பரிசுத்த தத்வம்) பரிசுத்த தத்துவம் என்று (விஜ்ஞாய) உணர்ந்து (தத்-ஆச்ரயஃ) அவ்வறிவில் நிலைபெற்று (ஸ்வ-ஆத்மனி) உனது ஆத்மாவில் (ஸர்வதா) எப்பொழுதும் (ஸ்திதஃ) இருந்துகொண்டு (விச்வ ஜாதம்) உண்டாகிய உலகனத்தையும் (ப்ரஹ்மணி) பிரம்மத்தில் (விலாபய) கரைத்து விடுவாயாக.

ஸம்போதமாத்ரம் | ததாத்மனைவாத்மனி ஸர்வதா | த்ருச்யஜாதம் |
—பாடபேதம்

बुद्धौ गुहायां सदसद्विलक्षणं ब्रह्मास्ति सत्यं परमद्वितीयम् ।
तदात्मना योऽत्र वसेद् गुहायां पुनर्न तस्याङ्ग गुहाप्रवेशः
॥ २६६ ॥

புத்தௌ குஹாயாம் ஸதஸத்விலக்ஷணம் ப்ரஹ்மாஸ்தி ஸத்யம் பரமத்விதீயம் | ததாத்மனா யோऽத்ர வஸேத் குஹாயாம் புனர்ந தஸ்யாங்க குஹாப்ரவேசஃ || 266 ||

266. (**புத்தெள குஹாயாம்**) புத்தியாகிற குகையில் (ஸத்-அஸத்-விலக்ஷணம்) காரண காரியத்தை விடவேருனதாய் (ஸத்யம்) உண்மைப் பொருளாய் (பரம்) உயர்ந்ததாய் (அத்விதீயம்) இரண்டற்றதாய் விளங்கும் (ப்ரஹ்ம) பிரம்மம் (அஸ்தி) உளது. (தத்-ஆத்மனு) அதுவே தானுய் (யః) எவன் (அத்ர குஹாயாம்) இந்த குகையில் (வஸேத்) வசிக்கிருனே (தஸ்ய) அவனுக்கு, (அங்க !) பிரியமானவனே ! (புனః) மீண்டும் (ந குஹா-ப்ரவேசః) கர்ப்பமாகிற குகையில் புகுதல் இல்லை.

## वासनात्यागः

ज्ञाते वस्तुन्यपि बलवती वासनाऽनादिरेषा
कर्ता भोक्ताप्यहमिति दृढा यास्य संसारहेतुः ।
प्रत्यग्दृष्ट्याऽऽत्मनि निवसता सापनेया प्रयत्ना-
न्मुक्तिं प्राहुस्तदिह मुनयो वासनातानवं यत्
॥ २६७ ॥

**வாஸனுத்யாக:**

ஜ்ஞாதே வஸ்துன்யபி பலவதீ வாஸனுऽனாதிரேஷா கர்த்தா போக்தாப்யஹமிதி த்ருடா யாஸ்ய ஸம்ஸாரஹேதுః | ப்ரத்யக்த்ருஷ்ட்யாऽऽத்மனி நிவஸதா ஸாபனேயா ப்ரயத்னுன்-முக்திம் ப்ராஹுஸ்ததிஹ முனயோ வாஸனுதானவம் யத் || 267 ||

**வாஸனையை ஒழித்தல்**

267. (வஸ்துனி) உண்மைப்பொருளானது (ஜ்ஞாதே அபி) அறியப்பட்ட பின்னும் (அஸ்ய) இவனுக்கு (ஸம்ஸார ஹேதுః) பிறவிச்சுழலுக்குக் காரண

மாய் (கர்த்தா) செயலாளியாகவும் (போக்தா அபி) அனுபவிப்பவனுகவும் (அஹம்) நான் உளேன் (இதி) என்று (த்ருடா) திடமான (யா) எந்த (ஏஷா) இந்த (அனுதிஃ) அனுதியானதும் (பலவதீ) வலிமை மிக்கதுமான (வாஸனு) வாஸனை—உளதோ—(ஸா) அது (ப்ரத்யக் த்ருஷ்ட்யா) உள்நோக்குடன் (ஆத்மனி) ஆத்மாவில் (நிவஸதா) வாழ்பவனுல் (ப்ரயத்னுத்) விடாமுயற்சியுடன் (அபனேயா) ஒழிக்கப்படவேண்டும். (வாஸனு-தானவம்) வாஸனை மெலிந்தழிதல் (யத்) எதுவோ (தத்) அதையே (இஹ) இங்கு (முக்திம்) முக்தியென (முனயஃ) முனிவர்கள் (ப்ராஹுஃ) கூறுகின்றனர்.

अहं ममेति यो भावो देहाक्षादावनात्मनि ।
अध्यासोऽयं निरस्तव्यो विदुषा स्वात्मनिष्ठया

॥ २६८ ॥

அஹம் மமேதி யோ பாவோ தேஹாக்ஷாதாவனுத்மனி । அத்யாஸோऽயம் நிரஸ்தவ்யோ விதுஷா ஸ்வாத்ம-நிஷ்ட்டயா ॥ 268 ॥

268. (அனுத்மனி) ஆத்மாவல்லாத (தேஹ-) உடலிலும் (அக்ஷ-ஆதௌ) இந்திரியங்கள் முதலியவற்றிலும் (அஹம் மம இதி) நான் என்னுடையது என்ற (பாவஃ) எண்ணம் (யஃ) எதுவோ (அயம்) இந்த (அத்யாஸஃ) மாறுபாட்டுக்கற்பனை (ஸ்வ-ஆத்ம-நிஷ்ட்டயா) தனது ஆத்மாவில் நிலை பெறுதலால் (விதுஷா) அறிவாளியால் (நிரஸ்தவ்யஃ) ஒழிக்கப்படவேண்டும்.

ஒ. அத்யாத்மோபநிஷத் ॥ அங்கு 'விதுஷா ப்ரஹ்ம நிஷ்ட்டயா' என்ற மாறுதலுடன்; இந்த சுலோகமும் இன்னும் பல சுலோகங்களும் அப்படியே உள்ளன.

ज्ञात्वा स्वं प्रत्यगात्मानं बुद्धितद्वृत्ति-साक्षिणम् ।
सोऽहमित्येव सद्वृत्त्याऽनात्मन्यात्ममतिं जहि ॥ २६९ ॥

ஜ்ஞாத்வா ஸ்வம் ப்ரத்யாகாத்மானம் புத்தி தத்-வ்ருத்தி-ஸாக்ஷிணம் | ஸோऽஹமித்யேவ ஸத்வ்ருத்த்யாऽனாத்மன்யாத்மமதிம் ஜஹி || 269 ||

269. (புத்தி-) புத்திக்கும் (தத்-வருத்தி) அதின் பரிணாமங்களுக்கும் (ஸாக்ஷிணம்) ஸாக்ஷியாயிருக்கும் (ஸ்வம்) உன்னுடைய (ப்ரத்யக்-ஆத்மானம்) அந்தராத்மாவை (ஜ்ஞாத்வா) அறிந்து (ஸः அஹம் இதி) அந்த ஆத்மாவே நான் என்ற (ஸத்-வ்ருத்த்யா ஏவ) நல்ல எண்ணத் தொடர்ச்சியால் (அனாத்மனி) ஆத்மா வல்லாததில் (ஆத்மமதிம்) ஆத்மா என்ற எண்ணத்தை (ஜஹி) ஒழிப்பாயாக.

ஒ. ஜ்ஞாத்வா ஸ்வம் ப்ரத்யகாத்மானம் புத்தி-தத்வ்ருத்தி ஸாக்ஷிணம் | ஸோऽஹமித்யேவ-தத்வ்ருத்த்யா ஸ்வான்யத்ராத்மமதிம் த்யஜேத் || —அத்யாத்மோபநிஷத் 2

लोकानुवर्तनं त्यक्त्वा त्यक्त्वा देहानुवर्तनम् ।
शास्त्रानुवर्तनं त्यक्त्वा स्वाध्यासापनयं कुरु ॥ २७० ॥

லோகானுவர்த்தனம் த்யக்த்வா த்யக்த்வா தேஹானுவர்த்தனம் | சாஸ்த்ரானுவர்த்தனம் த்யக்த்வா ஸ்வாத்யாஸாபநயம் குரு || 270 ||

270. (லோக-அனுவர்த்தனம்) உலகைப் பின்பற்றிச் செல்லுதலையும் (த்யக்த்வா) விட்டு விட்டு (தேஹ-அனுவர்த்தனம்) உடலைப்பின்பற்றிச் செல்லுதலையும் (த்யக்த்வா) விட்டு விட்டு (சாஸ்த்ர-அனுவர்த்தனம்)

நூல்களைப் பின்பற்றிச் செல்லுதலையும் கூட (த்யக்த்வா) விட்டொழித்து (ஸ்வ-அத்யாஸ-) உன்னிடத்தில் பொய்யாகக் கற்பிக்கப்பட்டுள்ளதின் (அபநயம் குரு) ஒழிவைச் செய்வாயாக.

**லோகானுவர்த்தனம்**—ஓ. ஜன-க்ருபா-நைஷ்ட்டுர்ய-முத்ஸ்ருஜ்யதாம் ।

**தேஹானுவர்த்தனம்**—ஓ. தேஹேऽஹம்மதி-ருஜ்ஜ்யதாம் ।

—சங். ஸாதனபஞ்சகம்.

**சாஸ்த்ரானுவர்த்தனம்**—மோக்ஷசஸ்திர மல்லாதவற்றைப் பயிலுதல்.

**लोकवासनया जन्तोः शास्त्रवासनयापि च ।**
**देहवासनया ज्ञानं यथावन्नैव जायते ॥ २७१ ॥**

லோகவாஸனயா ஜந்தோः சாஸ்த்ரவாஸனயாபி ச | தேஹ-வாஸனயா ஜ்ஞானம் யதாவந்-நைவ ஜாயதே || 271 ||

271. (லோகவாஸனயா) உலக வாஸனையாலும் (தேஹவாஸனயா) உடல் வாஸனையாலும் (சாஸ்த்ர-வாஸனயா அபி ச) நூல் வாஸனையாலும் கூட (ஜந்தோः) ஜீவனுக்கு (யதாவத்) உள்ளபடியான (ஜ்ஞானம்) ஞானம் (ந ஜாயதே ஏவ) உண்டாகவே உண்டாகாது.

ஓ. ந சப்த-சாஸ்த்ராபிரதஸ்ய மோக்ஷோ ந சைவ ரம்யாவஸத-ப்ரியஸ்ய । ந போஜனுச்சாதன-தத்பரஸ்ய ந லோகசித்த-க்ரஹணே ரதஸ்ய || ஏகாந்த-சீலஸ்ய த்ருடவ்ரதஸ்ய மோக்ஷோ பவேத் ப்ரீதிநிவர்த்தகஸ்ய । அத்த்யாத்மயோகே நிரதஸ்ய ஸம்யங் மோக்ஷோ பவேந் நித்ய-மஹிம்ஸகஸ்ய || —ஆபஸ்தம்பர்.

ஓ. முக்திகோபநிஷத் 2.2.

संसारकारागृह-मोक्षमिच्छो-
रयोमयं पादनिबन्धशृंखलम् ।
वदन्ति तज्ज्ञाः पटु वासनात्रयं
योऽस्माद्विमुक्तः समुपैति मुक्तिम् ॥ २७२ ॥

ஸம்ஸார-காராக்ருஹ-மோக்ஷமிச்சோ-ரயோமயம் பாத-நிபந்த ச்ருங்கலம் | வதந்தி தஜ்ஜ்ஞாஃ படு வாஸனா-த்ரயம் யோऽஸ்மாத்விமுக்தஃ ஸமுபைதி முக்திம் ||272||

272. (ஸம்ஸார - காராக்ருஹ-மோக்ஷம் இச்சோஃ) ஸம்ஸாரமாகிற சிறையிலிருந்து விடுதலையை விரும்புபவனுக்கு (படுவாஸனா-த்ரயம்) பிரபலமான வாஸனை மூன்றும் (அயோமயம்) இரும்பு மயமான (பாத-நிபந்த-ச்ருங்கலம்) கால் கட்டுச் சங்கிலி என்று (தத் ஜ்ஞாஃ) அதை அறிந்தவர்கள் (வதந்தி) கூறுகிறார்கள். (யஃ) எவன் (அஸ்மாத்) இதினின்று (விமுக்தஃ) விடுபட்டவனே அவன் (முக்திம்) முக்தியை (ஸமுபைதி) அடைகிறான்.

जलादिसंसर्गवशात्प्रभूत-
दुर्गन्ध-धूताऽगरु-दिव्यवासना ।
संघर्षणेनैव विभाति सम्य-
ग्विधूयमाने सति बाह्यगन्धे ॥ २७३ ॥

ஜலாதி-ஸம்ஸர்க்க-வசாத்-ப்ரபூத-துர்க்கந்த-தூதாऽகரு-திவ்யவாஸனா | ஸங்கர்ஷணேனைவ விபாதி ஸம்யக்-விதூயமானே ஸதி பாஹ்யகந்தே || 273 ||

273. (ஜல-ஆதி) ஜலம் முதலியவற்றுடன் (ஸம்ஸர்க்க-வசாத்) சேர்க்கையின் மூலம் (ப்ரபூத) வளர்ந்த

(துர்க்கந்த) கெட்ட வாஸனையால் (தூத-) மறைக்கப் பட்ட (அகரு) அகிலின் (திவ்ய வாஸனு) இயற்கை யான சிறந்த வாஸனை (ஸங்கர்ஷணேன ஏவ) அரைக் கப்பட்ட மாத்திரத்தில் (பாஹ்யகந்தே) புறம்பான வாஸனை (விதூயமானேஸதி) நீக்கப்பட்டதாகி (ஸம் யக்) நன்ருக (விபாதி) வெளிப்படுகிறது.

ஜலாதிஸம்பர்க்க —பா. பே.

अन्तः श्रितानन्त-दुरन्तवासना-
धूलीविलिप्ता परमात्मवासना ।
प्रज्ञातिसंघर्षणतो विशुद्धा
प्रतीयते चन्दनगन्धवत् स्फुटम् ॥ २७४ ॥

அந்தஃ ச்ரிதானந்த-துரந்த-வாஸனு-தூலீ-விலிப்தா பரமாத்ம-வாஸனு | ப்ரஜ்ஞாதிஸங்கர்ஷணதோ விசுத்தா ப்ரதீயதே சந்தனகந்தவத் ஸ்புடம் || 274 ||

274. (அந்தஃ ச்ரிதா) உள்ளே பொதிந்த (அனந்த) அளவில்லாததும் (துரந்த-) நீக்குதற்குக் கடினமானதுமான (வாஸனு-தூலீ) கெட்ட வாஸனையாகிற அழுக்குத்தூளால் (விலிப்தா) மறைக்கப்பட்ட (பரமாத்ம வாஸனு) பரமாத்ம வாஸனை (ப்ரஜ்ஞா-அதி ஸங்கர்ஷணதஃ) புத்தியால் நன்ருகத் துலக்கப்படுவதால் (விசுத்தா) சுத்தமாகி (சந்தன கந்தவத்) சந்தனத்தின் வாஸனை போல் (ஸ்புடம்) தெளிவாக (ப்ரதீயதே) வெளிப்படுகிறது.

अनात्मवासना-जालै-स्तिरोभूतात्मवासना ।
नित्यात्मनिष्ठया तेषां नाशे भाति स्वयं स्फुटम्
॥ २७५ ॥

அனாத்ம-வாஸனா-ஜாலைஸ்-திரோபூதாத்ம-வாஸனா | நித்யாத்ம-நிஷ்ட்டயா தேஷாம் நாசே பாதி ஸ்வயம் ஸ்புடம் || 275 ||

275. (அனாத்ம-வாஸனா-ஜாலைஃ) ஆத்மாவல்லாதவற்றில் ஏற்பட்ட வாஸனைக் கூட்டங்களால் (திரோபூத) மறைக்கப்பட்ட (ஆத்மவாஸனா) ஆத்மவாஸனை (நித்ய-ஆத்ம-நிஷ்ட்டயா) இடைவிடாத ஆத்ம நிஷ்டையால் (தேஷாம்) அனாத்ம வாஸனையாகிய அவை (நாசே) அழிவுற்றபின் (ஸ்வயம்) தானாகவே (ஸ்புடம்) தெளிவாக (பாதி) பிரகாசிக்கிறது.

**அனாத்மவாஸனா**—'தம்போ தர்ப்போऽபிமானச்ச க்ரோதஃ பாருஷ்ய-மேவ ச | அஜ்ஞானஞ்சாபிஜாதஸ்ய பார்த்த ஸம்பதமாஸுரீம் ||' இடம்பம், கொழுப்பு, தற்புகழ்ச்சி, கோபம், கொடுஞ்சொல், மடமை இவையெல்லாம் அஸுரஸம்பத்துடன் பிறந்தவனுக்கு இயல்பாகின்றன. —கீ. 16.4.

இது அனாத்மவாஸனை.

यथा यथा प्रत्यगवस्थितं मन-
स्तथा तथा मुंचति बाह्यवासनाम् ।
निःशेषमोक्षे सति वासनाना-
मात्मानुभूतिः प्रतिबन्धशून्या ॥ २७६ ॥

யதா யதா ப்ரத்ய-கவஸ்திதம் மனஸ்-ததா ததா முஞ்சதி பாஹ்யவாஸனாம் | நிஃசேஷ மோக்ஷே ஸதி வாஸனானா-மாத்மானுபூதிஃ ப்ரதிபந்த-சூன்யா || 276 ||

276. (யதா யதா) எவ்வளவுக்கெவ்வளவு (ப்ரத்யக்) உள்நோக்கி (அவஸ்திதம்) நிலைபெற்றதாக (மனஃ) மனது ஆகிறதோ (ததா ததா) அவ்வளவுக்கவ்வளவு (பாஹ்யவாஸனாம்) வெளி வாஸனையை

(முஞ்சதி) விடுகிறது. (வாஸனானாம்) வாஸனைகளின் (நிঃ சேஷ) மிச்சமில்லாத (மோக்ஷே) நீக்கம் (ஸதி) ஏற்பட்டால் (ப்ரதிபந்தசூன்யா) தடையற்ற (ஆத்மானுபூதிঃ) ஆத்மானுபவம் ஏற்படுகிறது.

## अध्यासनिरासः

**स्वात्मन्येव सदा स्थित्या मनो नश्यति योगिनः ।**
**वासनानां क्षयश्चातः स्वाध्यासापनयं कुरु ॥ २७७ ॥**

**அத்த்யாஸநிராஸঃ**

ஸ்வாத்மன்யேவ ஸதா ஸ்தித்யா மனோ நச்யதி யோகினঃ | வாஸனானாம் க்ஷயச்சாதঃ ஸ்வாத்த்யாஸாபனயம் குரு || 277 ||

**அத்யாஸ-நீக்கம்**

277. (ஸ்வ-ஆத்மனி ஏவ) தானாகிய ஆத்மாவிலேயே (ஸதா) எப்பொழுதும் (ஸ்தித்யா) நிலைபெறுவதால் (மனঃ) மனது (யோகினঃ) யோகிக்கு (நச்யதி) அழிவடைகிறது. (வாஸனானாம்) வாஸனைகளின் (க்ஷயঃ ச) அழிவும்—ஏற்படுகிறது. (அதঃ) ஆகையால் (ஸ்வ-அத்த்யாஸ) ஆத்மாவின் மேல் ஏற்றப்பட்டுள்ளதின் (அபனயம்) நீக்கத்தை (குரு) செய்வாயாக.

ஸ்வாத்மன்யேவ ஸதா ஸ்தித்யா மனோ நச்யதி யோகினঃ || யுக்த்யா ச்ருத்யா ஸ்வானுபூத்யா ஜ்ஞாத்வா ஸார்வாத்ம்யமாத்மனঃ ||

—அத். உப. 4.

**तमो द्वाभ्यां रजः सत्त्वात्सत्त्वं शुद्धेन नश्यति ।**
**तस्मात्सत्त्वमवष्टभ्य स्वाध्यासापनयं कुरु ॥ २७८ ॥**

தமோ த்வாப்ப்யாம் ரஜঃ ஸத்வாத் ஸத்வம் சுத்தேன நச்யதி | தஸ்மாத் ஸத்வ-மவஷ்டப்ப்ய ஸ்வாத்த்யாஸாபநயம் குரு || 278 ||

278. (தம:) தமோ குணமானது (த்வாப்ப்யாம்) ஸத்வம் ரஜஸ்ஸாகிய இரண்டாலும் (நச்யதி) அழிகிறது; (ரஜ:) ரஜஸ்ஸானது (ஸத்வாத்) ஸத்துவத்தால்; (ஸத்வம்) ஸத்துவமோ (சுத்தேன)—நிர்க்குணத்தியானத்தால்—சுத்தமான பொழுது—அழிகிறது. (தஸ்மாத்) ஆகையால் ~~(ஸத்வம்)~~ (ஸத்வம்) ஸத்துவத்தை (அவஷ்டப்ப்ய) நிலையாகப் பற்றிக்கொண்டு ஸ்வ-அத்த்யாஸ-அபனயம்) உன்னிடமுள்ள அத்த்யாஸ நீக்கத்தை (குரு) செய்வாயாக.

प्रारब्धं पुष्यति वपुरिति निश्चित्य निश्चलः ।
धैर्य-मालम्ब्य यत्नेन स्वाध्यासापनयं कुरु ॥ २७९ ॥

ப்ராரப்தம் புஷ்யதி வபுரிதி நிச்சித்ய நிச்சல: |
தைர்ய-மாலம்ப்ய யத்னேன ஸ்வாத்த்யாஸாபனயம் குரு || 279 ||

279. (ப்ராரப்தம்) பிராரப்தம் எனப்படும் முன் வினைப்பயன் (வபு:) உடலை (புஷ்யதி) போஷித்துக் கவனித்துக்கொள்ளும் (இதி) என்று (நிச்சித்ய) மனதை திடப்படுத்திக்கொண்டு (நிச்சல:) கவலையில்லாமல் (தைர்யம்) தைரியத்தை (ஆலம்ப்ய) கைக்கொண்டு (யத்னேன) முயற்சியுடன் (ஸ்வ-அத்த்யாஸ-அபனயம்) உன்னிடமுள்ள அத்தியாஸ நீக்கத்தை (குரு) செய்வாயாக.

नाहं जीवः परं ब्रह्मेत्यतद्व्यावृत्ति-पूर्वकम् ।
वासनावेगतः प्राप्त-स्वाध्यासापनयं कुरु ॥ २८० ॥

நாஹம் ஜீவ: பரம் ப்ரஹ்மேத்-யதத்-வ்யாவ்ருத்தி-பூர்வகம் | வாஸனாவேகத: ப்ராப்த-ஸ்வாத்த்யாஸாபனயம் குரு || 280 ||

280. (அஹம்) நான் (ந ஜீவஃ) ஜீவனன்று (பரம் ப்ரஹ்ம) பரப் பிரம்மம் (இதி) என்ற—தியானத்தால் (அதத்-வ்யாவ்ருத்தி-பூர்வகம்) அனுத்ம சிந்தனையின் மூலம் (வாஸனு வேகதஃ) வாஸனை வேகத்தால் (ப்ராப்த) அடையப்பட்ட (ஸ்வ-அத்த்யாஸ-அபனயம்) உன்னிடமுள்ள அத்தியாஸ நீக்கத்தை (குரு) செய்வாயாக

श्रुत्या युक्त्या स्वानुभूत्या ज्ञात्वा सार्वात्म्य-मात्मनः ।
क्वचिदाभासतः प्राप्त-स्वाध्यासापनयं कुरु ॥ २८१ ॥

ச்ருத்யா யுக்த்யா ஸ்வானுபூத்யா ஜ்ஞாத்வா ஸார்வாத்ம்ய-மாத்மனஃ | க்வசிதாபாஸதஃ ப்ராப்தஸ்வாத்த்யாஸாபனயம் குரு || 281 ||

281. (ச்ருத்யா) சுருதியாலும் (யுக்த்யா) யுக்தியாலும் (ஸ்வ-அனுபூத்யா) சொந்த அனுபவத்தாலும் (ஆத்மனஃ) உன்னுடைய (ஸார்வாத்ம்யம்) எங்கும் நிறைந்த பரமாத்மத் தன்மையை (ஜ்ஞாத்வா) அறிந்து கொண்டு (க்வசித்) எங்கிருந்தோ (ஆபாஸதஃ) சைதன்யப் பிரதிபலனத்தால் (ப்ராப்த) அடையப் பட்ட (ஸ்வ-அத்யாஸ) உன்னிடமுள்ள அத்தியாஸத்தை (அபனயம் குரு) நீக்குவாயாக.

अनादान-विसर्गाभ्या-मीषन्नास्ति क्रिया मुनेः ।
तदेकनिष्ठया नित्यं स्वाध्यासापनयं कुरु ॥ २८२ ॥

அனுதான-விஸர்க்காப்ப்யா-மீஷந் நாஸ்தி க்ரியா முனேஃ | ததேக-நிஷ்ட்டயா நித்யம் ஸ்வாத்த்யாஸாபனயம் குரு || 282 ||

282. (அனுதான - விஸர்க்காப்ப்யாம்) கொள்ளுவதும் தள்ளுவதும் இன்மையால் (முனேஃ) ஞானிக்கு

(க்ரியா) செயல் என்பது (ஈஷத்) சிறிதும் (நாஸ்தி) இல்லை. (தத் ஏக நிஷ்ட்டயா) பரமாத்மாவிடம் வேறு சிந்தனையற்று நிலைபெறுதலால் (நித்யம்) இடைவிடாது (ஸ்வாத்த்யாஸ-அபனயம்) உன்னிடமுள்ள அத்தியாஸ நீக்கத்தைகுரு செய்வாயாக.

அனுஸந்தான-விஸர்க்காப்யாம் —பா. பே.

तत्त्वमस्यादि-वाक्योत्थ-ब्रह्मात्मैकत्व बोधतः ।
ब्रह्मण्यात्मत्व-दार्ढ्याय स्वाध्यासापनयं कुरु ॥ २८३ ॥

தத்-த்வமஸ்யாதி-வாக்யோத்த-ப்ரஹ்மாத்மைகத்வபோதத꞉ | ப்ரஹ்மண்யாத்மத்வ-தார்ட்யாய ஸ்வாத்த்யாஸாபனயம் குரு || 283 ||

283. (தத்-த்வமஸி ஆதி) (தத்-த்வ-மஸி) 'நீ அதுவாயுளாய்' முதலிய வாக்கியங்களினின்று உதித்த (ப்ரஹ்ம ஆத்ம-ஏகத்வ-) பிரம்மமும் ஜீவனும் ஒன்று என்ற (போதத꞉) அறிவால் (ப்ரஹ்மணி) பிரம்மத்திடம் (ஆத்மத்வ-தார்ட்யாய) ஆத்மா திடமாக நிலை பெறுதற்காக (ஸ்வாத்த்யாஸ-அபனயம்) உன்னிடமுள்ள அத்தியாஸ நீக்கத்தை (குரு) செய்வாயாக.

अहंभावस्य देहेऽस्मिन्निःशेष-विलयावधि ।
सावधानेन युक्तात्मा स्वाध्यासापनयं कुरु ॥ २८४ ॥

அஹம்பாவஸ்ய தேஹேऽஸ்மிந் நி꞉சேஷ-விலயாவதி | ஸாவதானேன யுக்தாத்மா ஸ்வாத்த்யாஸாபனயம் குரு || 284 ||

284. (அஸ்மின்) இந்த (தேஹே) உடலில் (அஹம் பாவஸ்ய) நான் என்ற எண்ணத்தின் (நி꞉சேஷ விலய-அவதி) அழிவானது மிச்சமின்றி ஏற்படும் வரை (ஸாவதானேன) கவனத்துடனும் (யுக்

தாத்மா) அடங்கிய சித்தத்துடனும் (ஸ்வ-அத்த்யாஸ-அபனயம்) உன்னிடமுள்ள அத்தியாஸ நீக்கத்தை (குரு) செய்வாயாக.

**प्रतीति-र्जीवजगतोः स्वप्नवद्भाति यावता ।**
**तावन्निरन्तरं विद्वन् स्वाध्यासापनयं कुरु ॥ २८५ ॥**

ப்ரதீதிர்-ஜீவஜகதோஃ ஸ்வப்னவத்பாதி யாவதா |
தாவந்நிரந்தரம் வித்வன் ஸ்வாத்த்யாஸா பனயம்குரு || 285 ||

285. (ஜீவ-ஜகதோஃ) ஜீவனும் உலகமுமாகிய இவ்விரண்டின் (ப்ரதீதிஃ) தோற்றம் (ஸ்வப்னவத்) கனவில் கண்டதைப்போல் (யாவதா) எப்பொழுது (பாதி) தோன்றுமோ (தாவத்) அதுவரை (நிரந்தரம்) இடைவிடாது (வித்வன்) வித்வானே! (ஸ்வாத்த்யாஸ-அபனயம்) உன்னிடமுள்ள அத்தியாஸ நீக்கத்தை (குரு) செய்வாயாக.

இதுவரை ஒன்பது சுலோகங்களில் அத்தியாஸ நீக்கத்தின் அவசியத்தைக் கூறி இனி (விஸ்ம்ருதி) மறதிக்கிடங் கொடாமலிருக்க வேண்டுமென்று உபதேசம்.

**निद्राया लोकवार्तायाः शब्दादेरपि विस्मृतेः ।**
**क्वचिन्नावसरं दत्वा चिन्तयात्मान-मात्मनि ॥ २८६ ॥**

நித்ராயா லோகவார்த்தாயாஃ சப்தாதேரபி விஸ்ம்ருதேஃ | க்வசிந்நாவஸரம் தத்வா சிந்தயாத்மான-மாத்மனி || 286 ||

286. (நித்ராயாஃ) உறக்கத்திலிருந்தும் (லோக வார்த்தாயாஃ) உலக வியாபாரத்திலிருந்தும் (சப்தாதேஃ) சப்தம் முதலிய விஷயங்களிலிருந்தும்—ஏற்படக்கூடிய—(விஸ்ம்ருதேஃ) ஆத்ம மறதிக்கு (க்வசித்)

சிறிதும் (அவஸரம்) அவகாசம் (ந தத்வா) கொடுக்காமல் (ஆத்மானம்) உண்மையான ஆத்மஸ்வரூபத்தை (ஆத்மனி) புத்தியில் (சிந்தய) சிந்திப்பாயாக.

ஒ. 'ஸ்பர்சான் க்ருத்வா பஹிர்-பாஹ்யான்' புறம்பேயுள்ள விஷய நுகர்ச்சிகளைப் புறம்பே:வைத்து. —கீ. 5.27.

**मातापित्रो-र्मलोद्भूतं मलमांसमयं वपुः ।**
**त्यक्त्वा चाण्डालवद्दूरं ब्रह्मीभूय कृती भव ॥ २८७ ॥**

மாதா - பித்ரோர்-மலோத்பூதம் மலமாம்ஸமயம் வபு: | த்யக்த்வா சாண்டாலவத்தூரம் ப்ரஹ்மீபூய க்ருதீ பவ || 287 |

287. (மாதா பித்ரோ:) தாய் தந்தையின் (மல-உத்பூதம்) மலத்திலிருந்து தோன்றியதும் (மல-மாம்ஸ-மயம்) மல மாம்ஸ வடிவாகியதுமான (வபு:) உடலை (சாண்டாலவத்) தீண்டத்தகாததைப் போல் (தூரம்) தூரத்தில் (த்யக்த்வா) தள்ளிவிட்டு (ப்ரஹ்மீ பூய) பிரம்ம பாவனையில் நிலைபெற்று (க்ருதீ) செய்யவேண்டியதைச் செய்தவனாக (பவ) ஆவாய்.

ஒ. அத். உப. 6.

**घटाकाशं महाकाश इवात्मानं परात्मनि ।**
**विलाप्याखण्डभावेन तूष्णीं भव सदा मुने ॥ २८८ ॥**

கடாகாசம் மஹாகாச இவாத்மானம் பராத்மனி | விலாப்யாகண்ட - பாவேன தூஷ்ணீம் பவ ஸதா முனே || 288 ||

288. (முனே) முனிவனே (கட-ஆகாசம்) குடத்திலுள்ள ஆகாயம் (மஹா ஆகாசே) பேராகாயத்தில் (இவ) கலப்பது போல் (ஆத்மானம்) ஜீவாத்மாவை (பர-ஆத்மனி) பரமாத்மாவில் (விலாப்ய) லயிக்கச்

செய்து (அகண்ட பாவேன) அபேத பாவனையுடன் (ஸதா) எப்பொழுதும் (தூஷ்ணீம்) மௌனமாக (பவ) இருப்பாயாக.

மௌனமாக இரு—செய்ய வேண்டியது ஏது மில்லாமையால்.

ஒ. இதை அறிந்து ஒருவன் புத்திமானுகவும் (க்ருதக்ருத்யனுகவும்) செய்ய வேண்டிய கருமத்தைச் செய்து முடித்தவனுகவும் ஆகிருன். —கீ. 15.20.

ஒ. அத். உப. 27.

**स्वप्रकाश-मधिष्ठानं स्वयंभूय सदात्मना ।**
**ब्रह्माण्डमपि पिण्डाण्डं त्यज्यतां मलभाण्डवत् ॥ २८९ ॥**

ஸ்வப்ரகாச-மதிஷ்ட்டானம் ஸ்வயம்பூய ஸதாத்மனு | ப்ரஹ்மாண்டமபி பிண்டாண்டம் த்யஜ்யதாம் மல-பாண்டவத் || 289 ||

289. (ஸ்வப்ரகாசம்) அறிவு வடிவில் தானே பிரகாசிப்பதும் (அதிஷ்ட்டானம்) அடிப்படையாயும் உள்ள (ஸதாத்மனு) ஸத் ரூபமான ஆத்மாவாக (ஸ்வயம் பூய) நீயாகி (பிண்ட-அண்டம்) பிண்டமாகிய உடலேயும் (ப்ரஹ்மாண்டமபி) பிரம்மாண்டமாகிய உலகத்தையும் கூட (மலபாண்டவத்) மலச்சட்டியைப் போல் (த்யஜ்யதாம்) ஒதுக்கிவிடுவாயாக.

ஒ. அத். உப. 8.

**चिदात्मनि सदानन्दे देहारूढा-महंधियम् ।**
**निवेश्य लिंग-मुत्सृज्य केवलो भव सर्वदा ॥ २९० ॥**

சிதாத்மனி ஸதானந்தே தேஹாருடா-மஹம்தியம் | நிவேச்ய லிங்கமுத்ஸ்ருஜ்ய கேவலோ பவ ஸர்வதா || 290 ||

290. (ஸதா-ஆனந்தே) எப்பொழுதும் ஆனந்த வடிவாயிருக்கும் (சிதாத்மனி) ஸ்வயம் பிரகாசமான ஆத்மாவில் (தேஹ-ஆரூடாம்) உடலில் ஏறி நிற்கும் (அஹம்தியம்) நான் என்ற எண்ணத்தை (நிவேச்ய) புகச்செய்து (லிங்கம்) ஸூக்ஷ்ம சரீரத்தையும் (உத்ஸ்ருஜ்ய) உதறித் தள்ளிவிட்டு (ஸர்வதா) எக்காலத்தும் (கேவலஃ) எதிலும் பற்றற்ற ஆத்மாவாக (பவ) ஆவாயாக.

ஒ. 'அனேன ஜ்ஞான-மாப்னோதி ஸம்ஸாரார்ணவ-நாசனம் | தஸ்மா-தேவம் விதித்வைனம் கைவல்யம் பரமச்னுதே ||' பிறவிக் கடலை வற்றச் செய்யும் ஞானத்தை இதனால் ஒருவனடைகிறான். ஆதலால் இங்ஙனம் இதையறிந்தே ஒருவன் கைவல்யம் எனும் உத்தம நிலையை எய்துகிறான். —கைவல்ய உப. 24.

यत्रैष जगदाभासो दर्पणान्तः पुरं यथा ।
तद्ब्रह्माहमिति ज्ञात्वा कृतकृत्यो भविष्यसि ॥ २९१ ॥

யத்ரைஷ ஜகதாபாஸோ தர்ப்பணாந்தஃபுரம் யதா |
தத் ப்ரஹ்மாஹமிதி ஜ்ஞாத்வா க்ருதக்ருத்யோ பவிஷ்யஸி || 291 ||

291. (யத்ர) எங்கு (ஏஷஃ) இந்த (ஜகத்-ஆபாஸஃ) உலகமாகிற தோற்றம் (தர்ப்பண-அந்தஃ) கண்ணாடியினுள்ளே (புரம் யதா) பட்டணத்தைப் போல் உளதோ (தத்) அந்த (ப்ரஹ்ம) பிரம்மம் (அஹம் இதி) நான் என்று (ஜ்ஞாத்வா) அறிந்து கொண்டால் (க்ருதக்ருத்யஃ) செய்யவேண்டியதைச் செய்தவனாக (பவிஷ்யஸி) ஆய்விடுவாய்.

விச்வம் தர்ப்பண-த்ருச்யமான-நகரீ-துல்யம் நிஜாந்தர்கதம் பச்யன்னாத்மனி மாயயா பஹிரிவோத்பூதம் யதா நித்ரயா | யஃ

ஸாக்ஷாத் குருதே ப்ரபோத-ஸமயே ஸ்வாத்மான-மேவாத்வயம்
தஸ்மை ஸ்ரீகுருமூர்த்தயே நம இதம் ஸ்ரீதக்ஷிணாமூர்த்தயே ||

—சங். தக்ஷிணாமூர்த்திதோத்ரம்.

ஒ. அத். உப. 10.

**यत्सत्यभूतं निजरूपमाद्यं चिदद्वयानन्द-मरूपमक्रियम् ।**
**तदेत्य मिथ्यावपुरुत्सृजेत शैलूषवद्वेष-मुपात्तमात्मनः ॥ २९२ ॥**

யத்ஸத்ய பூதம் நிஜரூப-மாத்யம் சிதத்வயானந்த-மரூப-மக்ரியம் | ததேத்ய மித்யா-வபுருத்ஸ்ருஜேத சைலூஷவத் வேஷ-முபாத்தமாத்மனঃ || 292 ||

292. (யத்) எது (ஸத்ய பூதம்) உண்மையானதோ (ஆத்யம்) ஆதியில் உள்ளதோ (நிஜரூபம்) சொந்தமான ஸ்வரூபமோ (சித்-) அறிவுமயமாயும் (அத்வய-) இரண்டற்றதாயும் (ஆனந்தம்) ஆனந்தமயமாயும் (அரூபம்) ரூபமற்றதாயும் (அக்ரியம்) செயலற்றதாயும் உளதோ (தத்) அதை (ஏத்ய) அடைந்து (ஆத்மன உபாத்தம்) தன்மேலே ஏற்றிக் கொள்ளப்பட்ட வேஷம்) வேஷத்தை (சைலூஷவத்) நடிகன் களைவதைப் போல் (மித்யாவபுঃ) பொய்யுடலை (உத்ஸ்ருஜேத) —தான் என்று எண்ணுவதை—விட்டு விடவேண்டும்.

வபுருத்ஸ்ருஜைதத் —பா. பே.

## अहं पदार्थनिरूपणम्

**सर्वात्मना दृश्यमिदं मृषैव**
**नैवाहमर्थः क्षणिकत्वदर्शनात् ।**
**जानाम्यहं सर्वमिति प्रतीतिः**
**कुतोऽहमादेः क्षणिकस्य सिध्येत् ॥ २९३ ॥**

**அஹம் பதார்த்த நிரூபணம்**

ஸர்வாத்மனு த்ருச்யமிதம் ம்ருஷைவ நைவாஹ-
மர்த்தஃ க்ஷணிகத்வ-தர்சனுத் ஜாநும்யஹம் ஸர்வ-
மிதி ப்ரதீதிஃ குதோ ऽஹமாதேஃ க்ஷணிகஸ்ய ஸித்த்
யேத் || 293 ||

**'நான்' என்ற சொல்லின் பொருள் விளக்கம்**

293. (த்ருச்யம்) காணப்படும் (இதம்) இது (ஸர்வாத்மனு) எல்லாவகையிலும் (ம்ருஷா ஏவ) பொய்யே (க்ஷணிகத்வ-தர்சனுத்)—இது நான்' என்று காண்பதெல்லாம்—நொடிப்பொழுதே காணப்படுவதால் (அஹம் அர்த்தஃ) நான் என்பதின் பொருளாக (ந ஏவ) அது இருக்க இயலாது. (அஹம்) நான் (ஸர்வம்) அனைத்தையும் (ஜாநுமி) அறிகிறேன் (இதி) என்ற (ப்ரதீதிஃ) திடமான அறிவு (க்ஷணிகஸ்ய) நொடிப்பொழுது மாத்திரமிருக்கும் (அஹம் ஆதேஃ) நான் முதலியவற்றிற்கு (குதஃ ஸித்த்யேத்) எங்ஙனம் சித்திக்கும்?

अहंपदार्थस्त्वहमादि-साक्षी
नित्यं सुषुप्तावपि भावदर्शनात् ।
ब्रूते ह्यजो नित्य इति श्रुतिः स्वयं
तत्प्रत्यगात्मा सदसद्विलक्षणः ॥ २९४ ॥

அஹம் பதார்த்தஸ்த்-வஹமாதி ஸாக்ஷீ நித்யம் ஸுஷுப்தா வபி பாவதர்சனுத் | ப்ரூதே ஹ்யஜோ நித்ய இதி ச்ருதிஃ ஸ்வயம் தத் ப்ரத்யகாத்மா ஸதஸத்விலக்ஷணஃ || 294 ||

294. (அஹம் பத-அர்த்தஃ து) அஹம் பதத்தின் பொருள் எது எனின் (அஹம்-ஆதி-ஸாக்ஷீ) அஹங்

காரம் உள்ளான திருச்ய ப்ரபஞ்சம் அனைத்திற்கும் ஸாக்ஷியாயிருப்பது; (ஸுஷுப்தௌ அபி) உறக்கத்திலும் (பாவதர்சனாத்) ஸாக்ஷியான அஹத்திற்கு இருப்புக் காணப்படுவதால் (நித்யம்) அது எப்பொழுதும் எல்லா நிலையிலும் உள்ளது. (ச்ருதிः ஸ்வயம்) சுருதியும் தான் (அஜः) பிறப்பற்றது (நித்யः) என்றுமுளது (இதி) என்று (ப்ரூதே ஹி) கூறவில்லையா? (தத்) அதுதான் (ப்ரத்யகாத்மா) அந்தராத்மா (ஸத்-அஸத்-விலக்ஷணः) ஸத்தென்றும் அஸத்தென்றும் கூற முடியாதது.

ஒ. அஜோ நித்யः சாச்வதோயம் புராணோ ந ஹன்யதே ஹன்யமானே சரீரே —கட. உப. 2.18.

विकारिणां सर्वविकार-वेत्ता
नित्योऽविकारो भवितुं समर्हति ।
मनोरथ-स्वप्न-सुषुप्तिषु स्फुटं
पुनः पुन-र्दृष्ट-मसत्त्वमेतयोः ॥ २९५ ॥

விகாரிணாம் ஸர்வவிகார-வேத்தா நித்யோऽவிகாரோ பவிதும் ஸமர்ஹதி | மனோரத-ஸ்வப்ன-ஸுஷுப்திஷு ஸ்புடம் புனः புனர்-த்ருஷ்ட-மஸத்வ மேதயோः ‖ 295 ‖

295. (விகாரிணாம்) மாறுபடும் உடல் முதலியவற்றின் (ஸர்வ-விகார) எல்லா மாறுபாடுகளையும் (வேத்தா) அறியும் இது (நித்ய: அவிகாரः) என்றுமுளதாகவும் மாறுபடாததாகவும் (பவிதும்) இருப்பதற்கு (ஸமர்ஹதி) உரிமையுடையது. (மனோரத-ஸ்வப்ன-ஸுஷுப்திஷு) பகற் கனவிலும், கனவிலும், உறக்கத்திலும் (ஸ்புடம்) தெளிவாக (புனः புனः) மீண்டும் மீண்டும் (ஏதயோः) உடலும் அதில் நான் என்ற

அபிமானமுமாகிய இவ்விரண்டின் (அஸத்வம்) பொய்மை (த்ருஷ்டம்) காணப்பட்டுள்ளது.

**अतोऽभिमानं त्यज मांसपिण्डे**
**पिण्डाभिमानिन्यपि बुद्धिकल्पिते ।**
**कालत्रयाबाध्य-मखण्डबोधं**
**ज्ञात्वा स्वमात्मान-मुपैहि शान्तिम् ॥ २९६ ॥**

அதோऽபிமானம் த்யஜ மாம்ஸ-பிண்டே பிண்டாபி-மானின்யபி புத்தி-கல்பிதே | காலத்ரயாபாத்ய-மகண்ட-போதம் ஜ்ஞாத்வா ஸ்வமாத்மான-முபைஹி சாந்திம் || 296 ||

296. (அதः) ஆகையால் (மாம்ஸபிண்டே) மாம்ஸபிண்டமாகிய சரீரத்திலும் (புத்தி கல்பிதே) புத்தியால் கல்பிக்கப்பட்ட (பிண்ட-அபிமானினி அபி) பிண்ட அபிமானியாகிய ஜீவனிடத்திலும் (அபிமானம்) நான் என்ற எண்ணத்தை (த்யஜ) விட்டொழிப்பாயாக. (காலத்ரய) முக்காலத்திலும் (அபாத்யம்) அழிவற்றதும் (அகண்ட போதம்) பிளவுபடாத அறிவுமயமானதுமான (ஸ்வம் ஆத்மானம்) உனது ஆத்மாவை (ஜ்ஞாத்வா) அறிந்து கொண்டு (சாந்திம்) சாந்தியை (உபைஹி) அடைவாயாக.

**त्यजाभिमानं कुलगोत्रनाम-रूपाश्रमेष्वार्द्र-शवाश्रितेषु ।**
**लिंगस्य धर्मानपि कर्तृतादीं-स्त्यक्त्वा भवाखण्ड-सुखस्वरूपः**
**॥ २९७ ॥**

த்யஜாபிமானம் குலகோத்ர-நாம-ரூபாச்ரமேஷ்-வார்த்ர-சவாச்ரிதேஷு | லிங்கஸ்ய தர்மானபி கர்த்ருதாதீம்ஸ்த்யக்த்வா பவாகண்ட-ஸுகஸ்வரூபः || 297 ||

297. (ஆர்த்ர-சவ-ஆச்ரிதேஷு) கசிவுள்ள பிணம் போன்ற உடலைப்பற்றிய (குல) குலம் (கோத்ர) கோத்ரம் (நாம) பெயர் (ரூப) வடிவம் (ஆச்ரமேஷு) ஆசிரமம் முதலியவற்றில் (அபிமானம்) அபிமானத்தை (த்யஜ) விட்டொழிக. (கர்த்ருதா-ஆதீன்) செய்தல் அனுபவித்தல் முதலிய (லிங்கஸ்ய தர்மான் அபி) ஸூக்ஷ்ம சரீர தர்மங்களையும் (த்யக்த்வா) ஒழித்து (அகண்டஸுகஸ்வரூபः) எல்லை யில்லாத இன்ப வடிவினனாக (பவ) ஆவாயாக.

ஒ. நாஹங்தேஹோ நேந்த்ரியாண்யந்தரங்கம் நாஹங்காரः ப்ராணவர்க்கோ ந புத்திः । த்ாராऽபத்ய-க்ஷேத்ரவித்தாதிதூரः ஸாக்ஷீ நித்யः ப்ரத்யகாத்மா சிவோऽஹம் ॥ —சங்.

## अहंकारनिन्दा

सन्त्यन्ये प्रतिबन्धाः पुंसः संसारहेतवो दृष्टाः ।
तेषामेकं मूलं प्रथमविकारो भवत्यहंकारः ॥ २९८ ॥

### அஹங்காரநிந்தா

ஸந்த்யன்யே ப்ரதிபந்தாः பும்ஸः ஸம்ஸார-ஹேதவோ த்ருஷ்டாः | தேஷா-மேகம் மூலம் ப்ரதமவிகாரோ பவத்யஹங்காரः || 298 ||

### அஹங்காரநிந்தை

298. (பும்ஸः) புருஷனுக்கு (ஸம்ஸாரஹேதவः த்ருஷ்டாः) பிறவிப் பிணிக்குக் காரணங்களாகக் காணப்பட்ட (அன்யே) வேறு (ப்ரதிபந்தாः) தடைகளும்—ராகத்வேஷம் முதலியவை—(ஸந்தி) இருக்கின்றன. (தேஷாம்) அவைகட்கெல்லாம் (ப்ரதம விகாரः) அஞ்ஞானத்தின் முதல் அவதாரமாகிய (அஹங்காரः) அஹங்காரம் (ஏகம் மூலம்) ஒன்றே வேர் போன்றது.

यावत्स्यात्स्वस्य सम्बन्धोऽहंकारेण दुरात्मना ।
तावन्न लेशमात्रापि मुक्तिवार्ता विलक्षणा ॥ २९९ ॥

யாவத்ஸ்யாத் ஸ்வஸ்ய ஸம்பந்தோऽஹங்காரேண துராத்மனு | தாவந் ந லேச-மாத்ராபி முக்திவார்த்தா விலக்ஷணு || 299 ||

299. (யாவத்) எதுவரை (துராத்மனு) எல்லாக் கெடுதல்களுக்கும் காரணமான (அஹங்காரேண) அஹங்காரத்துடன் (ஸ்வஸ்ய) ஒருவனுக்கு (ஸம்பந்தஃ) தொடர்பு (ஸ்யாத்) உண்டோ (தாவத்) அதுவரை (விலக்ஷணு) அதினின்று முற்றும் பிரிதாயுள்ள (முக்தி வார்த்தா) முக்தியைப் பற்றிய பேச்சுக்கு (லேச-மாத்ரா-அபி ந) கொஞ்சங் கூட இடமில்லை.

अहंकारग्रहान्मुक्तः स्वरूपमुपपद्यते ।
चन्द्रवद्विमलः पूर्णः सदानन्दः स्वयंप्रभः ॥ ३०० ॥

அஹங்காரக்ரஹான்-முக்தஃ ஸ்வரூப-முபபத்யதே | சந்த்ரவத்விமலஃ பூர்ணஃ ஸதானந்தஃ ஸ்வயம்ப்ரபஃ || 300 ||

300. (அஹங்காரக்ரஹாத்) அஹங்கார க்ரஹமாகிய அதன் பிடிப்பிலிருந்து (முக்தஃ) விடுபட்டவன் (ஸ்வ-ஸ்வரூபம்) தன் ஸ்வரூபத்தை (உப்பத்யதே) மீண்டும் அடைகிருன். (சந்த்ரவத் விமலஃ பூர்ணஃ) —ராஹுவின் பீடையிலிருந்து விடுபட்ட—சந்திரன் மாசற்றுப் பூர்ணமாய் விளங்குவது போல் (ஸதானந்தஃ) இயற்கையாயுள்ள இன்ப வடிவினனும் (ஸ்வயம்ப்ரபஃ) ஸ்வயம் பிரகாசமான அறிவுடையவனும் விளங்குவான்.

'ராஹுக்ரஸ்த-திவாகரேந்து-ஸத்ருசோ மாயாஸமாச்சாதனத்'
—சங். தக்ஷிணுமூர்த்தி ஸ்தோத்ரம். ௭.

ஒ. அத். உப. 11.

योवा पुरे सोऽहमिति प्रतीतो
बुद्ध्या प्रक्लृप्तस्तमसाऽतिमूढया ।
तस्यैव निःशेषतया विनाशे
ब्रह्मात्मभावः प्रतिबन्धशून्यः ॥ ३०१ ॥

யோ வா புரே ஸோऽஹமிதி ப்ரதீதோ புத்த்யா ப்ரக்லுப்தஸ் தமஸாऽதி-மூடயா | தஸ்யைவ நிஃசேஷ தயா விநாசே ப்ரஹ்மாத்மபாவஃ ப்ரதிபந்த-சூன்யஃ || 301 ||

301. (தமஸா) அக்ஞானமாகிற இருளால் (அதி மூடயா) மிகுதியும் மறைக்கப்பட்ட (புத்த்யா) புத்தியால் (ப்ரக்லுப்தஃ) கற்பனை செயப்பட்டு (புரே) சரீரத்தில் (ஸஃ-அஹம் இதி) அது நான் என்று (யஃ) எவன் (ப்ரதீதஃ வா) பிரசித்தமாய் விளங்கினனோ (தஸ்ய) அவனுக்கு (நிஃ சேஷதயா) மிச்சமில்லாத (விநாசே ஏவ) அழிவு ஏற்பட்ட பின்பே (ப்ரதிபந்த சூன்யஃ) தடையில்லாத (ப்ரஹ்மாத்ம பாவஃ) ப்ரஹ்மாத்ம ஞானம் ஏற்படும்.

யோ வா புரைஷோऽஹமிதி ப்ரதீதோ புத்த்யாऽவிவிக்தஸ்-தமஸாऽதிமூடயா ।
—பா. பே.

ब्रह्मानन्दनिधि-र्महाबलवताऽहंकारघोराहिना
संवेष्ट्यात्मनि रक्ष्यते गुणमयैश्चण्डै-स्त्रिभि-र्मस्तकैः ।
विज्ञानाख्य-महासिना द्युतिमता विच्छिद्य शीर्षत्रयं
निर्मूल्याहिमिमं निधिं सुखकरं धीरोऽनुभोक्तुं क्षमः
॥ ३०२ ॥

ப்ரஹ்மானந்த-நிதிர் - மஹா-பலவதா ऽஹங்கார-கோராஹினு ஸம்வேஷ்ட்யாத்மனி ரக்ஷ்யதே குண மயைச் சண்டை-ஸ்த்ரிபிர்-மஸ்தகைঃ | விஜ்ஞானக்ய-மஹாஸினு த்யுதிமதா விச்சித்ய சீர்ஷத்ரயம் நிர்மூல் யாஹி-மிமம் நிதிம் ஸுககரம் தீரோனுபோக்தும் க்ஷமঃ || 302 ||

302. (ப்ரஹ்மானந்த-நிதி:) பிரம்மானந்தம் எனும் புதையல் நிதி (குணமயைঃ) குணமயமானதும் (சண்டைঃ) பயங்காரமானதுமான (த்ரிபிঃ மஸ்தகைঃ) மூன்று தலைகளால் (ஆத்மனி) தன்னிடத்தில் (ஸம் வேஷ்ட்ய) நன்கு சுருட்டி மறைத்து (மஹாபலவதா) மிகுந்த பலம் பொருந்திய (அஹங்கார-கோர-அஹினு) அஹங்காரம் எனும் கொடிய ஸர்ப்பத்தால் (ரக்ஷ்யதே) காக்கப்பட்டுள்ளது. (த்யுதிமதா) பிரகாசம் பொருந்திய (விஜ்ஞான-ஆக்ய) விக்ஞானம் என்று சொல்லப்பட்ட (மஹா-அஸினு) சிறந்த வாளால் (சீர்ஷத்ரயம்) மூன்று தலைகளையும் (விச்சித்ய) வெட்டித்தள்ளி (அஹிம்) ஸர்ப்பத்தை (நிர்மூல்ய) அடியோடழித்த பின் (ஸுககரம்) இன்பத்தைத் தரக்கூடிய (இமம்) இந்த (நிதிம்) நிதியை (தீரঃ) புத்திசாலியானவன் (அனுபோக்தும்) அனுபவிப்பதற்கு (க்ஷமঃ) திறமை யுடையவனுவான்.

மூன்றுதலைகள்—முக்குணங்கள்.

த்யுதிமதா—'ச்ருதிமதா' என்று பாடபேதம்.

ஒ. 'யதா ஹிரண்யநிதிம் அக்ஷேத்ரஜ்ஞா உபர்யுபரி ஸஞ்சரந்தோ ந விந்தேயுঃ' எங்ஙனம் பொற்குவியல் புதைத்து வைக்கப்பட்டதை அறியாதவர்கள் அவ்விடத்தின் மேல் அடிக்கடி நடமாடுபவர்களாயினும் அறிவதில்லையோ அப்படி. —சா. உப. 8. 32.

**यावद्वा यत्किंचिद्विषदोषस्फूर्तिरस्ति चेद्देहे ।**
**कथमारोग्याय भवेत्तद्वदहन्तापि योगिनो मुक्त्यै ॥ ३०३ ॥**

யாவத்வா யத்கிஞ்சித் விஷ-தோஷ ஸ்பூர்த்தி ரஸ்தி சேத் தேஹே | கதமாரோக்யாய பவேத் தத்வதஹந்தாபி யோகினோ முக்த்யை || 303 ||

303. (யாவத் வா) எவ்வளவு காலம் (யத் கிஞ்சித்) ஒரு சிறிதேனும் (விஷ தோஷ) விஷ தோஷத்தின் (ஸ்பூர்த்திஃ) தோற்றம் (தேஹே) உடலில் (அஸ்தி சேத்) இருக்குமாகில்—அது வரை—(கதம்) எங்ஙனம் (ஆரோக்யாய) ஆரோக்கியத்திற்குத் தகுதியுடையவனாக (பவேத்) ஒருவன் ஆவான்? (தத்வத்) அவ்வாறே (அஹந்தா அபி) அஹங்காரமும் (யோகினஃ) யோகிக்கு (முக்த்யை) முக்தி மார்க்கத்தில்—விஷம் போன்றதாகும்.

**अहमोऽत्यन्त-निवृत्त्या तत्कृत-नानाविकल्प-संहृत्या ।**
**प्रत्यक्तत्त्वविवेका-दयमह-मस्मीति विन्दते तत्त्वम् ॥ ३०४ ॥**

அஹமோऽத்யந்த-நிவ்ருத்த்யா தத்க்ருத-நாநா-விகல்ப-ஸம்ஹ்ருத்யா || ப்ரத்யக் தத்வ-விவேகா-தய-மஹ-மஸ்மீதி விந்ததே தத்வம் || 304 ||

304. (அஹமஃ) அஹங்காரத்தின் (அத்யந்த-நிவ்ருத்யா) அழிவாலும் (தத்க்ருத) அதன் செயலான (நானா விகல்ப) பல வகைப்பட்ட கல்பனைகளின் (ஸம்ஹ்ருத்யா) நாசத்தாலும் (ப்ரத்யக்-தத்வ-விவேகாத்) உள்ளுரையும் ஆத்ம தத்துவத்தின் பகுத்தறிவாலும் (அயம் அஹம் அஸ்மி இதி) நான் இது வாயிருக்கின்றேன் என்ற (தத்வம்) உண்மை விளக்கத்தை (விந்ததே) ஒருவன் அடைகிறான்.

**விவேகாதிதமஹமஸ்மீதி** —பா. பே.

अहं-कर्तर्यस्मिन्नहमिति मतिं मुंच सहसा
विकारात्मन्यात्म-प्रतिफलजुषि स्वस्थितिमुषि ।
यदध्यासात्प्राप्ता जनिमृति-जरादुःखबहुला
प्रतीचश्चिन्मूर्तेस्तव सुखतनोः संसृतिरियम् ॥ ३०५ ॥

அஹங்கர்த்தாயஸ்மின்னஹமதி மதிம் முஞ்ச ஸஹஸாவிகாராத்மன்யாத்ம-ப்ரதிபலஜுஷிஸ்வஸ்திதி-முஷி | யதத்யாஸாத் ப்ராப்தா ஜனிம்ருதி-ஜரா-துஃக்க-பஹுலா ப்ரதீசச்-சின்மூர்த்தேஸ்-தவ ஸுக-தனோஃ ஸம்ஸ்ருதி-ரியம் || 305 ||

305. (ஸ்வஸ்திதி-முஷி) தன்னிலையைத் திருடுவதும் (ஆத்ம-ப்ரதிபல ஜுஷி) ஆத்ம பிரதிபிம்ப மாத்திரமாயிருப்பதும் (விகார-ஆத்மனி) ஸூக்ஷ்ம பூதங்களின் விகாரமாயிருப்பதுமான (அஹங்கர்த்தரி) அஹங்காரமாகிய (அஸ்மின்) இந்த அனாத்மாவில் (அஹம் இதி) இது தான் நான் என்ற (மதிம்) எண்ணத்தை (ஸஹஸா) விரைவில் (முஞ்ச) விட்டொழிப்பாயாக. (யத்-அத்யாஸாத்) இந்த அத்தியாஸமாகிய மதிமயக்கத்தால் தான் (ஸுகதனோஃ) இன்ப வடிவானவனும் (ப்ரதீசஃ சின்மூர்த்தேஃ) உள்ளே உறையும் அறிவு வடிவானவனுமான (தவ) உனக்கு (ஜனி) பிறப்பு (ம்ருதி) இறப்பு (ஜரா) மூப்பு (துஃக்க) துன்பம் (பஹுலா) மிகுந்த (இயம்) இந்த (ஸம்ஸ்ருதிஃ) ஸம்ஸார பந்தம் (ப்ராப்தா) ஏற்பட்டுள்ளது.

सदैकरूपस्य चिदात्मनो विभो-रानन्दमूर्ते-रनवद्यकीर्तेः ।
नैवान्यथा क्वाप्यविकारिणस्ते विनाहमध्यास-ममुष्य संसृतिः
॥ ३०६ ॥

ஸதைக-ரூபஸ்ய சிதாத்மனே விபோ-ரானந்த மூர்த்தே-ரனவத்ய-கீர்த்தேஃ | நைவான்யதா க்வாப்-யவிகாரிணஸ்தே விநா-ஹமத்யாஸ-மமுஷ்ய ஸம்ஸ் ருதிஃ || 306 ||

306. (ஸதா) எப்பொழுதும் (ஏகரூபஸ்ய) ஒரே வடிவாயிருப்பவனும் (சித்-ஆத்மனஃ) அறிவு மயமாகியவனும் (விபோஃ) எங்கும் நிறைந்தவனும் (ஆனந்த மூர்த்தேஃ) ஆனந்த ஸ்வரூபனும் (அனவத்ய-கீர்த்தேஃ) குற்றங் குறையற்றவனெனச் சுருதியில் புகழப் பட்டவனும் (அவிகாரிணஃ) மாறுபாடில்லாதவனும் ஆகிய (தே) உனக்கு (அஹம்-அத்யாஸம் விநா) இந்த அஹங்கார அத்யாஸ மில்லாமல் (அன்யதா) வேறு வகையில் (க்வ அபி) எங்கிருந்தும் (அமுஷ்ய ஸம்ஸ்ருதிஃ) இதனுடைய ஸம்ஸாரபந்தம் (ந ஏவ) இல்லவே இல்லை.

**तस्मादहंकार-मिमं स्वशत्रुं भोक्तुर्गले कण्टकवत्प्रतीतम् ।**
**विच्छिद्य विज्ञान-महासिना स्फुटं भुंक्ष्वात्म-साम्राज्य-सुखं यथेष्टम् ॥ ३०७ ॥**

தஸ்மா-தஹங்கார-மிமம் ஸ்வசத்ரும் போக்துர்-கலே கண்டகவத் ப்ரதீதம் | விச்சித்ய விஜ்ஞான-மஹாஸினா ஸ்புடம் புங்க்ஷ்வாத்ம-ஸாம்ராஜ்ய ஸுகம் யதேஷ்டம் || 307 ||

307. (தஸ்மாத்) ஆகையால் (அஹங்காரம்) அஹங்காரமெனும் (இமம்) இந்த (ஸ்வசத்ரும்) உன் சத்துருவை, (போக்துஃ) சாப்பிடுபவனின் (கலே) தொண்டையில் (கண்டகவத்) முள்ளைப்போல் (ப்ரதீதம்) இருப்பதை, (விஜ்ஞான) தெளிந்த ஞானமாகிற (மஹா-அஸினா) சிறந்த கத்தியால் (விச்சித்ய) நாசம்

செய்து (ஸ்புடம்) நன்ருக (யதேஷ்டம்) இஷ்டப்படி (ஆத்ம - ஸாம்ராஜ்ய - ஸுகம்) பிறர்க்கடிமைப்படாத ஆத்மானந்தத்தை (புங்க்ஷ்வ) அனுபவிப்பாயாக.

**ततोऽहमादे-र्विनिवर्त्य वृत्तिं संत्यक्तरागः परमार्थलाभात् ।**
**तूष्णीं समास्स्वात्मसुखानुभूत्या पूर्णात्मना ब्रह्मणि निर्विकल्पः**
**॥ ३०८ ॥**

ததோऽஹமாதேர்-விநிவர்த்ய வ்ருத்திம் ஸந்த்யக்த-ராகஃ பரமார்த்த-லாபாத் | தூஷ்ணீம் ஸமாஸ்வாத்ம-ஸுகானுபூத்யா பூர்ணுத்மனு ப்ரஹ்மணி நிர்விகல்பஃ || 308 ||

308. (ததஃ) அஹங்காரம் நாசமான பின்னர், (அஹமாதேஃ) அஹங்காரம் முதலியவற்றினின்று உண்டான (வ்ருத்திம்) மனுேவியாபாரத்தை (விநிவர்த்ய) நீக்கி (பரமார்த்த-லாபாத்) உயர்ந்த ஆனந்த லாபத்தால் (ஸந்த்யக்தராகஃ) அற்ப விஷயங்களின் பற்று அறவே நீங்கியவனுய் (ஆத்ம ஸுக-அனுபூத்யா) ஆத்ம ஸுகானுபவத்தால் (ப்ரஹ்மணி) பிரம்மத்தில் (பூர்ணுத்மனு) பரிபூர்ண நிலே எய்தியவனுய் (நிர்விகல்பஃ) மனதில் கற்பனைகள் ஏதுமில்லாதவனுய் (தூஷ்ணீம்) மௌனமாக (ஸமாஸ்வ) இருப்பாயாக.

**समूलकृत्तोऽपि महानहं पुन-र्व्युल्लेखितः स्याद्यदि चेतसा क्षणम् ।**
**संजीव्य विक्षेपशतं करोति नभस्वता प्रावृषि वारिदो यथा**
**॥ ३०९ ॥**

ஸமூலக்ருத்தோऽபி மஹானஹம் புனர்-வ்யுல்லேகிதஃ ஸ்யாத் யதி சேதஸா க்ஷணம் | ஸஞ்ஜீவ்ய

விக்ஷேபசதம் கரோதி நபஸ்வதா ப்ராவ்ருஷி வாரிதோ யதா || 309 ||

309. (மஹான்) பூதம் போல் பெரிய (அஹம்) இந்த அஹங்காரம் (ஸமூல) வேருடன் (க்ருத்தః அபி) வெட்டப்பட்ட பின்னும் (க்ஷணம்) ஒரு நொடிப் பொழுது (சேதஸா) மனதால் (வ்யுல்லேகிதః ஸ்யாத் யதி) சிந்திக்கப்பட்டாலும் கூட (புனః) மீண்டும் (ஸஞ்ஜீவ்ய) உயிர் பெற்றெழுந்து (ப்ராவ்ருஷி) மழை காலத்தில் (வாரிதః) மேகம் (நபஸ்வதா) காற்றால்—எங்கிருந்தோ கொண்டுவரப்பட்டு (யதா) எங்ஙனம்—மழையைக் கொட்டுமோ-அந்த மாதிரி (விக்ஷேபசதம்) நூற்றுக் கணக்கான கோளாறுகளை (கரோதி) உற்பத்தி செய்து விடுகிறது.

**निगृह्य शत्रो-रहमोऽवकाशः क्वचिन्न देयो विषयानुचिन्तया ।**
**स एव संजीवन-हेतुरस्य प्रक्षीण-जम्बीरतरो-रिवाम्बु ॥३१०॥**

நிக்ருஹ்ய சத்ரோ-ரஹமோऽவகாசః க்வசிந் ந தேயோ விஷயானுசிந்தயா | ஸ ஏவ ஸஞ்ஜீவன-ஹேதுரஸ்ய ப்ரக்ஷீண-ஜம்பீரதரோ-ரிவாம்பு || 310 ||

310. (விஷய-அனுசிந்தயா) விஷயத்தைப் பற்றிய சிந்தையால் (நிக்ருஹ்ய) ஜயித்தபின் (அஹமःசத்ரோः) அஹங்காரமாகிய இந்த சத்துருவுக்கு (க்வசித்) சிறிதேனும் (அவகாசः) இடம் (ந தேயः) கொடுக்கக் கூடாது. (ப்ரக்ஷீண) வாடிப்போன (ஜம்பீரதரோः) எலுமிச்சை மரத்திற்கு (அம்பு இவ) நீர் பாய்ச்சினால் போல் (ஸः ஏவ) அந்த விஷய சிந்தையே (அஸ்ய) வெல்லப்பட்ட அஹங்காரத்திற்கு (ஸஞ்ஜீவன-ஹேதுः) புத்துயிரளிக்கக் காரணமாகும்.

देहात्मना संस्थित एव कामी विलक्षणः कामयिता कथं स्यात् ।
अतोऽर्थसन्धान-परत्वमेव भेदप्रसक्त्या भवबन्धहेतुः ॥३११॥

தேஹாத்மனு ஸம்ஸ்தித ஏவ காமீ விலக்ஷணஃ காமயிதா கதம் ஸ்யாத் | அதோ ऽர்த்த-ஸந்தான-பரத்வ-மேவ பேத-ப்ரஸக்த்யா பவபந்த-ஹேதுஃ || 311 ||

311. (தேஹ-ஆத்மனு) தேஹமே ஆத்மா என்ற நிலையிலிருப்பவனே (காமீ) விஷயங்களில் ஆசையுள்ளவன். (விலக்ஷணஃ) மாறுபட்டவன்—தேஹம் ஆத்மா அன்று என்று உணர்ந்தவன்—(கதம்) எங்ஙனம் (காமயிதா ஸ்யாத்) விஷய நாட்டமுடையவனுவான்? (அதஃ) ஆகையால் (அர்த்த-ஸந்தான-பரத்வம் ஏவ) விஷய நாட்டத்தில் பற்றுதலே (பேத-ப்ரஸக்த்யா) பேத புத்தியை வளர்ப்பதால் (பவபந்த-ஹேதுஃ) பிறவித் தளைக்குக் காரணமாகிறது.

ஒ. ஆத்மானஞ் சேத் விஜானீயா-தயமஸ்மீதி பூருஷஃ | கிமிச்சன் கஸ்ய காமாய சரீரமனு-ஸஞ்ஜ்வரேத் |' ஒரு புருஷன் தன்னை 'நான் இதுவாயிருக்கிறேன்' என்று அறிந்து விட்டால் எதை விரும்பி, யாருடைய விருப்பத்துக்காகச் சரீரத்தைப் பின்பற்றி அத்துடன் வருந்த வேண்டும்?' —ப்ரு. உப. 4.4.12.

कार्यप्रवर्धनाद्बीजप्रवृद्धिः परिदृश्यते ।
कार्यनाशाद्बीजनाशस्तस्मात्कार्यं निरोधयेत् ॥ ३१२ ॥

கார்ய-ப்ரவர்த்தனுத் பீஜப்ரவ்ருத்திஃ பரித்ருச்யதே | கார்ய-நாசாத் பீஜ-நாசஸ்-தஸ்மாத் கார்யம் நிரோதயேத் || 312 ||

312. (கார்ய-ப்ரவர்த்தனுத்) விஷய ஆசையுடன் செய்யும் காரியங்கள் வளர்வதால் (பீஜ ப்ரவ்ருத்திஃ)

அதற்கு விதை போன்ற அஹங்காரம் வளர்வது (பரித்ருச்யதே) காணப்படுகிறது. (கார்ய நாசாத்) காரியங்கள் நாசமடைவதால் (பீஜ நாசः) விதை போன்ற அஹங்காரம் நாசமடைகிறது. (தஸ்மாத்) ஆகையால் (கார்யம்) விஷய ஆசையுடன் கூடிய காரியத்தை (நிரோதயேத்) ஒழிக்கவேண்டும்.

**वासना-वृद्धितः कार्यं कार्यवृद्धया च वासना ।**
**वर्धते सर्वथा पुंसः संसारो न निवर्तते ॥ ३१३ ॥**

வாஸனா-வ்ருத்திதः கார்யம் கார்யவ்ருத்த்யா ச வாஸனா | வர்த்ததே ஸர்வதா பும்ஸः ஸம்ஸாரோ ந நிவர்த்ததே || 313 ||

313. (வாஸனா-வ்ருத்திதः) விஷய வாஸனை வளர்வதால் (கார்யம்) காரியமும் (கார்ய வ்ருத்த்யா) காரிய வளர்ச்சியால் (வாஸனா) வாஸனையுமாக (ஸர்வதா) எவ்வகையிலும் (பும்ஸः) புருஷனுக்கு (ஸம்ஸாரः) பிறவிச் சுழல் (ந நிவர்த்ததே) விட்டு நீங்குவதில்லை.

ஒ. ஸ்வரூபானந்த-விஸ்ம்ருத்யா விஷயலாபார்த்தம் ப்ரயத்ன:| அலாபே து:க்கம்,லாபே ஹர்ஷம் | ஹர்ஷே தர்ப்பः, தர்ப்பே தர்மாதிக்ரமணம் | தேந தியோ மாலின்யம் | தேந புனராத்ம-க்ரஹண-ஸாமர்த்த்யாபாவः, ததச்ச ஸர்வதாதேஹாத்யாத்மத்வம் தேந ஜராமரணஜன்மாதிரூப-ஸம்ஸாராவிச்சேதः இதி பும்ஸः ஸம்ஸாரோ ந நிவர்த்தத இத்யுக்தம் | —சந்த்ரசேகர பாரதீ

**संसारबन्ध-विच्छित्त्यै तद्द्वयं प्रदहेद्यतिः ।**
**वासनावृद्धिरेताभ्यां चिन्तया क्रियया बहिः ॥ ३१४ ॥**

ஸம்ஸாரபந்த-விச்சித்த்யை தத்த்வயம்-ப்ரதஹேத்யதிः | வாஸனா-வ்ருத்தி-ரேதாப்யாம் சிந்தயா க்ரியயா பஹிः || 314 ||

314. (ஸம்ஸார பந்த-விச்சித்யை) ஸம்ஸார பந்தத்தை அறுப்பதற்கு (தத்-த்வயம்) வாஸனை, காரியம் ஆகிய இரண்டையும் (யதிః) முமுக்ஷுவானவன் (ப்ரதஹேத்) சுட்டெரித்து விடவேண்டும். (சிந்தயா) விஷயங்களைப் பற்றி மனதில் எண்ணுவதாலும் (பஹிः) வெளியில் (க்ரியயா) செயல் புரிவதாலும் (ஏதாப்யாம்) இவ்விரண்டினின்றும் (வாஸனாவ்ருத்திः) வாஸனை வளர்ச்சி ஏற்படும்.

வாஸனா ப்ரேர்யதே ஹ்யந்தச் சிந்தயா க்ரியயா பஹிः ||
—பா. பே.

**ताभ्यां प्रवर्धमाना सा सूते संसृति-मात्मनः ।**

**त्रयाणां च क्षयोपायः सर्वावस्थासु सर्वदा ॥ ३१५ ॥**

**सर्वत्र सर्वतः सर्वब्रह्ममात्रावलोकनैः ।**

**सद्भाव-वासना-दार्ढ्यात्तत्रयं लयमश्नुते ॥ ३१६ ॥**

தாப்யாம் ப்ரவர்த்தமானா ஸா ஸூதே ஸம்ஸ்ருதி-மாத்மனः | த்ரயாணாஞ் ச க்ஷயோபாயः ஸர்வாவஸ்தாஸு ஸர்வதா || 315 ||

ஸர்வத்ர ஸர்வதः ஸர்வப்ரஹ்ம-மாத்ராவலோகனைः | ஸத்பாவ-வாஸனா-தார்ட்யாத் தத் த்ரயம் லயமச்னுதே || 316 ||

315-16. (தாப்யாம்) அவ்விரண்டாலும் (ப்ரவர்த்தமானா) வளர்ச்சியடைந்த (ஸா) அந்த வாஸனை (ஆத்மனः) ஆத்மாவிற்கு (ஸம்ஸ்ருதிம்) ஸம்ஸாரத்தை (ஸூதே) பிறப்பிக்கிறது. (த்ரயாணாஞ்ச) இம் மூன்றின் (க்ஷய-உபாயः) அழிவிற்கு வழியாவது (ஸர்வ-அவஸ்தாஸு) எல்லா நிலைகளிலும் (ஸர்வதா) எல்லாக் காலத்திலும் (ஸர்வத்ர) எல்லா இடத்திலும் (ஸர்வதः) எல்லா வகையிலும் (ஸர்வப்ரஹ்ம-மாத்ர-

அவலோகனை:) எல்லாம் பிரம்ம மாத்திரமே என்ற பார்வையால் ஏற்படுவது. (ஸத்பாவ-வாஸனா-தார்ட்யாத்) இந்த ஸத்பாவனை திடப்படுவதால் (தத் த்ரயம்) மேற் கூறிய மூன்றும் (லயம் அச்னுதே) மறைந்தொழிகின்றன.

ஸர்வத்ர ஸர்வத:—ஒ. அத். உப. 13.

ஸர்வம் ப்ரஹ்மமாத்ராவலோகனம் —பா. பே.

**क्रियानाशे भवेच्चिन्तानाशोऽस्माद्वासनाक्षयः ।**
**वासनाप्रक्षयो मोक्षः सा जीवन्मुक्तिरिष्यते ॥ ३१७ ॥**

க்ரியாநாசே பவேச்-சிந்தா-நாசோ ऽஸ்மாத் வாஸனாக்ஷய: | வாஸனா-ப்ரக்ஷயோ மோக்ஷ: ஸா ஜீவன்-முக்திரிஷ்யதே || 317 ||

317. (க்ரியாநாசே) செயலொழிவதால் (சிந்தா நாச:) காரணமாகிய சிந்தையின் ஒழிவு (பவேத்) ஏற்படும். (அஸ்மாத்) அதிலிருந்து (வாஸனா-க்ஷய:) சிந்தைக்குக் காரணமான வாஸனையின் ஒழிவு ஏற்படும். (வாஸனா ப்ரக்ஷய:) வாஸனை அறவே ஒழிதல் (மோக்ஷ:) மோக்ஷமாகும். (ஸா) அதுவே (ஜீவன் முக்தி:) ஜீவன் முக்தி என (இஷ்யதே) எண்ணப் படுகிறது.

ஒ. அத். உப. 12.

ஒ. 'முக்திம் ப்ராஹுஸ்-ததிஹ முனயோ வாஸனாதானவம் யத்'।

**सद्वासनास्फूर्ति-विजृम्भणे स-**
**त्यसौ विलीनाप्यहमादिवासना ।**
**अतिप्रकृष्टाप्यरुणप्रभायां**
**विलीयते साधु यथा तमिस्रा ॥ ३१८ ॥**

ஒருபொழுதும் (நஹி) நிச்சயமாக இல்லை. (தே) அவர்கள் (நிர்க்குணம் ப்ரஹ்ம ஏவ) நிர்ககுணப் பிரம்மமேயாகிறார்கள்.

ஓ, கனவில் கடித்த தேளின் விஷம் விழித்துக்கொண்டபின் கடுக்காது.

**उपाधि-तादात्म्य-विहीन-केवल-**
**ब्रह्मात्मनैवात्मनि तिष्ठतो मुनेः ।**
**प्रारब्ध-सद्भावकथा न युक्ता**
**स्वप्नार्थ-संबन्धकथेव जाग्रतः ॥ ४५४ ॥**

உபாதி-தாதாத்ம்ய-விஹீன-கேவல-ப்ரஹ்மாத்மனை வாத்மனி திஷ்டதோ முனேः | ப்ராரப்த-ஸத்பாவகதா ந யுக்தா ஸ்வப்னார்த்த-ஸம்பந்தகதேவ ஜாக்ரதः || 454 ||

454. (உபாதி - தாதாத்ம்ய - விஹீன—) உபாதியுடன் சேர்ந்து அதுவாகவே ஆய்விடாமல் (கேவல-ப்ரஹ்மாத்மனா ஏவ) தனித்து பிரம்மமாகவே ஆத்மனி) ஆத்ம நிஷ்டையில் (திஷ்டதः) நிலைபெற்றுள்ள (முனேः) முனிவனுக்கு (ப்ராரப்த - ஸத்பாவ - கதா) பிராரப்தம் உண்டு என்ற பேச்சு (ந யுக்தா) பொருந்தாது; (ஸ்வப்ன-அர்த்த—) கனவில் கண்ட பொருளுடன் (ஸம்பந்த-கதா) சம்பந்தப் பேச்சு (ஜாக்ரதः இவ) விழித்துக் கொண்டவனுக்குப் பொருந்தாதவாறு.

**न हि प्रबुद्धः प्रतिभासदेहे देहोपयोगिन्यपि च प्रपञ्चे ।**
**करोत्यहन्तां ममता-मिदन्तां किन्तु स्वयं तिष्ठति जागरेण ॥ ४५५ ॥**

ந ஹி ப்ரபுத்தः ப்ரதிபாஸ-தேஹே தேஹோபயோகின்யபி ச ப்ரபஞ்சே | கரோத்யஹந்தாம் மமதா-மிதந்தாம் கிந்து ஸ்வயம் திஷ்டதி ஜாகரேண || 455||

455. (ப்ரபுத்தஃ) விழித்துக் கொண்டவன் (ப்ரதிபாஸ தேஹே) கனவில் தோன்றிய உடலிலும் (தேஹஉபயோகின்யபி ப்ரபஞ்சே) அந்த உடலுடன் சம்பந்தப்பட்ட உலகிலும் (அஹந்தாம்) நான் எனும் எண்ணத்தையும் (மமதாம்) என்னுடையது என்பதையும் (இதந்தாம்) இது ஒரு பொருள் என்று எண்ணுவதையும் (ந கரோதி) செய்வதில்லை. (கிம்து) ஆனல் (ஜாகரேண) விழிப்புடன் கூடியவனய் (ஸ்வயம் திஷ்டதி) தான் தானகவே இருக்கிருன்.

न तस्य मिथ्यार्थ-समर्थनेच्छा
न संग्रहस्तज्जगतोऽपि दृष्टः ।
तत्रानुवृत्ति-र्यदि चेन्मृषार्थे
न निद्रया मुक्त इतीष्यते ध्रुवम् ॥ ४५६ ॥

ந தஸ்ய மித்யார்த்த-ஸமர்த்தனேச்சா ந ஸங்க்ரஹஸ்-தஜ்ஜகதோऽபி த்ருஷ்டஃ | தத்ரானுவ்ருத்திர்-யதி சேன் ம்ருஷார்த்தே ந நித்ரயா முக்த இதீஷ்யதே த்ருவம் || 456 ||

456. (தஸ்ய) அவனுக்கு (மித்யா-அர்த்த) கனவில் கண்ட பொய்ப் பொருளை (ஸமர்த்தன-இச்சா) சேர்த்து வைக்க வேண்டுமென்ற ஆசையும் (தத் ஜகதஃ) அந்த உலகை (ஸங்க்ரஹஃ) ஏற்றுக்கொள்ளுதலும் (ந த்ருஷ்டஃ) காணப்படவில்லை ; (தத்ர) அங்கே (ம்ருஷா-அர்த்தே) பொய்ப் பொருளில் (அனுவ்ருத்திஃ யதி சேத்) தொடர்ந்து பற்று இருக்குமே யானல் (நித்ரயா) உறக்கத்தினின்று (ந முக்தஃ) விடுபடவில்லை (இதி) என்று (இஷ்யதே) கூறப்படுவான் என்பது (த்ருவம்) நிச்சயம்.

**तद्वत्परे ब्रह्मणि वर्तमानः सदात्मना तिष्ठति नान्यदीक्षते ।**
**स्मृतिर्यथा स्वप्न-विलोकितार्थे तदा विदः प्राशन-मोचनादौ**
**॥ ४५७ ॥**

தத்வத்பரே ப்ரஹ்மணி வர்த்தமானஃ ஸதாத்மனு திஷ்டதி நான்யதீக்ஷதே | ஸம்ருதிர்-யதா ஸ்வப்ன-விலோகிதார்த்தே ததா விதஃ ப்ராசன-மோசனு தெள || 457 ||

457. (தத்வத்) அவ்வாறே (பரே ப்ரஹ்மணி) பரப் பிரம்மத்தில் (வர்த்தமானஃ) நிலைத்த மனமுடையவன் (ஸத் ஆத்மனு) ஸத்தாகிய ஆத்மாவாகவே (திஷ்டதி) இருப்பான்; (அன்யத்) வேருென்றை (ந ஈக்ஷதே) காணமாட்டான். (ஸ்வப்ன - விலோகித - அர்த்தே) கனவில் கண்ட பொருளில் (யதா) எப்படி (ஸ்ம்ருதிஃ) ஞாபகமிருக்குமோ (ததா) அப்படி (விதஃ) ஞானிக்கு (ப்ராசன-மோசன-ஆதெள) ஆகாரம் உட்கொள்ளுதல் கழித்தல் முதலியவற்றில்.

**कर्मणा निर्मितो देहः प्रारब्धं तस्य कल्प्यताम् ।**
**नानादे-रात्मनो युक्तं नैवात्मा कर्मनिर्मितः ॥ ४५८ ॥**

கர்மணு நிர்மிதோ தேஹஃ ப்ராரப்தம் தஸ்ய கல்ப்யதாம் | நானுதே-ராத்மனே யுக்தம் நைவாத்மா கர்ம நிர்மிதஃ || 458 ||

458. (தேஹஃ) உடல் (கர்மணு) கர்மத்தால் (நிர்மிதஃ) நிர்மாணம் செய்யப்பட்டது; (தஸ்ய) அந்த உடலுக்கு (ப்ராரப்தம்) பிராரப்தத்தை (கல்ப்யதாம்) கற்பிக்கலாம். (அனுதேஃ) அனுதியான (ஆத்மனஃ)

ஆத்மாவிற்கு (ந யுக்தம்) அது பொருந்தாது; (ஆத்மா) ஆத்மாவானது (ந கர்ம-நிர்மிதః) கர்மத்தால் நிர்மாணம் செய்யப்பட்டதன்று.

**अजो नित्यः शाश्वत इति ब्रूते श्रुतिरमोघवाक् ।**
**तदात्मना तिष्ठतोऽस्य कुतः प्रारब्धकल्पना ॥ ४५९ ॥**

அஜோ நித்யః சாச்வத இதி ப்ரூதே ச்ருதி-ரமோக-வாக் | ததாத்மனு திஷ்டதோऽஸ்ய குதః ப்ராரப்த-கல்பனு || 459 ||

459. (அமோகவாக்) பொய்யா மொழியாகிய (ச்ருதிః) வேதம் (அஜః) பிறப்பற்றது (நித்யః) என்றுமுளது (சாச்வதః) அழியாதது (இதி) என்று (ப்ரூதே) ஆத்மாவைப் பற்றிக் கூறுகிறது. (ததாத்மனு) அத்துடன் ஒன்றுபட்டு அதுவாகவே (திஷ்டதః) நிற்கும் (அஸ்ய) இந்த ஞானிக்கு (ப்ராரப்த கல்பனு) பிராரப்த கற்பனை (குதః) எங்ஙனம் பொருந்தும்?

ஒ. 'அஜோ நித்ய : சாச்வதோயம் புராணோ ந ஹன்யதே ஹன்யமானே சரீரே'. —கட. 20. 2. 18.

அஜோ நித்ய இதி ப்ரூதே ச்ருதிரேஷா த்வமோகவாக் ||
—பா. பே.

**प्रारब्धं सिध्यति तदा यदा देहात्मना स्थितिः ।**
**देहात्मभावो नैवेष्टः प्रारब्धं त्यज्यतामतः ॥ ४६० ॥**

ப்ராரப்தம் ஸித்த்யதி ததா யதா தேஹாத்மனு ஸ்திதிః | தேஹாத்ம-பாவோ நைவேஷ்டః ப்ராரப்தம் த்யஜ்யதாமதః || 460 ||

460. (யதா) எப்பொழுது (தேஹாத்மனுஸ்திதிః) தேகமே ஆத்மா என்ற நிலையோ (ததா) அப்பொழுது

(ப்ராரப்தம்) பிராரப்தமானது (ஸித்த்யதி) சித்திக்கிறது. (தேஹ - ஆத்ம-பாவ꞉) தேகமே ஆத்மா என்னும் பாவனை (நைவ இஷ்ட꞉) ஒவ்வாதது. (அத꞉) ஆகையால் (ப்ராரப்தம்) பிராரப்த கல்பனையை (த்யஜதாம்) தள்ளிவிடவேண்டும்.

ஒ அத். உப. 56.

**शरीरस्यापि प्रारब्धकल्पना भ्रान्तिरेव हि ।**

**अध्यस्तस्य कुतः सत्त्व-मसत्यस्य कुतो जनिः ।**

**अजातस्य कुतो नाशः प्रारब्ध-मसतः कुतः ॥ ४६१ ॥**

சரீரஸ்யாபி ப்ரார ப்த- கல்பனு ப்ராந்திரேவ ஹி |
அத்யஸ்தஸ்ய குத꞉ ஸத்வ-மஸத்யஸ்ய குதோ ஜனி꞉ |
அஜாதஸ்ய குதோ நாச꞉ ப்ராரப்த-மஸத꞉ குத꞉ || 461 ||

461. (சரீரஸ்ய அபி) உடலுக்குங்கூட (ப்ராரப்த கல்பனு) பிராரப்தம் உண்டு என்று கற்பனை செய்வது (ப்ராந்தி꞉ ஏவ ஹி) உண்மையில் மதிமயக்கமேயாகும். (அத்யஸ்தஸ்ய) தேஹமே ஆத்மா என்ற கற்பனைக்கு (குத꞉ ஸத்வம்) இருப்பு எங்ஙனம்? (அஸத்யஸ்ய) இருப்பில்லாததற்கு (குத꞉ ஜனி꞉) பிறப்பு எங்ஙனம்? (அஜாதஸ்ய) பிறப்பு இல்லாததற்கு (குத꞉ நாச꞉) அழிவு எங்ஙனம்? (அஸத꞉) இருப்பில்லாததற்கு (ப்ராரப்தம்) பிராரப்தம் (குத꞉) எங்ஙனம்?

அத்யஸ்தஸ்ய—ஒ. அத். உப. 57-58.
அஸத்வஸ்ய குதோ ஜனி꞉ | —பா. பே.

**ज्ञानेनाज्ञानकार्यस्य समूलस्य लयो यदि ।**

**तिष्ठत्ययं कथं देह इति शङ्कावतो जडान् ॥ ४६२ ॥**

**समाधातुं बाह्यदृष्ट्या प्रारब्धं वदति श्रुतिः ।**

**न तु देहादिसत्यत्व-बोधनाय विपश्चिताम् ॥ ४६३ ॥**

ஜ்ஞானேனாஜ்ஞான கார்யஸ்ய ஸமூலஸ்ய லயோ யதி | திஷ்டத்யயம் கதம் தேஹ இதி சங்காவதோ ஜடான் || 462 ||

ஸமாதாதும் பாஹ்ய-த்ருஷ்ட்யா ப்ராரப்தம் வததி ச்ருதி: | ந து தேஹாதி - ஸத்யத்வ - போதனாய விபச்சிதாம் || 463 ||

462-63. (ஜ்ஞானேன) ஞானத்தால் (அஜ்ஞான-கார்யஸ்ய) அஞ்ஞானத்தின் விளைவான பிரபஞ்சத்திற்கு (ஸமூலஸ்ய) வேருடன் (லய: யதி) அழிவேற்படுகின்றதெனின் (அயம் தேஹ:) இந்த தேகம் (கதம்) எப்படி (திஷ்டதி) நிற்கிறது (இதி) என்ற (சங்காவத:) சந்தேகத்துடன் கூடிய (ஜடான்) மதி குறைந்த ஜனங்களை (ஸமாதாதும்) ஸமாதானப் படுத்துவதற்காக (ச்ருதி:) சுருதியானது (பாஹ்ய த்ருஷ்ட்யா) வெளியுலக விவகார நோக்கில் (ப்ராரப்தம்) பிராரப்தத்தை (வததி) கூறுகிறது. (விபச்சிதாம்) விவேகிகளுக்கு (தேஹாதி-ஸத்யத்வ-போதனாய) தேகம் முதலியவற்றின் உண்மையை போதிப்பதற்காக (ந து) அன்று.

ஒ. அத். உப. 59-60.

ஒ. சா. உப. 6. 14. 2. இதன் குறிப்பு 445வது சுலோகத்தின் கீழ் பார்க்கவும்.

463. யத: ச்ருதே-ரபிப்ராய: பரமார்த்தைக-கோசர: |

—இந்த அரை சுலோகம் அதிகமாகச் சில இடங்களில் காணப்படுகிறது.

## नानात्व-निषेधः

परिपूर्ण-मनाद्यन्त-मप्रमेय-मविक्रियम् ।
एकमेवाद्वयं ब्रह्म नेह नानास्ति किंचन ॥ ४६४ ॥

**நாளுத்வ-நிஷேதஃ**

பரிபூர்ண-மனுத்யந்த - மப்ரமேய - மவிக்ரியம்| ஏக-
மேவாத்வயம் ப்ரஹ்ம நேஹ நானாஸ்தி கிஞ்சன || 464 ||

**பன்மையை நிராகரித்தல்**

464. (பரிபூர்ணம்) பரிபூர்ணமாயும் (அனுத்யந்தம்) அடிமுடியற்றதாயும் (அப்ரமேயம்) அளவிட முடியாததாயும் (அவிக்ரியம்) செயலற்றதாயும் (ஏகம்) ஒன்றேயாகவும் (அத்வயம்) இரண்டற்றதாகவும் உளது (ப்ரஹ்ம) பிரம்மம். (இஹ) இங்கு (கிஞ்சன) ஒரு சிறிதும் (நானா நாஸ்தி) பல பொருள்களின் இருப்பு அல்லது பன்மை என்பது இல்லை.

**நேஹ நானாஸ்தி கிஞ்சன**—ஒ. 'மனஸைவேதமாப்தவ்யம் நேஹ நானாஸ்தி கிஞ்சன | ம்ருத்யோ: ஸ ம்ருத்யும் கச்சதி ய இஹ நானேவ பச்யதி ||' இது மனத்தாலேயே அடையப்பட வேண்டும். இங்கு சிறிதும் வேற்றுமை இல்லை. எவன் இங்கு வேற்றுமை காண்கிறானோ அவன் மரணத்தினின்று மரணத்தையே அடைகிறான்.
—கட. உப. 4. 11.

**सद्घनं चिद्घनं नित्य-मानन्दघन-मक्रियम् ।**
**एकमेवाद्वयं ब्रह्म नेह नानास्ति किंचन ॥ ४६५ ॥**

ஸத்கனம் சித்கனம் நித்ய-மானந்தகன-மக்ரியம் |
ஏகமேவாத்வயம் ப்ரஹ்ம நேஹ நானாஸ்தி கிஞ்சன ||
465 ||

465. (ஸத்கனம்) இருப்பே வடிவாகியதும் (சித்கனம்) அறிவே வடிவாகியதும் (நித்யம்) என்றுமுளதும் (ஆனந்தகனம்) ஆனந்தமே வடிவாகியதும் (அக்ரியம்) செயலற்றதும் (ஏகம்) ஒன்றேயானதும் (அத்விதீயம்) இரண்டற்றதும் (ப்ரஹ்ம) பிரம்மம்.

(இஹ) இங்கு (கிஞ்சன) ஒரு சிறிதும் (நாஞ) பன் மை (நாஸ்தி) இல்லே.

ஓ. அத். உப. 63.

प्रत्यगेकरसं पूर्ण-मनन्तं सर्वतोमुखम् ।
एकमेवाद्वयं ब्रह्म नेह नानास्ति किंचन ॥ ४६६ ॥

ப்ரத்யகேகரஸம் பூர்ண-மனந்தம் ஸர்வதோ-முகம் | ஏக-மேவாத்வயம் ப்ரஹ்ம நேஹ நாஞஸ்தி கிஞ்சன || 466 ||

466. (ப்ரத்யக்) அந்தராத்மாவாயும் (ஏகரஸம்) ஒருபடித்தாயும் (பூர்ணம்) பூர்ணமாயும் (அனந்தம்) முடிவற்றதாயும் (ஸர்வதோ-முகம்) எங்கும் முகமுள்ள தாயும் (ஏகம்) ஒன்ருயும் (அத்வயம்) இரண்டற்ற தாயும் உள்ளது (ப்ரஹ்ம) பிரம்மம். (இஹ) இங்கு (கிஞ்சன) ஒரு சிறிதும் (நாஞ) பான்மை (நாஸ்தி) இல்லே.

अहेयमनुपादेय-मनाधेय-मनाश्रयम् ।
एकमेवाद्वयं ब्रह्म नेह नानास्ति किंचन ॥ ४६७ ॥

அஹேய-மனுபாதேய- மஞதேய-மஞச்ரயம் | ஏக-மேவாத்வயம் ப்ரஹ்ம நேஹ நாஞஸ்தி கிஞ்சன || 467 ||

467. (அஹேயம் அனுபாதேயம்) தள்ளவும் கொள்ளவும் முடியாததாயும் (அஞதேயம் அஞச்ரயம்) எதையும் தாங்காததாயும் எதஞலும் தாங்கப்படாததாயும் (ஏகம்) ஒன்ருயும் (அத்வயம்) இரண்டற்றதாயும் உள்ளது (ப்ரஹ்ம) பிரம்மம். (இஹ) இங்கு (கிஞ்சன) ஒரு சிறிதும் (நாஞ) பன்மை (நாஸ்தி) இல்லே.

ஓ. அத். உப. 62.

निर्गुणं निष्कलं सूक्ष्मं निर्विकल्पं निरंजनम् ।
एकमेवाद्वयं ब्रह्म नेह नानास्ति किंचन ॥ ४६८ ॥

நிர்க்குணம் நிஷ்கலம் ஸூக்ஷ்மம் நிர்விகல்பம் நிரஞ்ஜனம் | ஏகமேவாத்வயம் ப்ரஹ்ம நேஹ நாஞஸ்தி கிஞ்சன || 468 ||

468. (நிர்க்குணம்) குணங்களுக்கப்பாற் பட்டதாயும் (நிஷ்கலம்) பகுதிகளற்றதாயும் (ஸூக்ஷ்மம்) நுண்ணியதாயும் (நிர்விகல்பம்) கற்பனைகளைக் கடந்ததாயும் (நிரஞ்ஜனம்) மாசற்றதாயும் (ஏகம்) ஒன்ருயும் (அத்வயம்) இரண்டற்றதாயும் உளது (ப்ரஹ்ம) பிரம்மம் (இஹ) இங்கு (கிஞ்சன) ஒரு சிறிதும் (நாஞ) பன்மை (நாஸ்தி) இல்லை.

अनिरूप्यस्वरूपं यन्मनोवाचामगोचरम् ।
एकमेवाद्वयं ब्रह्म नेह नानास्ति किंचन ॥ ४६९ ॥

அநிரூப்ய-ஸ்வரூபம் யன்மனோ வாசாமகோசரம் | ஏகமேவாத்வயம் ப்ரஹ்ம நேஹ நாஞஸ்தி கிஞ்சன || 469 ||

469. (அநிரூப்ய-ஸ்வரூபம்) நிரூபிக்க முடியாத வடிவுடையதும் (மனோ வாசாம் அகோசரம்) மனதிற்கும் வாக்கிற்கும் எட்டாததும் (ஏகம்) ஒன்றேயாவதும் (அத்விதீயம்) இரண்டற்றதும் (ப்ரஹ்ம) பிரம்மம். (இஹ) இங்கு (கிஞ்சன) ஒரு சிறிதும் (நாஞ) பன்மை (நாஸ்தி) இல்லை.

ஒ. அத். உப. 63.

सत्समृद्धं स्वतः सिद्धं शुद्धं बुद्ध-मनीदृशम् ।
एकमेवाद्वयं ब्रह्म नेह नानास्ति किंचन ॥ ४७० ॥

ஸத்ஸம்ருத்தம் ஸ்வதஃ ஸித்தம் சுத்தம் புத்த-மனீத்ருசம் | ஏகாமேவாத்வயம் ப்ரஹ்ம நேஹ நானஸ்தி கிஞ்சன || 470 ||

470. (ஸத்) இருப்பே வடிவானதும் (ஸம்ருத்தம்) எங்கும் நிறைந்ததும் (ஸ்வதஃ ஸித்தம்) தானே விளங்குவதும் (சுத்தம்) பரிசுத்த மானதும் (புத்தம்) அறிவுமய மானதும் (அநீத்ருசம்) ஒப்பற்றதும் (ஏகம்) ஒன்றேயானதும் (அத்விதீயம்) இரண்டற்றதும் (ப்ரஹ்ம) பிரம்மம். (இஹ) இங்கு (கிஞ்சித்) ஒரு சிறிதும் (நானு) பன்மை (நாஸ்தி) இல்லை.

## आत्मानुभवः

निरस्तरागा विनिरस्तभोगाः
शान्ताः सुदान्ता यतयो महान्तः ।
विज्ञाय तत्त्वं परमेतदन्ते
प्राप्ताः परां निर्वृति-मात्मयोगात् ॥ ४७१ ॥

### ஆத்மானுபவః

நிரஸ்தராகா விநிரஸ்த-போகாஃ சாந்தா ஸுதாந்தா யதயோ மஹாந்தஃ | விஜ்ஞாய தத்வம் பரமேத-தந்தே ப்ராப்தாஃ பராம் நிர்வ்ருதி-மாத்மயோகாத் || 471 ||

### ஆத்மானுபவம்

471. (நிரஸ்த-ராகாஃ) ஆசைகளற்றவர்களாயும் (விநிரஸ்த-போகாஃ) விஷயநுகர்ச்சிகளை அறவே துறந்தவர்களாயும் (சாந்தாஃ) அமைதி நிறைந்தவர்களாயும் (தாந்தாஃ) புறக்கரணங்களை அடக்கியவர்களாயும் (யதயஃ) ஞானப் பயிற்சியில் விடாமுயற்சியுடையவர்

களாயும் உள்ள (மஹாந்தः) மஹான்கள் (ஏதத்) இந்த (பரம் தத்வம்) உயர்ந்த தத்துவத்தை (விஜ்ஞாய) நன்குணர்ந்து (அந்தே) முடிவில் (ஆத்மயோகாத்) ஆத்ம யோகத்தின் மூலம் (பராம் நிர்வ்ருதிம்) பேரானந்த நிலையை (ப்ராப்தாः) அடைந்தவர் களாகிறார்கள்.

**भवानपीदं परतत्त्व-मात्मनः स्वरूपमानन्दघनं विचार्य ।**
**विधूय मोहं स्वमनः-प्रकल्पितं मुक्तः कृतार्थो भवतु प्रबुद्धः ॥ ४७२ ॥**

பவானபீதம் பரதத்வ-மாத்மனः ஸ்வரூப-மானந்த-கனம் விசார்ய | விதூய மோஹம் ஸ்வமனः - ப்ரகல்பிதம் முக்தः க்ருதார்த்தோ பவது ப்ரபுத்தः ‖ 472 ‖

(பவான் அபி) நீயும் கூட (இதம்) இந்த (ஆத்மனः பரதத்வம்) ஆத்மாவைப்பற்றிய உயர்ந்த தத்துவத்தையும் (ஆனந்தகனம்) ஆனந்தமே உருக்கொண்ட (ஸ்வரூபம்) அதன் உண்மை நிலையையும் (விசார்ய) நன்கு ஆராய்ந்தறிந்து கொண்டு (ஸ்வமனः ப்ரகல்பிதம்) உன்னுடைய மனதால் கற்பனை செய்யப்பட்ட (மோஹம்) மதிமயக்கத்தை (விதூய) உதறித்தள்ளி விட்டு (முக்தः) முக்தனாகவும் (க்ருதார்த்தः) பிறவிப் பயனை எய்தியவனாகவும் (ப்ரபுத்தः) அஞ்ஞானத்திலிருந்து விழித்துக் கொண்டவனாகவும் (பவது) ஆகக்கடவாய்.

ஸ்வரூப-மானந்தகனம் நிசாய்ய | —பா. பே.

**समाधिना साधु विनिश्चलात्मना**
**पश्यात्मतत्त्वं स्फुटबोध-चक्षुषा ।**
**निःसंशयं सम्यगवेक्षितश्चेत्**
**श्रुतः पदार्थो न पुनर्विकल्प्यते ॥ ४७३ ॥**

ஸமாதினு ஸாது விநிச்சலாத்மனு பச்யாத்மதத்வம் ஸ்புடபோத - சக்ஷுஷா | நிஃ ஸம்சயம் ஸம்யகவேக்ஷிதச் சேத் ச்ருதஃ பதார்த்தோ ந புனர்விகல்ப்யதே || 473 ||

473. (ஸமாதினு) ஸமாதியால் (ஸாது) செம்மையாக (விநிச்சலாத்மா) அசைவற்ற அந்தக்கரணமுடையவனுய் (ஸ்புடபோத சக்ஷுஷா) தெளிவான ஞானக் கண்ணுல் (ஆத்மதத்வம்) ஆத்ம தத்துவத்தை (பச்ய) பார். (ச்ருதஃ) குருவினிடமிருந்து கேட்கப்பட்ட (பதார்த்தஃ) சாஸ்திரார்த்தம் (நிஃ ஸம்சயம்) சந்தேகத்திற்கிடமில்லாமல் (ஸம்யக்) தெளிவாக (அவேக்ஷிதஃ சேத்) கண்டனுபவிக்கப்படுமேயானுல் (புனஃ) மீண்டும் (ந விகல்ப்யதே) விபரீத கற்பனை ஏற்படாது.

स्वस्याविद्या-बन्ध-सम्बन्ध-मोक्षात्
सत्यज्ञानानन्द-रूपात्मलब्धौ ।
शास्त्रं युक्तिर्देशिकोक्तिः प्रमाणं
चान्तः सिद्धा स्वानुभूतिः प्रमाणम् ॥ ४७४ ॥

ஸ்வஸ்யாவித்யா-பந்த-ஸம்பந்த-மோக்ஷாத் ஸத்யஜ்ஞானுனந்த - ரூபாத்மலப்தெள | சாஸ்த்ரம் யுக்திர்தேசிகோக்திஃ ப்ரமாணஞ் சாந்தஃ ஸித்தா ஸ்வானுபூதிஃ ப்ரமாணம் || 474 ||

474. (ஸ்வஸ்ய) தன்னுடைய (அவித்யா - பந்த - ஸம்பந்த) அஞ்ஞானமாகிற தளையின் பிடிப்பிலிருந்து (மோக்ஷாத்) விடுபடுவதால் (ஸத்ய-ஜ்ஞான-ஆனந்த-ரூப-) ஸச்சிதானந்த வடிவான (ஆத்ம லப்தெள) ஆத்மா அடையப்படுகிறதென்பதற்கு (சாஸ்த்ரம்) சாஸ்திரமும் (யுக்திஃ) யுக்தியும் (தேசிக-உக்திஃ) குரு

வின் உபதேசமும் (ப்ரமாணம்) பிரமாணம். (ச) மேலும் (அந்தஃஸித்தா) - சிரவண மனன நிதித்தியா ஸனத்தால்—தனக்குள்ளேயே சித்திக்கும் (ஸ்வ - அனுபூதிஃ) தன்னுடைய அனுபவமும் (ப்ரமாணம்) பிரமாணமாகின்றது.

**ஸ்வானுபூதி:** இதை 'பிரம்ம ஸம்ஸ்பர்சம்' என்று பகவத் கீதை கூறுகிறது. இந்நிலையில் பிரம்மம் படிப்பும் கேள்வியுமாய் மட்டுமல்லாமல் தொட்டு அனுபவிப்பதாய் அபரோக்ஷானுபூதியாய் விளங்குகிறது.

ஓ. ஸமாதியில் ஒருவனுடைய நிலைமை எப்படியிருக்கும்? உயிருள்ள மீனொன்றைச் சிறிது நேரம் ஜலத்திலிருந்து எடுத்துவிட்டுப் பழையபடி தண்ணீரில் போட்டால் அது எவ்வளவு ஆனந்தம் அனுபவிக்குமோ அப்படியிருக்கும். —ரா. கி.

ஓ. ஸமாதி-நிர்த்தூத-மலஸ்ய சேதஸோ நிவேசிதஸ்-யாத்மனி யத் ஸுகம் பவேத் | ந சக்யதே வர்ணயிதும் கிரா ததா ஸ்வயம் ததந்தஃ கரணேன க்ருஹ்யதே || —மதுஸூதன ஸரஸ்வதி.

**बन्धो मोक्षश्च तृप्तिश्च चिन्ताऽऽरोग्य-क्षुधादयः ।**
**स्वेनैव वेद्या यज्ज्ञानं परेषा-मानुमानिकम् ॥ ४७५ ॥**

பந்தோ மோக்ஷச்ச த்ருப்திச்ச சிந்தா஽஽ரோக்ய-க்ஷுதாதயஃ | ஸ்வேனைவ வேத்யா யஜ்ஜ்ஞானம் பரேஷா-மானுமானிகம் || 475 ||

475. (பந்தஃ) பந்தமும் (மோக்ஷஃ ச) மோக்ஷமும் (த்ருப்திஃ ச) திருப்தியும் (சிந்தா) கவலையும் (ஆரோக்ய-) ஆரோக்கியமும் (க்ஷுத்-ஆதயஃ) பசி முதலியனவும் (ஸ்வேன ஏவ) தனக்குத்தானே (வேத்யாஃ) அறிந்தனுபவிக்க வேண்டியவை. (யத் ஞானம் பரேஷாம்) இவற்றைப்பற்றிப் பிறருடைய ஞானம் (ஆனுமானிகம்) அனுமானமேயன்றிப் பிரத்தியக்ஷமாகாது.

**तटस्थिता बोधयन्ति गुरवः श्रुतयो यथा ।**
**प्रज्ञयैव तरेद्विद्वा-नीश्वरानुगृहीतया ॥ ४७६ ॥**

தடஸ்திதா போதயந்தி குரவः ச்ருதயோ யதா |
ப்ரஜ்ஞயைவ தரேத் வித்வா-னீச் வரானுக்ருஹீதயா ||
476 ||

476. (குரவः) குருமார்கள் (ச்ருதயः யதா) சுருதிகளைப் போலவே (தடஸ்திதாः) கரையிலிருந்து கொண்டே—ஒருவனைப் படகிலேறிப்போக வழிகாட்டுவதுபோல்—(போதயந்தி) போதிக்கிறார்கள். (ஈச்வர-அனுக்ருஹீதயா) ஈசுவர அனுக்கிரகத்தாலேற்பட்ட (ப்ரஜ்ஞயா ஏவ) சொந்த அறிவாலேயே (வித்வான்) ஞானியானவன் (தரேத்) ஸம்ஸார ஸாகரத்தை தாண்டுகிறான்.

குருவின் உபதேசம் பரோக்ஷ ஞானம். தானே நிர்விகல்ப ஸமாதியில் பெறும் அனுபவம் அபரோக்ஷ அனுபூதி. பரோக்ஷம் ஸாதனம், அபரோக்ஷம் அதனால் கிட்டும் அனுபவம்.

**स्वानुभूत्या स्वयं ज्ञात्वा स्वमात्मान-मखण्डितम् ।**
**संसिद्धः सुसुखं तिष्ठन्निर्विकल्पात्मनाऽऽत्मनि ॥४७७॥**

ஸ்வானுபூத்யா ஸ்வயம் ஜ்ஞாத்வா ஸ்வமாத்மான-மகண்டிதம் | ஸம்ஸித்தः ஸுஸுகம் திஷ்டேந் நிர்விகல்பாத்மனாऽऽத்மனி ||
477 ||

(ஸ்வ-அனுபூத்யா) சொந்த அனுபவத்தால் (ஸ்வம் ஆத்மானம் அகண்டிதம்) அகண்டமான ஆத்மாவாகிய தன்னை (ஸ்வயம்) தானே (ஜ்ஞாத்வா) ஸாக்ஷாத்கரித்து (ஸம்ஸித்தः) சித்தி எய்தியவனாய் (நிர்விகல்பாத்மனா) துவைத பாவனை யேதுமில்லாத

வனாய் (ஸுஸுகம்) ஆனந்தமாய் (ஆத்மனி) ஆத்மாவில் (திஷ்டேத்) ஒருவன் நிற்கட்டும்.

ஸம்ஸித்த : ஸம்முகம் திஷ்டேத் —பா. பே.

ஒ. அத். உப. 64.

**वेदान्त-सिद्धान्त-निरुक्तिरेषा ब्रह्मैव जीवः सकलं जगच्च ।**
**अखण्डरूप-स्थितिरेव मोक्षो ब्रह्माद्वितीये श्रुतयः प्रमाणम्**
**॥ ४७८ ॥**

வேதாந்த-ஸித்தாந்த - நிருக்திரேஷா ப்ரஹ்மைவ ஜீவः ஸகலம் ஜகச்ச | அகண்ட - ரூப-ஸ்திதிரேவ மோக்ஷோ ப்ரஹ்மாத்விதீயே ச்ருதயः ப்ரமாணம் || 478 ||

478. (வேதாந்த-ஸித்த-) வேதாந்தத்தால் சித்தித்த (அந்த-நிருக்திः) முடிவான நிர்ணயம் (ஏஷா) இதுவே. (ப்ரஹ்ம ஏவ) பிரம்மமே (ஜீவः) ஜீவனும் (ஸகலம் ஜகத்) உலகனைத்தும்; (அகண்டரூப-ஸ்திதிः ஏவ) அகண்டமான பிரம்ம ஸ்வரூபத்தில் நிலைபெறுதலே (மோக்ஷ) மோக்ஷம்; (ப்ரஹ்ம அத்விதீயே) பிரம்மம் அத்விதீயம் என்பதற்கு (ச்ருதயः) வேதவாக்கியங்கள் (ப்ரமாணம்) பிரமாணம்.

நிருக்தி :—நிர்ணய-ஜனக-ஸங்குசித-சப்த :| தத்-த்வ - மஸி, ஸர்வம் கல்விதம் ப்ரஹ்ம, ப்ரஹ்மை வேதம் விச்வம், ஏகமேவாத்விதீயம் இத்யாதி ச்ருதயः|

ப்ரஹ்மாத்விதீயம் ச்ருதயः ப்ரமாணம் | —பா. பே.

**बोधोपलब्धिः**

**इति गुरुवचनाच्छ्रुतिप्रमाणात्**
**परमवगम्य सतत्त्व - मात्मयुक्त्या ।**

**प्रशमितकरणः समाहितात्मा**
**क्वचिदचलाकृति - रात्मनिष्ठितोऽभूत् ॥ ४७९ ॥**

**போதோபலப்திः**

இதி குருவசனச் ச்ருதி - ப்ரமாணுத் பரமவகம்ய ஸதத்வ - மாத்ம - யுக்த்யா | ப்ரசமிதகரணः ஸமாஹிதாத்மா க்வசிததசலாக்ருதி-ராத்ம நிஷ்ட்டிதோऽபூத் || 479 ||

479. (இதி) இங்ஙனம் (குருவசனுத்) குரு உபதேசத்தாலும் (ச்ருதிப்ரமாணுத்) வேதத்தின் பிரமாண வாக்கியங்களாலும் (ஆத்ம யுக்த்யா) தன்னுடைய யுக்தியாலும் (பரம் ஸதத்வம்) அந்தப் பரம தத்துவத்தை (அவகம்ய) அறிந்துகொண்டு (ப்ரசமித-கரணः) இந்திரியங்களை யடக்கி (ஸமாஹித-ஆத்மா) அந்தக் கரணத்தை ஒரு முகப்படுத்தி (க்வசித்) தனிமையான ஏதோ ஒரு இடத்தில் (அசல-ஆக்ருதிः) அசைவற்றவனுய் அமர்ந்து (ஆத்ம நிஷ்டிதः) ஆத்ம நிஷ்டை எய்தியவனுக (அபூத்)— சிஷ்யன்—ஆனுன்.

**किंचित्कालं समाधाय परे ब्रह्मणि मानसम् ।**
**उत्थाय परमानन्दादिदं वचन-मब्रवीत् ॥ ४८० ॥**

**ஞான விழிப்பை யடைதல்**

கிஞ்சித்காலம் ஸமாதாய பரே ப்ரஹ்மணி மானஸம்| உத்தாய பரமானந்தாதிதம் வசன-மப்ரவீத் ||480||

480. (கிஞ்சித் காலம்) சிறிது காலம் (மானஸம்) மனதை (பரே ப்ரஹ்மணி) பரப்பிரம்மத்தில் (ஸமாதாய) நிலை நிறுத்தி (பரம - ஆனந்தாத்) அந்தப் பரமானந்த நிலையிலிருந்து (உத்தாய) பின்பு எழுந்து

(இதம்) இந்த (வசனம்) வார்த்தையை (அப்ரவீத்)—சிஷ்யன்—கூறினன்.

கஞ்சித் காலம் | வ்யுத்தாய | —பா. பே.

बुद्धिर्विनष्टा गलिता प्रवृत्ति-र्ब्रह्मात्मनोरेकतयाऽधिगत्या ।
इदं न जानेऽप्यनिदं न जाने किं वा कियद्वा सुखमस्त्यपारम्
॥ ४८१ ॥

புத்திர் - விநஷ்டா கலிதா ப்ரவ்ருத்திர்-ப்ரஹ்மாத்மனோ-ரேகதயா ऽதிகத்யா | இதம் ந ஜானே ऽப்யநிதம் ந ஜானே கிம் வா கியத்வா ஸுகமஸ்த்யபாரம் || 481 ||

481. (ப்ரஹ்ம-ஆத்மனோ:) பிரம்மமும் ஆத்மாவும் (ஏகதயா) ஒன்றேயாக (அதிகத்யா) ஆகிவிட்டபொழுது (புத்தி:) புத்தியானது (விநஷ்டா) காணுமற் போய்விட்டது; (ப்ரவ்ருத்தி:) செயலில் முனைப்பு (கலிதா) கரைந்து விட்டது; (இதம்) இது என்று நேராகக் காணப்படுவதையோ (அநிதம்) இது அன்று என்பதையோ (ந ஜானே) நான் அறியவில்லை; (கிம் வா) அது என்னவென்ரோ (கியத் வா) எப்படிப் பட்டதென்ரோ (ந ஜானே) அறியவில்லை. (அபாரம்) அளவு கடந்த (ஸுகம் அஸ்தி) இன்பம் அங்கிலையில் உளது என்பதை மட்டும் உணர்கிறேன்.

ஸுகமஸ்ய பாரம் | —பா. பே.

वाचा वक्तु-मशक्यमेव मनसा मन्तुं न वा शक्यते
स्वानन्दामृत-पूर-पूरित-परब्रह्माम्बुधे-र्वैभवम् ।
अम्भोराशि-विशीर्ण-वार्षिकशिलाभावं भजन्ते मनो
यस्यांशांशलवे विलीन-मधुनाऽऽनन्दात्मना निर्वृतम्
॥ ४८२ ॥

வாசா வக்து-மசக்யமேவ மனஸா மந்தும் ந வா சக்யதே ஸ்வானந்தாம்ருத - பூர - பூரித - பரப்ரஹ்மாம் புதேர் - வைபவம் | அம்போராசி - விசீர்ண-வார்ஷிக-சிலாபாவம் பஜந்தே மனோ யஸ்யாம்சாம்சலவே விலீன-மதுனாऽऽனந்தாத்மனா நிர்வ்ருதம் || 482 ||

482. (வாசா) சொல்லால் (வக்தும்) கூறுவதற்கு (அசக்யம் ஏவ) இயலவே இயலாது, (மனஸா) மனதால் (மந்தும் வா) நினைப்பதற்குங் கூட (ந சக்ய தே) இயலாது—(ஸ்வ-ஆனந்த-அம்ருத-பூர-) பூர்ண ஆத்மானந்த அம்ருதத்தால் (பூரித) நிரம்பிய (பரப்ர ஹ்ம-அம்புதேஃ) பரப் பிரம்மமாகிற சமுத்திரத்தின் (வைபவம்) பெருமை. (யஸ்ய) அதனுடைய (அம்சாம்ச லவே) ஒரு சிறு பாகத்தின் பகுதியின் துளியில் (விலீன-மதுனா) கரைந்த தேனில் (ஆனந்தாத்மனா) ஆத்மானந்த (நிர்வ்ருதம்) இன்பத்தை எய்திய (மனஃ) மனது (அம்போராசி-) ஸமுத்திரத்தில் (விசீர்ண) கரைந்து போன (வார்ஷிக-சிலா பாவம்) மழைப் பனிக்கட்டியின் நிலையை (பஜந்தே) அடை கிறது.

ஒ. 'ஸ்வாத்மானந்த-லவீபூத - ப்ரஹ்மாத்யானந்த-ஸந்ததிஃ |' தனது ஆத்மானந்தத்தில் பிரம்மாவின் ஆனந்தம் முதலியவை ஒரு திவலை போலாகின்றன. —ல. ஸ. 365

ஒ 'ச்ரோத்ரியஸ்ய ச அகாமஹதஸ்ய'—கேள்வியிற் சிறந்த வனும் ஆசைவாய்ப்பட்டு மடியாதவனும் உள்ளவனுக்கு இவ் வானந்தம் கிட்டுகின்றது. —தை. உப. 3. 8.

क्व गतं केन वा नीतं कुत्र लीनमिदं जगत् ।
अधुनैव मया दृष्टं नास्ति किं महदद्भुतम् ॥ ४८३ ॥

க்வ கதம் கேன வா நீதம் குத்ர லீனமிதம் ஜகத் |
அதுனைவ மயா த்ருஷ்டம் நாஸ்தி கிம் மஹதத்புதம் ||
483 ||

483. (இதம்) இந்த (ஜகத்) உலகம் (க்வ கதம்) எங்கே போயிற்று? (கேன வா நீதம்) அல்லது யாரால் கொண்டு போகப்பட்டது? (குத்ர) எங்கு (லீனம்) மறைந்தது? (அதுனு ஏவ) இப்பொழுது தான் (த்ருஷ்டம்) காணப்பட்டது. (நாஸ்தி) இல்லாமல் போய்விட்டது. (கிம் மஹத் அத்புதம்) இது என்ன பெரிய ஆச்சரியமாயிருக்கிறது.

ஒ. அத். உப. 65.

**किं हेयं किमुपादेयं किमन्यत् किं विलक्षणम् ।**
**अखण्डानन्दपीयूष-पूर्णे ब्रह्म-महार्णवे ॥ ४८४ ॥**

கிம் ஹேயம் கிமுபாதேயம் கிமன்யத் கிம் விலக்ஷணம் | அகண்டானந்த-பீயூஷ-பூர்ணே ப்ரஹ்ம-மஹார்ணவே || 484 ||

484. (அகண்ட-ஆனந்த-) அளவு கடந்த ஆனந்தமாகிற (பீயூஷ-பூர்ணே) அமிருதம் நிறைந்த (ப்ரஹ்ம-மஹார்ணவே) பிரம்மமாகிய மகா சமுத்திரத்தில் (கிம் ஹேயம்) எது தள்ளத்தக்கது? (கிம் உபாதேயம்) எது கொள்ளத்தக்கது? (கிம் விலக்ஷணம்) எது சிறப்புடையது? (கிம் அன்யத்) எதுவேருனது?

ஒ. அத். உப. 66.

**न किंचिदत्र पश्यामि न शृणोमि न वेद्म्यहम् ।**
**स्वात्मनैव सदानन्द-रूपेणास्मि विलक्षणः ॥ ४८५ ॥**

ந கிஞ்சிதத்ர பச்யாமி ந ச்ருணோமி ந வேத்ம்யஹம் | ஸ்வாத்மனைவ ஸதானந்த-ரூபேணாஸ்மி விலக்ஷணः || 485 ||

485. (அத்ர) இங்கு (கிஞ்சித்) எது ஒன்றையும் சிறிதுகூட (அஹம்) நான் (ந பச்யாமி) காணவில்லை; (ந ச்ருணோமி) கேட்கவில்லை; (ஸ்வ-ஆத்மனு ஏவ) நான் நானுகவே (ஸதா) எப்பொழுதும் (ஆனந்தரூபேண) ஆனந்த வடிவினனுய் (விலக்ஷணঃ) முன்னிருந்த நிலையினின்று முற்றும் வேறுபட்ட சிறப்புடையவனுய் (அஸ்மி) இருக்கிறேன்.

ஓ. அத். உப. 67.

**नमो नमस्ते गुरवे महात्मने विमुक्तसंगाय सदुत्तमाय ।**
**नित्याद्वयानन्द - रसस्वरूपिणे भूम्ने सदाऽपारदयाम्बुधाम्ने**
**॥ ४८६ ॥**

நமோ நமஸ்தே குரவே மஹாத்மனே விமுக்த-ஸங்காய ஸதுத்தமாய | நித்யாத்வயானந்த - ரஸ - ஸ்வரூபிணே பூம்னே ஸதாऽபார - தயாம்புதாம்னே || 486 ||

486. (விமுக்தஸங்காய) பற்றற்றவரும் (ஸத்-உத்தமாய) ஸாதுக்களிற் சிறந்தவரும் (நித்ய-அத்வய-ஆனந்த-ரஸ-ஸ்வரூபிணே) என்றும் அத்வய ஆனந்தச் சுவை வடிவானவரும் (பூம்னே) அளவுகடந்தவரும் (ஸதா) எப்பொழுதும் (அபார) எல்லையற்ற (தயா) கருணையாகிற (அம்புதாம்னே) கடல்போன்றவரும் (மஹாத்மனே) மகாத்மாவும் ஆகிய (குரவே) குருவிற்கு (நமঃ) நமஸ்காரம். (நமஸ்தே) குருவே! மீண்டும் நமஸ்காரம்.

**यत्कटाक्ष - शशि - सान्द्र - चन्द्रिका-**
**पात - धूत - भवतापज - श्रमः ।**
**प्राप्तवानह - मखण्डवैभवा -**
**नन्दमात्मपदमक्षयं क्षणात् ॥ ४८७ ॥**

யத்கடாக்ஷ-சசி-ஸாந்த்ர-சந்த்ரிகா-பாத - தூத-பவ-தாபஜ-ச்ரமः | ப்ராப்தவானஹ-மகண்டவைபவா-னந்த-மாத்மபத-மக்ஷயம் க்ஷணாத் || 487 ||

487. (யத் கடாக்ஷ) எவருடைய கடைக்கண் பார்வையாகிற (சசி-ஸாந்த்ர-சந்த்ரிகா) குளிர்ச்சியான சந்திரப் பிரகாசம் (பாத) விழுந்ததால் (தூத - பவ - தாபஜ-ச்ரமः) பிறவியாகிற கடும் வெயிலின் சிரமம் தீர்ந்து (அஹம்) நான் (அகண்ட - வைபவ-ஆனந்தம்) அளவுகடந்த பெருமை வாய்ந்த ஆனந்தமாகியதும் (அக்ஷயம்) அழிவற்றதுமான (ஆத்மபதம்) ஆத்ம பதத்தை (க்ஷணாத்) ஒரு நொடிப்பொழுதில் (ப்ராப்த வான்) அடைந்தவன் ஆனேனே—அந்த குருவிற்கு நமஸ்காரம்.

धन्योऽहं कृतकृत्योऽहं विमुक्तोऽहं भवग्रहात् ।
नित्यानन्द - स्वरूपोऽहं पूर्णोऽहं त्वदनुग्रहात् ॥४८८॥

தன்யோऽஹம் க்ருதக்ருத்யோऽஹம் விமுக்தோऽஹம் பவக்ரஹாத் | நித்யானந்த-ஸ்வரூபோऽஹம் பூர்ணோऽஹம் த்வதனுக்ரஹாத் || 488 ||

488. (த்வத்-அனுக்ரஹாத்) தங்களுடைய அனுக்கிரகத்தால் (அஹம் தன்யः) நான் பாக்கியசாலியாகி விட்டேன்; (அஹம் க்ருதக்ருத்யः) நான் செய்யவேண்டியதைச் செய்து வாழ்வின் பயனை யடைந்தவனாகி விட்டேன்; (பவக்ரஹாத்) பிறவித்தளையின் பிடிப்பிலிருந்து (அஹம் விமுக்தः) நான் விடுபட்டவனாகிவிட்டேன்; (நித்ய-ஆனந்த - ஸ்வரூபः அஹம்) என்றும் ஆனந்த வடிவினனாகி விட்டேன்; (பூர்ணः அஹம்) பரிபூர்ணனாகி விட்டேன்.

असंगोऽह - मनंगोऽह - मलिंगोऽह - मभंगुरः ।
प्रशान्तोऽह - मनन्तोऽह - ममलोऽहं - चिरन्तनः ॥ ४८९ ॥

அஸங்கோऽஹ-மனங்கோऽஹ-மலிங்கோऽஹ -மபங் குர: | ப்ரசாந்தோऽஹ - மனந்தோऽஹ - மமலோऽஹம் சிரந்தன: || 489 ||

489. (அஹம் அஸங்க:) நான் பற்றேது மில்லாதவன் ; (அஹம் அனங்க:) நான் சரீரமில்லாதவன் ; (அஹம் அலிங்க:) நான் அடையாளமேதுமில்லாதவன் ; (அபங்குர:) அழிவில்லாதவன் ; (அஹம் ப்ரசாந்த:) நான் பரம சாந்தன் ; (அஹம் அனந்த:) நான் அளவு கடந்தவன் ; (அஹம் அமல:) நான் மாசற்றவன் ; (சிரந்தன:) என்றுமுள்ளவன்.

அனந்தோऽஹ-மதாந்தோऽஹம் —பா. பே.

ஒ. அத். உப. 68.

अकर्ताह - मभोक्ताह - मविकारोऽहमक्रियः ।
शुद्धबोध - स्वरूपोऽहं केवलोऽहं सदाशिवः ॥ ४९० ॥

அகர்த்தாஹ - மபோக்தாஹ - மவிகாரோऽஹ - மக்ரிய: | சுத்தபோத-ஸ்வரூபோऽஹம் கேவலோऽஹம் ஸதாசிவ: || 490 ||

490. (அஹம் அகர்த்தா) நான் எதையும் செய்பவனல்லன் ; (அஹம் அபோக்தா) நான் எதையும் அனுபவிப்பவன் அல்லன் : (அஹம் அவிகார:) நான் மாறுதலில்லாதவன் ; (அஹம் அக்ரிய:) நான் செயலேது மில்லாதவன் ; (அஹம் சுத்த-போத - ஸ்வரூப:) நான் பரிசுத்தமான அறிவு வடிவினன் ; (அஹம் கேவல:) நான் எத்தொடர்பு மற்றவன் ; (ஸதாசிவ:) என்றும் மங்கள வடிவினன்.

ஒ. அத். உப. 69.

**द्रष्टुः श्रोतु-र्वक्तुः कर्तु-र्भोक्तु-र्विभिन्न एवाहम् ।**
**नित्य - निरन्तर - निष्क्रिय - निःसीमासंगपूर्णबोधात्मा**
**॥ ४९१ ॥**

த்ரஷ்டுः ச்ரோதுர்-வக்துः கர்த்துர்-போக்துர்-விபின்ன ஏவாஹம் | நித்ய-நிரந்தர - நிஷ்க்ரிய - நிःஸீமாஸங்க-பூர்ண-போதாத்மா || 491 ||

491. (த்ரஷ்டுः) பார்ப்பவனைக் காட்டிலும் (ச்ரோதுः) கேட்பவனைக் காட்டிலும் (வக்துः) பேசுபவனைக் காட்டிலும் (கர்த்துः) செயல் புரிபவனைக் காட்டிலும் (போக்துः) அனுபவிப்பவனைக் காட்டிலும் (அஹம்) நான் (விபின்னः ஏவ) வேறானவனே. (நித்ய-) என்றுமுள்ள (நிரந்தர-) எங்கும் நிறைந்த (நிஷ்க்ரிய) செயலற்ற (நீः ஸீம) எல்லையற்ற (அஸங்க) பற்றற்ற (பூர்ண-) பரிபூர்ண (போத-ஆத்மா) ஞான வடிவான ஆத்மா—நான்.

**नाहमिदं नाहमदोऽप्युभयो - रवभासकं परं शुद्धम् ।**
**बाह्याभ्यन्तर-शून्यं पूर्णं ब्रह्माद्वितीय-मेवाहम् ॥ ४९२ ॥**

நாஹமிதம் நாஹமதோऽப்யுபயோ-ரவபாஸகம் பரம் சுத்தம் | பாஹ்யாப்யந்தர-சூன்யம் பூர்ணம் ப்ரஹ்மாத்விதீய-மேவாஹம் || 492 ||

492. (அஹம்) நான் (ந இதம்) இதுவல்லன்; (அஹம்) நான் (நஅதः) அதுவல்லன்; (அபி) எனினும் (உபயோः) இரண்டிற்கும் (அவபாஸகம்) பிரகாசிப்பவன்; (பரம்) உயர்ந்ததும் (சுத்தம்) பரிசுத்தமானதும் (பாஹ்ய-அப்யந்தர-சூன்யம்) புறமும் அகமுமில்லாததும் (பூர்ணம்) பரிபூர்ணமும் ஆன (அத்விதீய) இரண்டற்ற (ப்ரஹ்மம் ஏவ) பிரம்மமே (அஹம்) நான்.

ஓ. 'பூர்ணமத: பூர்ணமிதம் பூர்ணாத் பூர்ணமுதச்யதே | பூர்ணஸ்ய பூர்ணமாதாய பூர்ணமேவாவசிஷ்யதே ||' அது பூர்ணம், இதுவும் பூர்ணம். பூர்ணத்திலிருந்து பூர்ணம் உதயமாயுள்ளது. பூர்ணத்தினின்று பூர்ணத்தை யெடுத்தும் பூர்ணமே மிஞ்சி நிற்கின்றது. —ஈச. உப. சாந்தி.

**निरुपम - मनादितत्त्वं त्वमह-मिदमद इति कल्पनादूरम् ।**
**नित्यानन्दैकरसं सत्यं ब्रह्माद्वितीय-मेवाहम् ॥ ४९३ ॥**

நிருபம - மனாதிதத்வம் த்வமஹ-மித - மத இதி கல்பனா-தூரம் | நித்யானந்தைக - ரஸம் ஸத்யம் ப்ரஹ்மாத்விதீய-மேவாஹம் || 493 ||

493. (நிருபமம்) ஒப்பற்றதும் (அனாதி தத்வம்) அனாதியான தத்துவமும் (த்வம்-அஹம் - இதம்-அதः இதி கல்பனா-தூரம்) நீ நான் இது அது என்ற கல்பனைகளைக் கடந்ததும் (நித்ய - ஆனந்த-ஏகரஸம்) என்றும் ஆனந்த ரஸவடிவாகியதும் (ஸத்யம்) உண்மையானதும் ஆகிய (அத்விதீய-ப்ரஹ்ம ஏவ) அத்விதீயமான பிரம்மமே (அஹம்) நான்.

**नारायणोऽहं नरकान्तकोऽहं पुरान्तकोऽहं पुरुषोऽहमीशः ।**
**अखण्डबोधोऽहमशेष-साक्षी निरीश्वरोऽहं निरहं च निर्ममः ॥ ४९४ ॥**

நாராயணோ஽ஹம் நரகாந்தகோ஽ஹம் புராந்தகோ஽ஹம் புருஷோ஽ஹமீசः | அகண்ட - போதோ஽ஹமசேஷ-ஸாக்ஷீ நிரீச்வரோ஽ஹம் நிரஹஞ் ச நிர்மமः ||494 ||

494. (அஹம்) நான் (நாராயணः) நாராயணன், (நரகாந்தகः) நரகாசுரனைக் கொன்றவன் (அஹம்)

நான்; (புராந்தகঃ) திரிபுரத்தை எரித்தவன் (அஹம்) நான்; (புருஷঃ அஹம் ஈசঃ) எல்லோருடைய அந்தர் யாமியும் ஆள்பவனும் நான்; (அகண்ட போதঃ) குறைவுபடாத அறிவு வடிவினனும் (அசேஷஸாக்ஷீ) அனைத்திற்கும் ஸாக்ஷியும் (அஹம்) நான்; (நிரீச்வரঃ அஹம்) என்னை ஆள்பவன் எவனுமில்லாதவன்; (நிரஹஞ்ச) அஹங்காரமில்லாதவன் (நிர்மமঃ) மமதை யில்லாதவன்.

ஒ. குண்டிகா உப. 17.

ஒ. 'அத ஏவ ச அனன்யாதிபதிঃ' அதனாலேயே அவனுக்கு வேறு அதிபதியில்லை. பி. சூ. 4. 4. 9.

**सर्वेषु भूतेष्वहमेव संस्थितो ज्ञानात्मनाऽन्तर्बहिराश्रयः सन् ।**
**भोक्ता च भोग्यं स्वयमेव सर्वं यद्यत्पृथग्दृष्ट-मिदन्तया पुरा ॥**
**४९५ ॥**

ஸர்வேஷு பூதேஷ்-வஹமேவ ஸம்ஸ்திதோ ஜ்ஞானாத்மனாऽந்தர்-பஹிராச்ரயঃ ஸன் | போக்தா ச போக்யம் ஸ்வயமேவ ஸர்வம் யத்யத் ப்ருதக்த்ருஷ்ட-மிதந்தயா புரா || 495 ||

495. (ஸர்வேஷு பூதேஷு) எல்லாப் பிராணி களிடத்தும் (அஹம் ஏவ) நான் ஒருவனே (ஜ்ஞான-ஆத்மனா) ஞானவடிவில் (அந்தঃ பஹிঃ ஆச்ரயঃ ஸன்) உள்ளும் புறமும் வியாபித்துக்கொண்டு (போக்தா ச) அனுபவிப்பவனாகவும் (போக்யம்) அனுபவிக்கப்படும் பொருளாகவும் (ஸம்ஸ்திதঃ) நிலைபெற்றுள்ளேன். (யத்யத்) எதெது (புரா) முன்பு (இதந்தயா) இது வென்று (ப்ருதக்) வேறாக (த்ருஷ்டம்) காணப்பட்டதோ (ஸர்வம்) அதுவெல்லாம் (ஸ்வயம் ஏவ) நானே.

ஜ்ஞாத்ராத்மனா | தத்யத் ப்ருதக்த்ருஷ்டம் | —பா. பே.

**मय्यखण्ड-सुखाम्भोधौ बहुधा विश्ववीचयः ।**
**उत्पद्यन्ते विलीयन्ते माया-मारुत-विभ्रमात् ॥ ४९६ ॥**

மய்யகண்ட - ஸுகாம்போதௌ பஹுதா விச்வ-வீசயঃ | உத்பத்யந்தே விலீயந்தே மாயா-மாருத-விப்ரமாத் || 496 ||

496. (அகண்ட - ஸுக-அம்போதௌ) பரிபூர்ண இன்பக் கடலாகிய (மயி) என்னிடத்தில் (பஹுதா) பல வகையான (விச்வ-வீசயঃ) உலகமெனும் அலைகள் (மாயா-மாருத - விப்ரமாத்) மாயை எனும் காற்றின் வேகமான சுழற்சியால் (உத்பத்யந்தே விலீயந்தே) தோன்றவும் மறையவும் செய்கின்றன.

**स्थूलादि-भावा मयि कल्पिता भ्रमा-**
**दारोपितानुस्फुरणेन लोकैः ।**
**काले यथा कल्पकवत्सरायण-**
**र्त्वादयो निष्कल-निर्विकल्पे ॥ ४९७ ॥**

ஸ்தூலாதி-பாவா மயி கல்பிதா ப்ரமா-தாரோபிதா னுஸ்புரணேன லோகைঃ | காலே யதா கல்பக-வத்ஸ ராயண-ருத்வாதயோ நிஷ்கல-நிர்விகல்பே || 497 ||

497. (நிஷ்கல - நிர்விகல்பே) பகுக்கப்படாமல் கற்பனைகளேதுமின்றி யிருக்கும் (காலே) காலத்தில் (யதா) எவ்வாறு (கல்பக-) கல்பம் (வத்ஸர-) வருஷம் (அயண-) அயனம் (ருது ஆதயঃ) ருது முதலியவை கள் (கல்பிதாঃ) கற்பனை செய்யப்படுகின்றவோ அவ் வாறே—(லோகை)ঃ உலக ஜனங்களால் (ஆரோபித-அனுஸ்புரணேன) கற்பனையின் தோற்றத்தால் (ப்ரமாத்) தவருக (ஸ்தூல ஆதி பாவாঃ) ஸ்தூலம்

முதலிய பாவனைகள் (மயி) என்னிடம்--(கல்பிதாः) கற்பிக்கப்பட்டுள்ளன.

**आरोपितं नाश्रयदूषकं भवेत् कदापि मूढै-रतिदोषदूषितैः ।**
**नार्द्रीकरोत्यूषरभूमि-भागं मरीचिकावारि-महाप्रवाहः ॥४९८॥**

ஆரோபிதம் நாச்ரய - தூஷகம் பவேத் கதாபி மூடை - ரதி - தோஷ - தூஷிதைः | நார்த்ரீகரோத் - யூஷரபூமிபாகம் மரீசிகா-வாரி-மஹாப்ரவாஹः || 498 ||

498: (அதி-தோஷ-தூஷிதைः) பல தோஷங்களால் மதிகெட்டுப்போன (மூடைः) மூடர்களால் (ஆரோபிதம்) கற்பனை செய்யப்பட்டது (ஆச்ரய-தோஷகம்) அடிப்படையான பொருளைக் கெடுப்பதாக (கதா-அபி) ஒரு பொழுதும் (ந பவேத்) ஆகாது; (மரீசிகாவாரி) கானல் நீரின் (மஹாப்ரவாஹः) பெரு வெள்ளம் (ஊஷரபூமி-பாகம்) பாலைவன பூமி பாகத்தை (ந ஆர்த்ரீ கரோதி) ஈரமுள்ளதாகச் செய்துவிடாது.

ஒ. 'தத்ரைவம்ஸதி யத்ர யதத்யாஸः தத் க்ருதேன குணேன தோஷேண வா அணுமாத்ரேணாபி ஸ ந ஸம்பத்த்யதே' அது அப்படியிருப்பதால் அதில் அத்யாஸம் செய்யப்பட்டதின் குணத்தாலோ தோஷத்தாலோ அணுவளவும் அது ஸம்பந்தப் படுவதில்லை.
—சங். அத்த்யாஸ பாஷ்யம்.

மூடைர்-மதிதோஷ-தூஷிதைः |
—பா. பே.

**आकाशवल्लेपविदूरगोऽह-मादित्यवद्भास्यविलक्षणोऽहम् ।**
**अहार्यवन्नित्यविनिश्चलोऽह-मम्भोधिवत्पार-विवर्जितोऽहम् ॥ ४९९ ॥**

ஆகாசவல்லேப-விதூரகோऽஹ - மாதித்யவத் பாஸ்ய விலக்ஷணோऽஹம் | அஹார்யவந் நித்ய விநிச்

சலோऽஹ-மம்போதிவத் பார-விவர்ஜிதோऽஹம் ||
499 ||

499. (ஆகாசவத்) ஆகாயத்தைப்போல் (அஹம்) நான் (லேப-விதூரக:) எதுவும் பற்றுதபடி வெகுதூரஞ் சென்றவன்; (ஆதித்யவத்) சூரியனைப்போல் (அஹம்) நான் (பாஸ்ய-விலக்ஷண:) பிரகாசத்தைப் பெறும் பொருள்களைக் காட்டிலும் வேருனவன்; (அஹார்யவத்) மலையைப்போல் (அஹம்) நான் (நித்ய-விநிச்சல:) என்றும் அசையாதவன்; (அம்போதிவத்) சமுத்திரத்தைப்போல் (அஹம்) நான் (பார-விவர்ஜித:) கரையில்லாதவன்.

குண்டிகா உப. 16.

न मे देहेन संबन्धो मेघेनेव विहायसः ।
अतः कुतो मे तद्धर्मा जाग्रत्स्वप्न-सुषुप्तयः ॥ ५०० ॥

ந மே தேஹேன ஸம்பந்தோ மேகேனேவ விஹாயஸ: | அத: குதோ மே தத்தர்மா ஜாக்ரத்ஸ்வப்ன-ஸுஷுப்தய: ||
500 ||

500. (மே) எனக்கு (தேஹேன) உடலுடன் (ந ஸம்பந்த:) சம்பந்தமில்லை — (விஹாயஸ:) வானத்திற்கு (மேகேன இவ) மேகத்துடன் சம்பந்தம் இல்லாதவாறு; (அத:) ஆகையால் (தத்-தர்மா:) அதனுடைய இயற்கையான (ஜாக்ரத்-ஸ்வப்ன - ஸுஷுப்தய:) விழிப்பு, கனவு, உறக்கம் என்ற நிலைகள் (மே) எனக்கு (குத:) எங்கிருந்து வரக்கூடும்?

ஒ. குண்டிகா உப. 15.

उपाधिरायाति स एव गच्छति स एव कर्माणि करोति भुंक्ते ।
स एव जीर्यन् म्रियते सदाहं कुलाद्रिवन्निश्चल एव संस्थितः
॥ ५०१ ॥

உபாதிராயாதி ஸ ஏவ கச்சதி ஸ ஏவ கர்மாணி கரோதி புங்க்தே | ஸ ஏவ ஜீர்யன் ம்ரியதே ஸதாஹம் குலாத்ரிவந் நிச்சல ஏவ ஸம்ஸ்திதः || 501 ||

501. (உபாதிः) உபாதியானது (ஆயாதி) வருகிறது, (ஸः ஏவ) அதுவே (கச்சதி) போகிறது, (ஸः ஏவ) அதுவே (கர்மாணி) செயல்களை (கரோதி) செய்கிறது, (புங்க்தே)—அவற்றின் பயனை—அனுபவிக்கிறது, (ஸः ஏவ) அதுவே (ஜீர்யன்) கிழத்தனத்தையடைந்து (ம்ரியதே) மரிக்கிறது; (அஹம்) நான் (ஸதா) எப்பொழுதும் (குல-அத்ரிவத்) முக்கியமான குலபர்வதத்தைப்போல் (நிச்சலः ஏவ) அசைவற்றவனாக (ஸம்ஸ்திதः) நிலைபெற்றுள்ளேன்.

ஒ. 'யதா ச தக்ஷோபயதா' எங்ஙனம் தச்சன் (ஆயுதங்களை உபயோகிக்கும்போது தச்சனாகவும் மற்றபோது ஸாதாரண மனிதனாகவும்) இருக்கிறானோ அங்ஙனம் (ஜீவாத்மா புத்தியுடன் கூடிக் கர்த்தாவாகவும் அகர்த்தாவாக ஆனந்தமாகவும்) இரண்டாகவும் இருக்கின்றது. —பி. சூ. 2. 3. 16

சராசரவ்யபாச்ரயஸ்து ஸ்யாத் தத்வ்யபதேசோ பாக்தஃ தத்பாவபாவித்வாத்' சராசரத்தை ஆசிரயித்து (பிறப்பும் இறப்பும்) உளது; ஆனால் அங்ஙனம் கூறியது உபசாரமாக; (பிறப்பு இறப்பு என்ற) அந்த பாவனை சரீர பாவனையாலேயே ஏற்பட்டது. (ஆத்மாவுக்குப் பிறப்பும் இறப்பும் இல்லை). —பி. சூ. 2. 3. 16.

ஸ ஏவ ஜீவன் ம்ரியதே | —பா. பே.

न मे प्रवृत्ति-र्न च मे निवृत्तिः सदैकरूपस्य निरंशकस्य ।
एकात्मको यो निबिडो निरन्तरो व्योमेव पूर्णः स कथं नु चेष्टते ॥ ५०२ ॥

ந மே ப்ரவ்ருத்திர் ந ச மே நிவ்ருத்திः ஸதைக-ரூபஸ்ய நிரம்சகஸ்ய | ஏகாத்மகோ யோ நிபிடோ

நிரந்தரோ வ்யோமேவ பூர்ணஃ ஸ கதம் நு சேஷ்டதே || 502 ||

502. (ஸதா) எப்பொழுதும் (ஏகரூபஸ்ய) ஒரே வடிவானவனும் (நிரம்சகஸ்ய) பின்னப்படாதவனு மான (மே) எனக்கு (ந ப்ரவ்ருத்திஃ) செயலில் பிரவேச மில்லை; (ச) மேலும் (மே) எனக்கு (ந நிவ்ருத்திஃ) செயலினின்று விலகுதலுமில்லை. (யஃ) எது (ஏகாத்மகஃ) ஒன்றேயாகவும் (நிரந்தரஃ நிபிடஃ) இடைவெளியின்றி நெருங்கியதாகவும் (வ்யோம இவ) ஆகாயத்தைப்போல் (பூர்ணஃ) எங்கும் நிறைந்துளதோ (ஸஃ) அது (கதம் நு) எப்படித்தான் (சேஷ்டதே) செயல் புரியும்.

**पुण्यानि पापानि निरिन्द्रियस्य**
**निश्चेतसो निर्विकृते-र्निराकृतेः ।**
**कुतो ममाखण्ड-सुखानुभूते-**
**र्ब्रूते ह्यनन्वागत-मित्यपि श्रुतिः ॥ ५०३ ॥**

புண்யானி பாபானி நிரிந்த்ரியஸ்ய நிச்சேதஸோ நிர்விக்ருதேர்-நிராக்ருதேஃ | குதோ மமாகண்ட-ஸுகானுபூதேர்-ப்ரூதே-ஹ்யனன்வாகத-மித்யபி ச்ருதிஃ || 503 ||

503. (நிரிந்த்ரியஸ்ய) இந்திரியங்களில்லாதவனும் (நிச்சேதஸஃ) மனமில்லாதவனும் (நிர்விக்ருதேஃ) மாறுபாடற்றவனும் (நிராக்ருதேஃ) ரூபமற்றவனும் (அகண்ட-ஸுக-அநுபூதேஃ) அளவுகடந்த இன்பத்தையனுபவிப்பவனும் ஆகிய (மம) எனக்கு (புண்யானி) புண்ணியங்களும் (பாபானி) பாவங்களும் (குதஃ) எங்கிருந்து வரும்? (ச்ருதிஃ அபி) வேதமுங்கூட (அனன்வாகதம் இதி)—'அனன்வாகதம் புண்யேன அனன்

வாகதம் பாபேன'—புண்ணியத்தாலும் பாவத்தாலும் தொடரப்படாதவன்' என்று (ப்ருதே ஹி) கூற வில்லையா?

ஒ. 'அனன்வாகதம் புண்யேன அனன்வாகதம் பாபேன தீர்ணோஹி ததா ஸர்வான் சோகான் ஹ்ருதயஸ்ய பவதி'.
ப்ரு. உப. 4. 3. 22.

ஒ. 'விக்ஷேபோ நாஸ்தி யஸ்மான்மே ந ஸமாதிஸ்-ததோ மம| விக்ஷேபோ வா ஸமாதிர் வா மனஸஃ ஸ்யாத்விகாரிணஃ||' எனக்கு விக்ஷேபமின்மையால் ஸமாதியும் அவ்வாறே இல்லை. விக்ஷேபமும் ஸமாதியும் விகாரத்தை யடையும் மனதினுடையவை.
—பஞ்சதசீஃ 14. 52.

**छायया स्पृष्ट-मुष्णं वा शीतं वा सुष्ठु दुष्ठु वा ।**
**न स्पृशत्येव यत्किंचित्पुरुषं तद्विलक्षणम् ।। ५०४ ।।**

ச்சாயயா ஸ்ப்ருஷ்ட-முஷ்ணம் வா சீதம் வா ஸுஷ்டு துஷ்டு வா | ந ஸ்ப்ருசத்யேவ யத் கிஞ்சித் புருஷம் தத் விலக்ஷணம் || 504 ||

504. (உஷ்ணம் வா சீதம் வா) வெப்பமோ குளிர்ச்சியோ (ஸுஷ்டு துஷ்டு வா) நல்லதோ கெட்டதோ (ச்சாயயா ஸ்ப்ருஷ்டம்) ஒரு புருஷனுடைய நிழலால் தொடப்பட்டால் (தத் விலக்ஷணம்) அதினின்று வேறான (புருஷம்) புருஷனை (யத் கிஞ்சித்) கொஞ்சங்கூட (ந ஸ்ப்ருசதி ஏவ) தொடவே தொடாது.

ஒ. குண்டிகா உப. 23.

**न साक्षिणं साक्ष्यधर्मा संस्पृशन्ति विलक्षणम् ।**
**अविकार-मुदासीनं गृहधर्माः प्रदीपवत् ।। ५०५ ।।**

ந ஸாக்ஷிணம் ஸாக்ஷ்யதர்மா ஸம்ஸ்ப்ருசந்தி விலக்ஷணம் | அவிகார-முதாஸீனம் க்ருஹதர்மாஃ ப்ரதீபவத் 505 ||

505. (ஸாக்ஷ்யதர்மாঃ) பார்க்கப்பட்ட பொருளின் குணங்கள் (விலக்ஷணம்) பார்க்கப்பட்டதினின்று வேறானவனும் (அவிகாரம்) மாறுதலற்றவனும் (உதாஸீனம்) பற்றற்றவனும் ஆன (ஸாக்ஷிணம்) பார்ப்பவனை (க்ருஹதர்மாঃ) வீட்டின் குணங்கள் (ப்ரதீபவத்) வீட்டில் வைதத விளக்கைத் தொடாதவாறு (ந ஸம்ஸ்ப்ருசந்தி) தொடமாட்டா.

ஒ குண்டிகா உப. 23.

அவிகார-முதாஸீனம் க்ருஹதர்மாঃ ப்ரதீபவத்|

தேஹேந்த்ரிய-மனோதர்மா நைவாத்மானம்ஸ்ப்ருசந்த்யஹோ||

—பா. பே.

**रवेर्यथा कर्मणि साक्षिभावो वह्नेर्यथा वाऽसि दाहकत्वम् ।**
**रज्जोर्यथाऽऽरोपितवस्तुसंग-स्तथैव कूटस्थचिदात्मनो मे ॥५०६**

ரவேர்-யதா கர்மணி ஸாக்ஷிபாவோ வஹ்னேர்-யதா வாऽயஸி தாஹகத்வம்| ரஜ்ஜோர்யதா ऽऽரோபித வஸ்து-ஸங்கஸ்-ததைவ கூடஸ்த-சிதாத்மனோ மே ||
506 ||

506. (ரவேঃ) சூரியனுக்கு (கர்மணி) செயல்களில் (ஸாக்ஷிபாவঃ) ஸாக்ஷியாயிருக்குந் தன்மை (யதா) எப்படியோ, (வஹ்னேঃ) அக்னிக்கு (அயஸி) இரும்பில் (தாஹகத்வம் வா) எரிக்குந் தன்மை (யதா) எப்படியோ, (ரஜ்ஜோঃ) பழுதைக்கு (ஆரோபித-) கற்பனை செய்யப்பட்ட (வஸ்து ஸங்கঃ) பொருளுடன் பற்று (யதா) எப்படியோ, (ததா ஏவ) அப்படித்தான் (கூடஸ்த-சிதாத்மனঃ மே) கூடஸ்தனும் அறிவுமயமாகியவனுமான எனக்கு.

வஹ்னேர்யதா தாஹ-நியாமகத்வம் —பா. பே.

कर्तापि वा कारयितापि नाहं
भोक्तापि वा भोजयितापि नाहम् ।
द्रष्टापि वा दर्शयितापि नाहं
सोऽहं स्वयंज्योति-रनीदृगात्मा ॥ ५०७ ॥

கர்த்தாபி வா காரயிதாபி நாஹம் போக்தாபி வா போஜயிதாபி நாஹம் | த்ரஷ்டாபி வா தர்சயிதாபி நாஹம் ஸோऽஹம் ஸ்வயஞ்ஜ்யோதி-ரனீத்ருகாத்மா 507||

507. (கர்த்தா அபி வா) செய்பவனுகவோ (காரயிதா அபி வா) செய்விப்பவனுகவோ (அஹம்) நான் (ந) இல்லை. (போக்தா அபி வா) அனுபவிப்பவனுகவோ (போஜயிதா அபி) அனுபவிக்கச் செய்பவனுகவோ (அஹம்) நான் (ந) இல்லை. (த்ரஷ்டாऽபி வா) காண்பவனுகவோ (தர்சயிதா அபி) காட்டுவிப்பவனுகவோ (அஹம்) நான்(ந) இல்லை. (ஸ: அஹம்) அந்த நான் (ஸ்வயஞ்ஜ்யோதி:) தானே பிரகாசிப்பவன். (அநீத்ருகாத்மா) இப்படிப் பட்டவனென்று கூற முடியாதவன்.

चलत्युपाधौ प्रतिबिम्बलौल्य-
मौपाधिकं मूढधियो नयन्ति ।
स्वबिम्बभूतं रविवद्विनिष्क्रियं
कर्तास्मि भोक्तास्मि हतोऽस्मि हेति ॥ ५०८ ॥

சலத்யுபாதௌ ப்ரதிபிம்ப - லௌல்ய-மௌபாதிகம் மூடதியோ நயந்தி | ஸ்வபிம்ப - பூதம் ரவிவத் விநிஷ்க்ரியம் கர்த்தாஸ்மி போக்தாஸ்மி ஹதோऽஸ்மி ஹேதி || 508 ||

508. (சலதி உபாதௌ)—ஜலம் போன்ற—உபாதியானது அசையும் போது (ஔபாதிகம்) உபாதியில் சம்பந்தப்பட்ட (ப்ரதி-பிம்ப-லௌல்யம்) பிரதிபிம்பத்தின் அசைவை (ஸ்வபிம்ப பூதம்)—சூரியன் போன்ற—மூலப் பொருளின் அசைவாக (மூடதியஃ) அறிவு மழுங்கியவர்கள் (நயந்தி) கருது கிறார்கள். (ரவிவத்-விநிஷ்க்ரியம்) சூரியனைப் போல் செயலற்றிருக்கும் தன்னை (கர்த்தா அஸ்மி) நான் கர்த்தாவாயிருக்கிறேன் (போக்தா அஸ்மி) நான்போக்தாவாயிருக்கிறேன் (ஹா) ஐயோ (ஹதஃ அஸ்மி) நான் பாழாய்ப் போனேன்—என்றெல்லாம் அறிவு மழுங்கியவர்கள் கருதுகிறார்கள்.

**जले वापि स्थले वापि लुठत्येष जडात्मकः ।**
**नाहं विलिप्ये तद्धर्मै-र्घटधर्मै-र्नभो यथा ॥ ५०९ ॥**

ஜலே வாபி ஸ்தலே வாபி லுடத்யேஷ ஜடாத்மகஃ |
நாஹம் விலிப்யே தத்தர்மைர் - கடதர்மைர் நபோ யதா || 509 ||

509. (ஜலே வா அபி) நீரிலோ (ஸ்தலே வா அபி) அல்லது தரையிலோ (ஏஷஃ ஜடாத்மகஃ) ஜடமான இவ்வுடல் (லுடது) விழுந்து போகட்டும். (கடதர்மைஃ) குடத்தின் குணங்களால் (நபஃ யதா) அதனுள் ளடங்கிய ஆகாயம் எப்படியோ அப்படி (அஹம்)—உடலில் உறையும்—நான் (தத்-தர்மைஃ) அதனுடைய குணங்களால் (ந விலிப்யே) பற்றப்படமாட்டேன்,

ஒ. குண்டிகா உப. 24.

**कर्तृत्व-भोक्तृत्व-खलत्व-मत्तता-**
**जडत्व-बद्धत्व-विमुक्तताद्यः ।**

बुद्धे-र्विकल्पा न तु सन्ति वस्तुतः
स्वस्मिन् परे ब्रह्मणि केवलेऽद्वये ॥ ५१० ॥

கர்த்ருத்வ - போக்த்ருத்வ-கலத்வ-மத்ததா-ஜடத்வ-பத்தத்வ-விமுக்ததாதயஃ | புத்தேர்-விகல்பா ந து ஸந்தி வஸ்துதஃ ஸ்வஸ்மின் பரே ப்ரஹ்மணி கேவலே ऽத்வயே || 510 ||

510. (கர்த்ருத்வ-) கர்த்தாவாயிருத்தல் (போக்த்ருத்வ) போக்தாவாயிருத்தல் (கலத்வ) துஷ்டனுயிருத்தல் (மத்ததா) மதிமயங்கியிருத்தல் (ஜடத்வ) கட்டைபோலிருத்தல் (பத்தத்வ-) கட்டுப்பட்டிருத்தல் (விமுக்ததா) விடுபட்டிருத்தல் (ஆதயஃ) முதலியவையெல்லாம் (புத்தேஃ) புத்தியின் (விகல்பாஃ) விபரீதமான கற்பனைகள், (வஸ்துதஃ) உண்மையில் (கேவலே) தனிப்பட்டவனும் (அத்வயே) இரண்டற்றவனும் (பரே ப்ரஹ்மணி) பரப் பிரம்மமுமாகிய (ஸ்வஸ்மின்) தன்னிடத்தில் (நது ஸந்தி) அவை இல்லவே இல்லை.

सन्तु विकाराः प्रकृते-र्दशधा शतधा सहस्रधा वापि ।
किं मेऽसंगचितेस्तैर्न घनः क्वचिदम्बरं स्पृशति ॥५११॥

ஸந்து விகாராஃ ப்ரக்ருதேர் தசதா சததா ஸஹஸ்ரதா வாபி| கிம் மேऽஸங்க-சிதேஸ்-தைர் ந கனஃ க்வசிதம்பரம் ஸ்ப்ருசதி || 511 ||

511. (ப்ரக்ருதேஃ) பிரகிருதியின் (விகாராஃ) மாறுதல்கள் (தசதா) பத்தாகவோ (சததா) நூருகவோ (ஸஹஸ்ரதா வா அபி) ஆயிரக் கணக்காகவோ (ஸந்து) இருக்கட்டும். (அஸங்கசிதேஃ) பற்றற்ற சித் ரூபியாயிருக்கும் (மே) எனக்கு (கிம்) அதனுலென்ன ? (கனஃ) மேகம் (அம்பரம்) ஆகாயத்தை

(க்வசித்) ஒருபொழுதும் (ந ஸ்ப்ருசதி) தொடாது— அவ்வாறே நான் எதனாலும் பற்றப்படாதவன்.

தைஃ கிம் மே ऽஸங்கசிதேர் ந ஹ்யம்புத்டம்பரோ ऽம்பரம் ஸ்ப்ருசதி | —பா. பே.

**अव्यक्तादि-स्थूलपर्यन्त-मेतद् विश्वं यत्राभासमात्रं प्रतीतम् ।**
**व्योमप्रख्यं सूक्ष्म-माद्यन्तहीनं ब्रह्माद्वैतं यत्तदेवाहमस्मि**
**॥ ५१२ ॥**

அவ்யக்தாதி-ஸ்தூலபர்யந்த-மேதத் விச்வம் யத்ராபாஸ-மாத்ரம் ப்ரதீதம்| வ்யோமப்ரக்யம் ஸூக்ஷ்ம-மாத்யந்த-ஹீனம் ப்ரஹ்மாத்வைதம் யத்ததேவாஹ-மஸ்மி || 512 ||

502. (அவ்யக்த-ஆதி) அவ்வியக்தம் முதல் (ஸ்தூல பர்யந்தம்) ஸ்தூலம் முடிய (ஏதத் விச்வம்) இவ்வுலகம் (யத்ர) எதனிடம் (ஆபாஸ - மாத்ரம்) தோற்ற வடிவில் மட்டும் (ப்ரதீதம்) காணப்படுகிறதோ (யத்) எது (வ்யோம - ப்ரக்யம்) ஆகாயத்தைப் போல் (ஸூக்ஷ்மம்) நுட்பமானதோ (ஆதி-அந்த - ஹீனம்) அடி முடியற்றதோ (தத்) அந்த (அத்வைதம்) இரண்டற்ற (ப்ரஹ்ம) பிரம்மமாகவே (அஹம் அஸ்மி) நான் இருக்கிறேன்.

**सर्वाधारं सर्ववस्तुप्रकाशं सर्वाकारं सर्वगं सर्वशून्यम् ।**
**नित्यं शुद्धं निश्चलं निर्विकल्पं ब्रह्माद्वैतं यत्तदेवाहमस्मि**
**॥ ५१३ ॥**

ஸர்வாதாரம் ஸர்வ-வஸ்து-ப்ரகாசம் ஸர்வாகாரம் ஸர்வகம் ஸர்வசூன்யம் | நித்யம் சுத்தம் நிச்சலம் நிர்விகல்பம் ப்ரஹ்மாத்வைதம் யத்ததேவாஹ-மஸ்மி || 513 ||

513. (ஸர்வ-ஆதாரம்) அனைத்திற்கும் ஆதாரமாயும் (ஸர்வ வஸ்து-ப்ரகாசம்) எல்லா வஸ்துக்களையும் பிரகாசிப்பதாயும் (ஸர்வ-ஆகாரம்) அனைத்தின் வடிவாயும் (ஸர்வகம்) எங்கும் நிறைந்ததாயும் (ஸர்வ சூன்யம்) குணங்குறி முதலியவனைத்து மற்றதாயும் (நித்யம்) என்றுமுளதாயும் (சுத்தம்) பரிசுத்தமாயும் (நிச்சலம்) அசைவற்றதாயும் (நிர்விகல்பம்) கற்பனைகளைக் கடந்ததாயும் (அத்வைதம்) இரண்டற்றதாயும் உள்ள (ப்ரஹ்ம) பிரம்மம் (யத்) எதுவோ (தத் ஏவ) அதுவாகவே (அஹம் அஸ்மி) நான் இருக்கிறேன்.

**यत्प्रत्यस्ताशेष-मायाविशेषं प्रत्यग्रूपं प्रत्ययागम्यमानम् ।**
**सत्यज्ञानानन्त-मानन्दरूपं ब्रह्माद्वैतं यत्तदेवाहमस्मि ।५१४॥**

யத்-ப்ரத்யஸ்தாசேஷ - மாயா - விசேஷம் ப்ரத்யக்-ரூபம் ப்ரத்யயாகம்ய - மானம் | ஸத்யஜ்ஞானனந்த - மானந்த - ரூபம் ப்ரஹ்மாத்வைதம் யத்ததேவாஹமஸ்மி || 514 ||

514. (யத்) எது (ப்ரத்யஸ்த-அசேஷ-மாயா-விசேஷம்) மாயையின் வேறுபாடுகளனைத்தையும் கடந்ததோ (ப்ரத்யக்ரூபம்) அனைத்துயிரினும் அந்தராத்மாவாயுளதோ (ப்ரத்யய-அகம்ய மானம்) மனதின் எண்ணங்களுக் கெட்டாததோ (ஸத்ய - ஜ்ஞான - அனந்தம் - ஆனந்தரூபம்) ஸத்தியமாயும் ஞானமாயும் எல்லையற்றதாயும் ஆனந்தவடிவாயும் உள்ளதோ (அத்வைதம் ப்ரஹ்ம) இரண்டற்ற பிரம்மமோ (தத் ஏவ) அதுவாகவே (அஹம் அஸ்மி) நான் இருக்கிறேன்.

யஸ்மின்னஸ்தாசேஷ. —பா. வே.

**निष्क्रियोऽस्म्यविकारोऽस्मि निष्कलोऽस्मि निराकृतिः ।**
**निर्विकल्पोऽस्मि नित्योऽस्मि निरालम्बोऽस्मि निर्द्वयः**
**॥ ५१५ ॥**

நிஷ்க்ரியோऽஸ்ம்யவிகாரோऽஸ்மி நிஷ்கலோऽஸ்மி நிராக்ருதி꞉ | நிர்விகல்போऽஸ்மி நித்யோऽஸ்மி நிராலம்போऽஸ்மி நிர்த்வய꞉ || 515 ||

515. (நிஷ்க்ரிய꞉ அஸ்மி) நான் செயலற்றவன் (அவிகார꞉ அஸ்மி) மாறுதலற்றவன், (நிஷ்கல꞉ அஸ்மி) பின்னப்படாதவன் (நிராக்ருதி꞉) வடிவற்றவன் (நிர்விகல்ப꞉ அஸ்மி) கற்பனைகளைக் கடந்தவன் (நித்ய꞉ அஸ்மி) என்றுமுள்ளவன், (நிராலம்ப꞉ அஸ்மி) தொடர்பற்றவன் (நிர்த்வய꞉) இரண்டற்றவன்.

ஒ. குண்டிகா உப. 25.

**सर्वात्मकोऽहं सर्वोऽहं सर्वातीतोऽहमद्वयः ।**
**केवलाखण्डबोधोऽहं-मानन्दोऽहं निरन्तरः ॥ ५१६ ॥**

ஸர்வாத்மகோऽஹம் ஸர்வோऽஹம் ஸர்வாதீதோऽஹமத்வய꞉ | கேவலாகண்ட - போதோऽஹ-மானந்தோऽஹம் நிரந்தர꞉ || 516 ||

516. (ஸர்வாத்மக꞉ அஹம்) நான் அனைத்திற்கும் ஆத்மா, (ஸர்வ꞉ அஹம்) நானே அனைத்தும், (ஸர்வ-அதீத꞉ அஹம்) நான் அனைத்தையும் கடந்தவன் (அத்வய꞉) இரண்டற்றவன் (கேவல-அகண்ட-போத꞉ அஹம்) அறிவே உருக்கொண்டவன் நான், (நிரந்தர꞉ ஆனந்த꞉ அஹம்) முடிவில்லாத ஆனந்த வடிவினன் நான்.

நிரந்தரம் | —பா. பே.

ஒ. குண்டிகா உப. 26.

**स्वाराज्य-साम्राज्य-विभूतिरेषा भवत्कृपा-श्री-महिम-प्रसादात् ।**
**प्राप्ता मया श्रीगुरवे महात्मने नमो नमस्तेऽस्तु पुनर्नमोऽस्तु ॥ ५१७ ॥**

ஸ்வாராஜ்ய-ஸாம்ராஜ்ய - விபூதி - ரேஷா பவத்-க்ருபாஸ்ரீ-மஹிம-ப்ரஸாதாத் | ப்ராப்தா மயா ஸ்ரீகுரவே மஹாத்மனே நமோ நமஸ்தேऽஸ்து புனர் - நமோऽஸ்து || 517 ||

517. (ஏஷா) இந்த (ஸ்வாராஜ்ய - ஸாம்ராஜ்ய விபூதிः) ஆத்ம ஒளியால் அனைத்தையும் ஆளும் ஐசுவரியம் (பவத்கிருபா) தங்களுடையகிருபையெனும் (ஸ்ரீமஹிம - ப்ரஸாதாத்) மஹாலக்ஷ்மியின் திருவருளால் (மயா ப்ராப்தா) என்னால் அடையப்பட்டது. (ஸ்ரீகுரவே மஹாத்மனே தே) மஹாத்மாவும் குருவுமாகிய தங்களுக்கு (நமः நமः அஸ்து) நமஸ்காரம் மேன்மேலும் உரித்தாகட்டும். (புனர் - நமோஸ்து) மீண்டும் மீண்டும் பன்முறை நமஸ்காரம்.

ஸ்ரீமஹித-ப்ரஸாதாத் | —பா. பே.

महास्वप्ने मायाकृत-जनि-जरा-मृत्यु-गहने
भ्रमन्तं क्लिश्यन्तं बहुलतरतापै-रनुदिनम् ।
अहंकार-व्याघ्र-व्यथित-मिम-मत्यन्तकृपया
प्रबोध्य प्रस्वापात्परमवितवान् मामसि गुरो ॥५१८॥

மஹாஸ்வப்னே மாயாக்ருத - ஜனி - ஜரா-ம்ருத்யு-கஹனே ப்ரமந்தம் க்லிச்யந்தம் பஹுலதரதாபை-ரனுதினம் | அஹங்கார - வ்யாக்ர - வ்யதித-மிம-மத்யந்த க்ருபயா ப்ரபோத்ய ப்ரஸ்வாபாத் பரமவிதவான் மாமஸி குரோ || 518 ||

518. (குரோ) குருநாதரே! (மஹாஸ்வப்னே) இந்த நீண்ட கனவுபோன்ற உலகில் (மாயாக்ருத-மாயையால் தோற்றுவிக்கப்பட்ட (ஜனி) பிறப்பு (ஜரா) மூப்பு (ம்ருத்யு) சாவு முதலியவை நிறைந்த (கஹனே) காட்டில் (ப்ரமந்தம்) வழிதெரியாமல் சுற்றிவருபவனும்

(அனுதினம்) தினந்தோறும் (பஹுலதர-தாபை꞉) பலவிதமான துக்கங்களால் (க்லிச்யந்தம்) வருந்துபவனும் (அஹங்கார - வ்யாக்ர - வ்யதிதம்) அஹங்காரமெனும் புலியால் துன்புறுத்தப்பட்டவனும் ஆகிய (இமம் மாம்) இந்த என்னை (அத்யந்த-க்ருபயா) அளவிறந்த கருணையால் (ப்ரஸ்வாபாத்) அவ்வாழ்ந்த உறக்கத்தினின்று (ப்ரபோத்ய) எழுப்பி (பரம் அவிதவான் அஸி) மிகச் சிறந்த முறையில் காத்தருளியவராகிறீர்.

**नमस्तस्मै सदैकस्मै कस्मैचिन्महसे नमः ।**
**यदेतद्विश्वरूपेण राजते गुरुराज ते ॥ ५१९ ॥**

நமஸ்தஸ்மை ஸதைகஸ்மை கஸ்மைசின் மஹஸே நம꞉ | யதேதத்-விச்வரூபேண ராஜதே குருராஜ தே || 519 ||

519. (குருராஜ) குருமார்களின் அரசே! (தே) உங்களுக்கு (நம꞉) நமஸ்காரம். (ஸத் ஏகஸ்மை) ஸத்தாகிய ஒரேபொருளாய் விளங்கும் (தஸ்மை) அந்த உங்களுக்கு (நம꞉) நமஸ்காரம் (யத்) எது (ஏதத்) இந்த (விச்வரூபேண) உலகவடிவில் (ராஜதே) பிரகாசிக்கிறதோ (கஸ்மைசித்) அந்த விளக்கமுடியாத (மஹஸே) பேரொளிவடிவினரான — உங்களுக்கு நமஸ்காரம்.

நமஸ்தஸ்மை ஸதைகஸ்மை நமச்சின்மஹஸே முஹு꞉ ।
—பா. பே.

## ॥ उपसंहारः ॥

**इति नत-मवलोक्य शिष्यवर्यं**
**समधिगतात्मसुखं प्रबुद्धतत्त्वम् ।**

प्रमुदितहृदयं स देशिकेन्द्रः
पुनरिद-माह वचः परं महात्मा ॥ ५२० ॥

உபஸம்ஹாரः

இதி நத-மவலோக்ய சிஷ்யவர்யம் ஸமதிகதாத்ம-ஸுகம் ப்ரபுத்த-தத்வம் | ப்ரமுதித-ஹ்ருதயம் ஸ தேசிகேந்த்ரः புனரித-மாஹ வசः பரம் மஹாத்மா || 520 ||

உபதேச முடிவு

520. (மஹாத்மா) மஹாத்மாவாகிய (ஸः) அந்த (தேசிக-இந்த்ரः) குருசிரேஷ்டர் (இதி) இங்ஙனம் (நதம்) வணங்கியவனும் (ஸமதிகத-ஆத்மஸுகம்) ஆத்மானந்தத்தை எய்தியவனும் (ப்ரபுத்த தத்வம்) ஞான விழிப்பால் உண்மையைக் கண்டுகொண்டவனும் (ப்ரமுதித-ஹ்ருதயம்) உள்ளத்தில் உவகை பொங்குபவனும் ஆகிய (சிஷ்யவர்யம்) சிறந்த சிஷ்யனை (அவலோக்ய) கண்குளிரப் பார்த்து(புனः) மேலும் (இதம்) இந்த (பரம்) சிறப்பான (வசः) வார்த்தையை (ஆஹ) சொன்னார்.

ப்ரமுதித ஹ்ருதயः —பா. பே.

ब्रह्म प्रत्यय-सन्तति-र्जगदतो ब्रह्मैव तत्सर्वतः
पश्याध्यात्मदृशा प्रशान्तमनसा सर्वास्ववस्थास्वपि ।
रूपादन्यदवेक्षितुं किमभित श्चक्षुष्मतां दृश्यते
तद्वद्ब्रह्मविदः सतः किमपरं बुद्धेर्विहारास्पदम्
॥ ५२१ ॥

ப்ரஹ்மப்ரத்யய - ஸந்ததிர் - ஜகததோ ப்ரஹ்மைவ தத் ஸர்வதः பச்யாத்யாத்ம - த்ருசா ப்ரசாந்த - மனஸா

ஸர்வாஸ்வவஸ்தாஸ்வபி | ரூபாதன்ய - தவேக்ஷிதும் கிமபிதச்-சக்ஷுஷ்மதாம் த்ருச்யதே தத்வத் ப்ரஹ்மவிதః ஸதః கிமபரம் புத்தேர் விஹாராஸ்பதம் || 521 ||

521. (ஸர்வாஸு அவஸ்தாஸு அபி) எல்லா நிலேகளிலும் (ப்ரசாந்த - மனஸா) அமைதியான மனதுடன் (ப்ரஹ்ம-ப்ரத்யய-ஸந்ததிः) பிரம்ம உணர்ச்சியே தொடர்ச்சியாயுளதென்றும் (அதः) ஆகையால் (ஜகத்) உலகம் (ஸர்வதः) எல்லா வகையிலும் (தத் ப்ரஹ்ம ஏவ) அந்த பிரம்மமே என்றும் (ஆத்ம த்ருசா) ஆத்ம திருஷ்டியால் (பச்ய) பார்ப்பாயாக. (சக்ஷுஷ்மதாம்) ஊனக்கண் படைத்தவருக்கு (அபிதः) எல்லாப் பக்கங்களிலும் (ரூபாத்-அன்யத்) உருவங்களேத்தவிற வேறு (கிம்) என்ன (த்ருச்யதே) காணப்படுகிறது? (தத்வத்) அதுபோலவே (ப்ரஹ்மவிதः) பிரம்மஞான மாகிய அகக்கண் படைத்தவருடைய (புத்தேः) புத்திக்கு (விஹார-ஆஸ்பதம்) விளேயாட்டிற்கிடமாய் (ஸதः) ஸத்தாகிய பிரம்மத்தைக்காட்டிலும் (அபரம்) வேறு (கிம்) என்ன உளது?

சக்ஷுஷ்மதாம் வித்யதே | —பா. பே.

**कस्तां परानन्दरसानुभूतिमुत्सृज्य शून्येषु रमेत विद्वान् ।**
**चन्द्रे महाह्लादिनि दीप्यमाने चित्रेन्दु-मालोकयितुं क इच्छेत्**
**॥ ५२२ ॥**

கஸ்தாம் பரானந்த - ரஸானுபூதி - முத்ஸ்ருஜ்ய சூன்யேஷு ரமேத வித்வான் | சந்த்ரே மஹாஹ்லாதினி தீப்யமானே சித்ரேந்து - மாலோகயிதும் க இச்சேத் || 522 ||

522. (தாம்) அந்த (பர-ஆனந்த-ரஸ-அனுபூதிம்) ஒப்புயர்வற்ற ஆனந்தச் சுவையின் அனுபவத்தை

(விஸ்ருஜ்ய) விட்டுவிட்டு (வித்வான்) அறிவாளியாகிய (க:) எவன் (சூன்யேஷு) ஆனந்தம் சூன்யமான பொருள்களில் (ரமேத) விருப்பங்கொள்வான்? (மஹாஹ்லாதினி) சிறந்த மகிழ்ச்சியைத்தரும் (சந்த்ரே) சந்திரன் (தீப்யமானே) பிரகாசிக்கையில் (சித்ர-இந்தும்) படத்திலெழுதின சந்திரனை (ஆலோகயிதும்) பார்ப்பதற்கு (க:) எவன் (இச்சேத்) விரும்புவான்?

असत्पदार्थानुभवेन किंचिन्न ह्यस्ति तृप्तिर्न च दुःखहानिः ।
तदद्वयानन्द-रसानुभूत्या तृप्तः सुखं तिष्ठ सदात्मनिष्ठया
॥ ५२३ ॥

அஸத்பதார்த்தானுபவேன கிஞ்சிந் நஹ்யஸ்தி த்ருப்திர் ந ச துஃக்கஹானிஃ | தத‌த்வயானந்த-ரஸானுபூத்யா த்ருப்தஃ ஸுகம் திஷ்ட ஸதாத்ம-நிஷ்டயா ||
523 ||

523. (அஸத்-பதார்த்த-அனுபவேன) கனவுபோல் பொய்யான உலகப் பொருள்களின் அனுபவத்தில் (கிஞ்சித்) கொஞ்சமும் (திருப்திஃ) திருப்தி(ந ஹி அஸ்தி) உண்மையில் இல்லை; (ந ச துஃக்கஹானிஃ) துன்பத்தின் அழிவும் இல்லை. (தத்) ஆகையால் (ஸதாத்ம நிஷ்டயா) உண்மையான ஆத்ம நிஷ்டையால் (அத்வய-ஆனந்த-ரஸ-அனுபூத்யா) அத்வய ஆனந்தச் சுவையை அனுபவித்துக் கொண்டு (த்ருப்தஃ) திருப்தி உடையவனாய் (ஸுகம் திஷ்ட) இன்பத்தில் நிலைபெற்று நில்.

அஸத்பதார்த்தானுபவே ந கிஞ்சிந் நஹ்யஸ்தி | —பா. பே.

स्वमेव सर्वथा पश्यन्मन्यमानः स्वमद्वयम् ।
स्वानन्द-मनुभुंजानः कालं नय महामते ॥ ५२४ ॥

ஸ்வமேவ ஸர்வதா பச்யன் மன்யமானஃ ஸ்வ-மத்வயம் | ஸ்வானந்த - மனுபுஞ்ஜானஃ காலம் நய மஹாமதே || 524 ||

524. (மஹா மதே) சிறந்த புத்திமானே! (ஸர்வதா) எல்லாவற்றுலும் (ஸ்வம் ஏவ) தன்னையே (பச்யன்) பார்ப்பவனுகவும் (ஸ்வம் அத்வயம்) இரண்டற்ற தன்னையே (மன்யமானஃ) நினைப்பவனுகவும் (ஸ்வ - ஆனந்தம்) ஆத்மானந்தத்தையே (அனுபுஞ்ஜானஃ) அனுபவிப்பவனுகவும் இருந்துகொண்டு (காலம் நய) காலத்தைக் கழிப்பாயாக.

ஒ. குண்டிகா உப. 27.

अखण्डबोधात्मनि निर्विकल्पे
विकल्पनं व्योम्नि पुरःप्रकल्पनम् ।
तदद्वयानन्दमयात्मना सदा
शान्तिं परामेत्य भजस्व मौनम् ॥ ५२५ ॥

அகண்ட-போதாத்மனி நிர்விகல்பே விகல்பனம் வ்யோம்னி புர-ப்ரகல்பனம் | ததத்வயானந்த-மயாத்மனு ஸதா சாந்திம் பராமேத்ய பஜஸ்வ மௌனம் || 525 ||

525. (நிர்விகல்பே) கற்பனையைக் கடந்ததும் (அகண்ட)-அளவு கடந்ததும் (போத-ஆத்மனி) அறிவு வடிவாகியதுமான ஆத்மாவில் (விகல்பனம்) விபரீத கற்பனையைச் செய்வது (வ்யோம்னி) ஆகாயத்தில் (புரஃ ப்ரகல்பனம்) ஒரு நகரத்தைக் கற்பிப்பதற் கொப்பாகும். (தத்) ஆகையால் (அத்வய-ஆனந்தமய-ஆத்மனு) இரண்டற்றதும் ஆனந்தமே உருக்கொண்டதுமான ஆத்மாவில் (ஸதா) எப்பொழுதும் (பராம் சாந்

திம்) சிறந்த சாந்தியை (ஏத்ய) அடைந்து (மௌனம்) மௌனத்தை (பஜஸ்வ) அனுஷ்டிப்பாயாக.

तूष्णीमवस्था परमोपशान्ति-
बुद्धे-रसत्कल्प-विकल्पहेतोः ।
ब्रह्मात्मना ब्रह्मविदो महात्मनो
यत्राद्वयानन्दसुखं निरन्तरम् ॥ ५२६ ॥

தூஷ்ணீமவஸ்தா பரமோபசாந்திர் - புத்தே-ரஸத் கல்ப-விகல்ப - ஹேதோ: | ப்ரஹ்மாத்மனு ப்ரஹ்ம - விதோ மஹாத்மனே யத்ராத்வயானந்த - ஸுகம் நிரந்தரம் || 526 ||

526. (அஸத் - கல்ப-விகல்ப - ஹேதோ:) பொய்யான விபரீத கற்பனைகளுக்குக் காரணமான (புத்தே:) புத்திக்கு (தூஷ்ணீம் அவஸ்தா) மௌனநிலை (பரம-உபசாந்தி:) சிறந்த அமைதியை யளிப்பதாகும். (யத்ர) அந்நிலையில் (மஹாத்மனு) மஹாத்மாவாகிய (ப்ரஹ்மவித:) பிரம்மஞானிக்கு (ப்ரஹ்ம-ஆத்மனு) பிரம்மத்துடன் ஒன்றுபட்டதால் (அத்வய-ஆனந்த-ஸுகம்) அத்வயானந்தமாகிற இன்பம் (நிரந்தரம்) இடைவிடாது நிலைபெறும்.

नास्ति निर्वासनान्मौनात्परं सुखकृदुत्तमम् ।
विज्ञातात्मस्वरूपस्य स्वानन्दरस-पायिनः ॥ ५२७ ॥

நாஸ்தி நிர்வாஸனுன் மௌனுத்-பரம் ஸுகக்ரு-துத்தமம் | விஜ்ஞாதாத்ம - ஸ்வரூபஸ்ய ஸ்வானந்தரஸ-பாயின: || 527 ||

527. (ஸ்வ-ஆனந்த-ரஸ-பாயின:) தன்னிடமுள்ள ஆனந்த ரஸத்தைப் பருகும் (விஜ்ஞாதாத்ம - ஸ்வரூ

